V. Thiruvarangam .42
Palamcottah

உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

# கருவூர்ப்புராணம்.

---

## கருவூர்ப்புராணவசனம்.

---

இவை

கோயமுத்தூர் வித்துவான்

கந்தசாமிமுதலியார் அவர்களாலும்

நேகமம் வித்துவான்

முத்துநாகப்பமுதலியார் அவர்களாலும்

திருத்தப்பட்டு

ஷை கந்தசாமிமுதலியார் அவர்களால்

சென்னை:

இந்து தியலாஜிகல் யந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன.

---

விரோதிகிருது ஆடிமீ

விலை ரூபா-2

உ

சிவமயம்.

# திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருக்கருவூர்த்திருவானிலை.

பண்-இந்தளம்.

திருச்சிற்றம்பலம்.

தொண்டெலாமலர்தூவியேத்தநஞ்
சுண்டலாருயிராயதன்மையர்
கண்டனார்கருவூருளானிலை
யண்டனாரருளீயுமன்பரே. (க)

நீதியார்நினைந்தாயநான்மறை
யோதியாரொடுங்கூடலார்குழைக்
காதினார்கருவூருளானிலை
யாதியாரடியார்தமன்பரே. (உ)

விண்ணுலாமதிசூடிவேதமே
பண்ணுளார்பரமாயபண்பினர்
கண்ணுளார்கருவூருளானிலை
யண்ணலாரடியார்க்குநல்லரே. (௩)

முடியர்மும்முதயானையீருரி
பொடியர்பூங்கணைவேளைச்செற்றவர்
கடியுளார்கருவூருளானிலை
அடிகள்யாவையுமாயவீசரே. (௪)

பங்கயம்மலர்ப்பாதர்பாதியோர்
மங்கையர்மணிநீலகண்டர்வான்
கங்கையார்கருவூருளானிலை
யங்கையாடரவத்தெம்மண்ணலே. (௫)

தேவர்திங்களும்பாம்புஞ்சென்னியின்
மேவர்முமதிலெய்தவில்லியார்
காவலர்கருவூருளானிலை
மூவராகியமொய்ம்பரல்லரே. (௬)

பண்ணினார்படியேற்றார்நீற்றார்மெய்ப்
பெண்ணினார்பிறைதாங்குநெற்றியார்
கண்ணினார்கருவூருளானிலை
நண்ணினார்நமையாளுநாதரே. (௭)

கடுத்தவாளரக்கன்கயிலையை
யெடுத்தவன்றலைதோளுந்தாளினா
லடர்த்தவன்கருவூருளானிலை
கொடுத்தவன்னருள்கூத்தனல்லனே. (௮)

உழுதுமாநிலத்தேனமாகிமா
லொழுதுமாமலரோனுங்காண்கிலார்
கழுகினான்கருவூருளானிலை
முழுதுமாகியமூர்த்திபாதமே. (௯)

புத்தர்புன்சமணாதர்பொய்யுரைப்
பித்தர்பேசியபேச்சைவிட்டுமெய்ப்
பத்தர்சேர்கருவூருளானிலை
யத்தர்பாதமடைந்துவாழ்மினே. (௧௦)

கந்தமார்பொழிற்காழிஞானசம்
பந்தன்சேர்கருவூருளானிலை
யெந்தையைச்சொன்னபத்தும்வல்லவர்
சிந்தையிற்றுயராயதீர்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

# சருக்க அட்டவணை.





*கோபிதாரசருக்கத்தை, கோபிதாரத்துவசன்சருக்கமென்றும்

‡ கருவூர்த்தலச்சிறப்புச்சருக்கத்தை, நகரச்சிறப்புச்சருக்கமென்றும் சிலபிரிதிகளிலிருக்கின்றன.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கருவூர்ப்புராணம்.

## பாயிரம்.

### கணபதி வணக்கம்.

இன்னதிப்பெற்றித்தொன்றற்கேற்பனவிவையென்றோது
மன்னுமப்பொருளியாவுமலைவறத்தெரியுமாறு
முன்னவன்புழைக்கைநால்வாய்முக்கணன்செக்கர்மேனிப்
பொன்னவிர்கமலம்பூத்தபூங்கழல்போற்றிசெய்வாம். (௧)

பாயலுந்திருவுமுந்திப்பாலனுந்துயிலுஞ்செங்கண்
மாயனும்வேறுவேறுதிசைதிசைமயங்கிமாழ்கத்
தூயபாற்கடலைவாங்கித்த திக்கையாற்சிதறுந்தெய்வ
நாயகற்கன்புசெய்துநான்றமிழ்நடத்தலுற்றேன். (௨)

### சபாபதி.

வேறு.

நீர்தந்தகமலமலரயனெடுமாலமரர்தருநீழல்வைகும் [றக்
போர்தந்தகுலிசன்முதலியர்பரவப் புலியுமொருபணியும்போற்
கார்தந்தகுழலிமயவனிதைமுகமலர்ந்துவிழிகளிப்பநாளுஞ்
சீர்தந்தகனகமணிமன்றுமெம்பேரொளியைச்சிந்தைசெய்வாம்.

## பசுபதீச்சுரர்.

மேவருதத்துவசித்திடைடைந்துதத்தமெய்யுணர்ந்துவிமல ஞான, மூவகையாருயிர்விளங்கிமுதிருமன்பால்வழங்குமொ ருமுத்திவாழ்வைப், பாவனைகடந்துநின்றபரஞ்சுடரைப்பசுப திநாயகனைமுன்னைத், தேவர்களிடைவைக்கருவூர்ச்சிவக்கொழுந் தையிதயமலர்திகழவைப்பாம். (உ)

## வடிவுடையம்மை.

நதிகாட்டும்புனற்கழனிவளங்காட்டவறங்காட்டுநலஞ்சே ர்வஞ்சிப், பதிகாட்டும்பசுபதியோரிடங்காட்டவலங்காட்டும் பரையைமேலாங், கதிகாடுங்கருங்குயிலையருள்காட்டுங்கய லிரண்டுகாட்டுந்தூய, மதிகாட்டுமடமயிலைவடிவுடையநாயகி யைவணங்கிவாழ்வாம். (ஙு)

## தலவிநாயகர்.

அஞ்சுளாரணியெழுத்தோராறுளார்சடையிற்கண்ட
நஞ்சுளாரணியபாகநயந்துளார்ஞானம்பூத்த
நெஞ்சுளாரணிபயந்தநிறைமதக்கவுட்டுநால்வாய்
வஞ்சுளாரணியமேவுங்களிற்றினைவழுத்தல்செய்வாம். (ச)

## முருகக்கடவுள்.

உரைதருசுருதிவேதவுபநிடதத்தினுச்சிப்
பரையருள்விழிகளிப்பப்பார்விசும்புய்யத்தோன்றி
வரைபகமுருக்கிவெஞ்சூர்மாமுதறடிந்துமுந்நீர்க்
குரைகடல்குடித்தவைவேற்குமரனுக்கன்புசெய்வாம். (ரு)

## நந்திதேவர்.

அந்திவான்பிறையுமானுமட்டமழுப்படையுமேந்தித்
தந்திவீழுரிவைபோர்த்ததனிமுதலுருவந்தாங்கிப்
புந்திமாலகலஞானபோதகவெயில்விரிக்கு
நந்திவாணிரவிநாடிநமதிருணலிவுசெய்வாம். (சு)

திருஞானசம்பந்தர்.

பொன்புனைகமலச்செல்விபோற்றுபேரெழிலூர்தூய
வன்புநல்லறமுங்கற்புமவயவமாகஞான
முன்புருவமைந்தபேதைமுற்றியவென்புக்காவி
பின்பருள்புரிந்தகாழிப்பிள்ளைதாட்கன்புசெய்வாம். (௭)

திருநாவுக்கரசர்.

சூழிமால்யானைதாழப்பிணித்தகற்றுணைந்தாழா
தாழிவாயிதப்பமேலாமைந்தெழுத்துணர்வினோங்கிக்
காழிவாழ்ஞானம்பூத்தக்கவுணியக்கொழுந்தைநட்ட
வாழிவாகீசர்வாசமலர்ப்பதம்வணங்கல்செய்வாம். (௮)

சுந்தரமூர்த்தி.

வெள்ளியங்கிரியைநீங்கிநாவலூர்மிளிரத்தோன்றி
யொள்ளியதோகைபாகன்சாதனத்தோட்டிக்குள்ளாய்த்
தெள்ளியபரவையாழ்ந்துசங்கிலிசிமிழ்ப்புற்றுசு
தள்ளியகளிற்றின்பாததாமரைதலைமேற்கொள்வாம். (௯)

மாணிக்கவாசகர்.

துன்றிருணீங்குமாறுஞ்சுடரொளிதோன்றுமாறு
மூன்றிருமறைகாணாதமுதலெழுந்தருளிப்பார்மேற்
றன்றிருஞானபாதமளித்தலுந்தனையுணர்ந்த
தென்றிருவாதவூரன்சேவடிசென்னிசேர்ப்பாம். (௧௦)

தண்டியடிகள் மற்றை நாயன்மார்.

உண்டிதானஞ்சமானார்சேடமுண்டுயர்வுபூண்ட
தண்டிதாள்போற்றிசெய்துதனிமுதல்விழியிற்றோன்றுங்
கண்டிதார்மார்புதிண்டோள்கரங்களங்கன்னஞ்சென்னி
கொண்டுதாமணிவோர்யாரேயவர்பதங்குறித்துவாழ்வாம். (௧௧)

பூதிசாதனர்.

தெண்டிரைப்புவனிவானம்பாதலந்திகழ்வோர்தம்மிற்
பண்டிருவருங்காணாதபரமனுக்கன்புபூண்டு
வெண்டிருநீறுபால்வெண்ணிலவெனமிளிரப்பூசி
மண்டிருள்சீக்குந்தொண்டர்பதமலர்வழுத்தல்செய்வாம். (௧௨)

இதுவுமது.

அக்கமாமணிவெண்ணீறைந்தெழுத்திவையடைவுசேரத்
தக்கபேரன்பினூர்ந்துதரித்துணர்ந்தவர்தம்பாதச்
செக்கமலத்துக்கேற்றபணிவிடைதிருத்தினோர்தாம்
புக்கவர்க்கேவலாற்றும்புனிதர்தாள்போற்றிபோற்றி. (௧௩)

எறிபத்தர்.

மறிவைத்தகரனுக்கன்பர்கொடுவருமலரைச்சிந்தும்
வெறிவைத்தகளிரும்பாகும்வீடவெங்கணிச்சிவீசிச்
செறிபத்தரிடையூறீர்ந்துசிவநெறிவழாதுசெய்யு
மெறிபத்தரிணைத்தாளுள்ளத்திருத்தியெம்மிடர்கடீர்வாம். ()

புகழ்ச்சோழநாயனார்.

அளவிலாநிலைநாதரருச்சேதிமமாதியாற்றிக்
களமதினோராதிர்நதசடைத்தலைகாண்டலும்பொற்
கிளாமுடிமிசைபரித்துக்கேழ்கிளரெரியின்மூழ்கும்
வளர்புகழ்ச்சோழநார்தம்மலரடிமுடிமேல்வைப்பாம். (௧௫)

கருவூர்த்தேவர்.

ஊர்ந்தனங்கருவூரன்னையுதரத்திலினியூராமை
சார்ந்தனவகருவூரென்னத்தவந்திளைத்தாற்றித்தக்கோ
ரார்ந்தநங்கருவூரெந்தையானிலையடிகள்பாதஞ்
சேர்ந்தநங்கருவூர்த்தேவர்சேவடிசென்னிசேர்ப்பாம். (௧௬)

அகம்படிமைத்தொண்டர்.

பிணித்தபூங்கொடிசூழ்வஞ்சிப்பிஞ்ஞகனினிதுவைகு
மணித்தகடிமைத்தசோதிவயங்குபொற்சினகரத்தி
னணித்தனபதிபோல்வாழ்க்கையடைந்தகம்படிமையாகப்
பணித்தகுற்றேவலாற்றும்பரிசனர்பதங்கள்போற்றி. (௧௭)

மெய்கண்டசந்தானத்தார்.

மொழிவழியொழுகுமன்பர்முனபுறுகருப்பையுற்றிச்
சுழிவழியிழியாவண்ணந்துணைப்பதமிதவைநல்கி
விழிவழியருளினேற்றுமெய்கண்டசந்தானத்து
வழிவழிவருவோர்காமர்சேவடிவணங்கிவாழ்வாம். (௧௮)

### சத்தியஞானியார்.

கதமலமவிற்றோயாசனுதினங்கருதுந்தூயர்
சிதமலரிதயவாவிமுகிழப்பினுஞ்சிவபுரக்கோ
சதமலர்வதனவாசான்சத்தியஞானிஞானப்
பதமலர்தமியேனுள்ளத்தடத்தகமுபானமைத்தாமால். (௧௯)

### புராணவரலாறு.

#### வேறு.

அரனருட்கொண்டருணந்திசனற்குமரர்க்குரைப்பவவர் வியாதர்க்கோதத், தரமொடவர்சூதமுனிதனக்குரைத்தபுராணத்துட்டகைமைசான்ற, வுரைகருவூர்ப்பெருமைபலவுயர்பிரமகைவருத்தபுராணத்திறபார், விரவுசிவகேதிரகாண்டத்து பரிபாகத்தில்விளம்புமன்றே. (௨௦)

அறையுபரிபாகத்திலீரைம்பானிருநான்குமறைந்தபின்னர், முறையில்வருமத்தியாயத்தி லுரைபெருமைவடமொழியைவிண்ணோ, ரிறையருளினேழ்குமறையவர்முதலமுதுக்குறைவோரெவருந்தென்கா, லுறைமலயவரைக்கிழமைத்தவமுனிவனிசைத்தமிழினுரையென்றூரால். (௨௧)

உரைக்குதியென்றுரைத்தசதுமறைக்கிழவர்முதலியசீருரனின்மிக்கோ, ரிரைக்குமிசைத்தமிழ்புனையிந்நூற்குறைவுதீர்த்தெடுப்பரெனுந்திரத்தாற், சருக்கமிருபஃதாலேவகுத்தகவற்பாவினமாய்த்தயங்காநின்ற, விருத்தவியல்யாப்புறுதிபயக்கநல்லோர்வியக்கவெனவிளம்பினேனால். (௨௨)

இந்நூற்றருவடசொல்வித்துழியங்குரித்தெனதுநாவினெய்துஞ், சந்தயார்தமிழ்க்கவிதைப்பணையேந்திமெஞ்ஞானச்சாகைதாங்கி, யந்தநாதாந்தவொளியாநிலைநாதன்கருணையணிகாப்பாக, வந்துநீர்வஞ்சிவனத்தொளிபூத்த புராணமெனவளர்ந்ததன்றே. (௨௩)

யாதுகாரணங்கருவூர்ப்புராணமிசைப்பதற்கிதுநாளென் னின்முன்னே, ரோதுகாதைகளனைத்துமத்தலத்திற்பாதகர் சென்றுறினுஞ்சிவன், றீதுறுவகைமுத்தராவரிஃதுண்மையெ னுந்திறத்தால்யானுங், கோதுறுதவனெய்தியுய்வதுகாரணமா சக்கூறலுற்றேன். (உச)

முத்தநிரைத்தொளிகவினுமுழுமதிவெண்குடைச்சக்கரர் மூரிமுந்நீ, ரித்தரணிபுரந்ததன்மேன்மூவைஞ்ஞூறெண்ணைந் தாமெல்லையாண்டி, லத்தர்பசுபதிநாதர்சந்நிதானத்திலருளன் பர்கேட்ப, வுத்தமநற்பொருட்கருவூர்ப்புராணநிலைநிற்கவென வுரைத்ததன்றே. (உ௫)

## நூற்பயன்.

சுருதிமறைதொடராதபசுபதிநாதன்சரிதைத்தொடர்பி னொன்று, கருதியுளங்கேட்குநர்தாமுதநியடைகுவரெனநூல் கழறிற்றென்று, னிருமலராயவைமுழுதுஞ்செவிப்புலனுக்கமு தமெனநிறையநல்கிப், பருதியெதிரிருளின்மலவிருளிரிப்போர் பெறும்பயன்யார்பகரற்பாலார். (உசு)

## அவையடக்கம்.

அருள்விரவுசுரபிதருசராசரங்களனைத்தினையுமறிவுநெஞ்ச, மொருவொருபுன்மாப்படைப்பலென மனமுன்னுதன் மானுமு ரவுநூலிற், பொருவிலர்சொற்றிடுங்கருப்பபுரிவடசொற்புரா ணத்தைப்பொதியவெற்பின், மருவுசெழும்பசுந்தமிழின்வகுத் துரைப்பனெனத்துணிந்துமதித்ததம்மா. (உஎ)

மையறுநூற்கடறினைத்தாகமத்துறையிற்படிந்தமதிவல் லோர்முன்னர், தையலலங்காரவதிமுலைமுகட்டிற்புணர்பெரு மான்சரிதைவீறல், வெய்யவன்புல்லியசொல்லும்விழுமியவா ம்விழுமியசெல்வத்தின்மிக்கோர், செய்யபொருண்முடிதகினு ங்கைக்கொளுவார்ப்பொருளின்சிறப்பான்மன்னே. (உஅ)

வேறு.

யானைமுதலடுங்களத்தினெறிபத்தர்நெடுங்களத்தின்
மானவடிவாளிடத்தான்மகிழும்வடிவாளிடத்தான்
கானுறுமான்பொருந்தத்தான்கரங்கொளுமான்பொருந்தத்தா
னானகர்வஞ்சியானடையிலருள்வஞ்சியான். (உக)

தூமொளிமேவிரும்பரசன்சுரரயன்மால்விரும்பரசன்
காயுவரிவிடமிசைந்தான்கௌரியுறவிடமிசைந்தான்
றீயர்புரம்பொருவில்லான்றேவர்தமிற்பொருவில்லா
னய்கருவூராதியானிசைகருவூராதியான். (௩0)

ஆணிலையாரவிர்துவசரலரவன்மாலவனகந்தை
யாணிலையாரழலுருவமருவிநிமிரணிகருவூ
ரானிலையாரடிகளுக்காளாவீர்காளடன்மேதி
யாணிலையார்கவர்நெஞ்சுலடுதொழிற்காளாகீரே. (௩க)

பாயிரம் முற்றுப்பெற்றது.



# வராககிரிச்சருக்கம்.

வேறு.

நீற்றுவாலொளிமேனியின்பாலொளிநிறைவெள்
ளேற்றுவார்கொடியுயரியவிறையவன்சரிதை
சாற்றுவாய்மையன்சூதமாமுனிவரன்றவங்க
ளாற்றுவார்திகழ்நைமிசாரணியத்தையடைந்தான். (க)

அடைந்தவேலையிற்சவுனகராதியாமுனிவர்
மிடைந்துசென்றெதிர்ந்தீஇக்கொடுமிகவளவளாவி
யுடைந்தவார்கடலொலித்தெனவேதமெடுத்துரைத்துக்
கிடந்தவன்பொடுகொணர்ந்துதம்மிருக்கையிற்கெழுமி. (உ)

ஆயிடைத்தவிசேற்றிநின்றருக்கியமுதவிச்
சேயிடைப்படர்கவலையின்வருத்தங்கடீர்த்து
நீயிடைப்படயாங்கள்செய்தவமெனநிகழ்த்தித்
தாயிடைப்படாரினியநன்முகமனுஞ்சாற்றி. (௩)

வேதநூற்கடற்கரைகண்டவியாதனேயனைய
சூதமாதவசுதைமதிக்கண்ணிசூழ்வேணிப்
பூதநாயகன்புண்ணியபுராணத்திற்போக்குங்
காதலோமிகவுடையயாங்கழறலொன்றுளதால். (௪)

நன்றுசொல்லினீர்நனிதவமிழைத்துமுக்குறும்பும்
வென்றுநாற்பொருண்மேற்படுகேள்வியின்மிக்கீர்
மன்றுளார்புரிவைதிகசைவத்தின்வழியி
னின்றுளாரலால்யாவரேகதியிடைநிலைப்பார். (௫)

வேறுதேவுளனுயர்கதிதருமெனவிரும்பி
யூறியாவையும்யாரையும்வந்துழியொடுங்க
வீறுகாண்பவன்றோற்றுவித்தளிக்குவனென்று
லாறுசேர்சடிலத்தனேநித்தனென்றறிதிர். (௬)

சிவனதுண்மையைந்தெழுத்துமேதிகழ்திருவெழுத்து
சிவனைநோக்கிநின்றாகியதியானமேதியானஞ்
சிவனதன்பருக்காட்படுஞ்செல்வமேசெல்வஞ்
சிவனதக்கநீறணிந்திடுஞ்சின்னமேசின்னம். (௭)

அங்கணன்றலத்தாற்றியவறங்களேயறங்க
டிங்கள்வேணியன்சந்நிதித்தீர்த்தமேதீர்த்தம்
புங்கவன்றனக்காற்றியபூசையேபூசை
சங்கரன்றனையேற்றியசரிதமேசரிதம். (௮)

அன்னவாகலாலவிர்மதிக்கொழுந்தமுதிறைக்கும்
பொன்னவாஞ்சடைப்புங்கவன்சரிதையின்முதியோர்
சொன்னவாறுகேட்பதுமுயன்றீருளந்துணிவா
லென்னைநீர்வினவியதனைமொழிமெனவிசைப்பார். (௯)

வாதராயணனருண்மொழிவழிபயில்கேள்விச்
சூதமாதவசுடர்மணித்தொகுதியுமகிலுஞ்
சீதவார்பொழிற்சிகரியிலருவிகொண்டிழியும்
வேதநீடுருவாயதோர்வெள்ளியங்கிரியில. (௧௦)

மாலயன்புரந்தரன்றவம்புரியுமாமுனிவர்
மேலவானவாதானவாவிஞ்சையரியக்கர்
நூலினுண்ணுணர்வுடையவர்பூசுரர்நோன்மை
சாலுமாதிரக்கிழவருஞ்சென்னிதாழ்ந்திறைஞ்ச (௧௧)

நிறையுமன்புடன்சனகருநெக்குநெக்குருக
வறைதரும்புகழ்ச்சனந்தரரஞ்சல்திருத்த
மறைவனந்தருசனாதனர்வணங்கிவாழ்த்தெடுப்பக்
குறைவருஞ்சநற்குமரருட்குழைந்துகைகுவிப்ப. (௧௨)

உலகெலாந்தரும்பரம்பரையொருமருங்கிருப்ப
வலகினூன்மொழிக்குமரவேணனந்தலையமர
நிலவுநீடுதத்துவம்புணர்ந்தகன்றுநின்மலமா
யிலகுபேரொளிக்குள்ளொளியாகியவிறைவன். (௧௩)

கமைத்தவம்புரிமயன்கண்டுகேற்கவுமரிதாச்
சமைத்தபொற்சினகரத்திடைத்தாபதருளம்போ
லமைத்ததூயவத்தாணிமண்டபத்தினுளரிமா
ணிமைத்தமாமணியாதனத்தினிதுவீற்றிருந்தான். (கச)

தலைவன்மாமணியாதனத்திருந்துழிதலத்தின்
றொலைவில்கேள்வியன்சநற்குமரன்றெழுதெழுந்து
நிலையினிற்றலுந்திருவுளத்துணர்ந்தருணிமலன்
கலையின்றுணர்நந்திபாற்கடைக்கணோக்கருளி. (கரு)

வருகநந்தியாம்வைகுநற்றலங்களும்வளனு
முருகுமனபினன்சநற்குமாரன்றனக்குணர்வு
பெருகநீயறைகுதியெனப்பிஞ்ஞகனருளா
லருகணைந்தவம்முனியொடுந்தனதிடனணைந்தே. (கசா)

எந்தைநின்னுழையருள்சுரந்திசைப்பதற்கியைய
முந்தையெத்துணைத்தவமிழைத்தனன்முனியென்றுச்
சிந்தைவைத்துநற்றுனங்கடெளிவுறவோதி
விந்தைசேர்தலப்பெருமையும்விளம்பமேயினனால். (கஎ)

ஓதுதொல்பதியவற்றினுளுதியர்கோனாட்டின்
மீதுயர்ந்தவாம்பிரவதிநதிக்கரைமிசையிற்
றுதுபோதுமிழ்வஞ்சுளாடவியெனச்சாற்று
மாதிமாபுரச்சிறப்பினையன்றுரைத்தனனால். (கஅ)

அம்மநுண்பொருளதன்பயனகந்திளைப்பரிதா
லெம்மனோர்புலன்றெளிவுறவிரித்தினிதெவையுஞ்
செம்மையாலொருபொருளிருகாற்செப்புகென்றார்
மும்மையுந்தெரிசவுநகர்முதலியமுனிவர். (கக)

சொற்றவாசகங்கேட்டலுஞ்சூதமாமுனிவன்
முற்றநோற்றமாமுனிவிர்நீராதலான்முதல்வ
னுற்றவாதிமாபுரித்திறனோதுகென்றுரைத்தீர்
மற்றையார்நுமக்கொப்புளார்முனிவரின்மன்னே. (உO)

தீருதற்கரும்பாவங்கடீரும்வெண்டிரைசூழ்
பாரினுட்பெருந்திருவரும்படித்தமைகேட்பிற்
சாருதற்கருங்கதிவருஞ்சத்தியமென்றால்
யார்கொலத்தலக்கதையினைவரையறுத்திசைப்பார். (௨௧)

இன்னணஞ்சிலவுண்மைகள்பயக்குமாறியம்பிப்
பன்னருந்தவவியாதனைப்பன்முறைபரவி
யன்னவன்பதநினைந்தவனுதரம்பெருகிச்
சொன்னவாறுகேட்குதிரெனச்சொல்லுகின்றனனால். (௨௨)

வேறு.

புனிதவெண்ணீறுநிலவுதல்போலப்புனிற்றிளம்பிறைநிலாவிரிக்குந், தொனிகெழுமந்தாகினிநனிபுனையுஞ்சுடர்முடியடிகளையிறைஞ்சிப், பனிவரைமேருவுயரியகயிலைப்பருப்பதமெனப்புகழ்நிறுவித், தனிநெடுங்கவிகைநிழற்றுசேரலர்கோன்றங்கியகொங்குநன்னாடு. (௨௩)

முதியவர்தொழும்பேரூர்சதுமறையோர்முறைதொழுந்திருவவிநாசி, வதிதருபவானிகூடல்செங்கோடுவளர்கொடுமுடிநெடுமோயன், விதிபுகழ்முருகன்பூண்டிவெள்விடையோன்வெஞ்சமாக்கூடலுமேனைப், பதிகளுமுளவந்நாடுதன்றென்பாற்பன்றிவெற்பொன்றுளதன்றே. (௨௪)

குடுமிதொட்டிழியுங்கவிழ்தலையருவிதாழுதல்குளிர்பசும்பொதும்பர், நெடுமலர்பொதுள்பைந்தளிரிளங்கொம்பர்நீணுதிநிரைநிரைபொதுப்ப, நடுமுகடகல்வான்புழைபடுவழியினறுமணிகொழித்தெறிதிவலைப், படுதிரைசுருட்டியலைத்தெழுங்கங்கைப்பாய்புனலொழுகுதன்மானும். (௨௫)

கானலந்திகழ்தண்டலையதன்புறனுங்கழிபெருமுழையுளவேனு, மூனலனுகருமுழுவைவெம்பேழ்வாய்பிலமெனத்திறந்திடுமொருசார், தேனலன்பருகிப்புனமெறிந்துழுநர்சிறுகுடிப்பெரியதொல்வளஞ்சே, ரேனமால்வரைதானென்னினும்யானைமலையெனத்திரிதருமொருசார். (௨௬)

எழிலிகண்டேயிலுங்குலட்டயன்மேயுமிரலைவானுயர்முகடணையு, முழுமதிக்கரையைப்பிணையெனத்தாவமுரட்புரிக்கோடுசென்றுரிஞ்சிப், புழைபடுவழியினிழிசுதையமுதம்பூங்குறக்கொடிச்சியர்தினமு, முழுகலுமுகந்துநுகர்தலும்யாவுமதுவெனின்மொழியுமாறெவனே. (உ௭)

நிறையரமகளிர்பொன்னகர்துறந்துசாரலினிலைந்தலர்கொய்வார், பிறைதவழ்சாரற்கொடிச்சியர்விசும்பிற்பெயர்ந்துகற்பகமலர்கொய்வார், குறைவறுதிருவுந்தொழிலுநீல்லெழிலுங்குணங்களுமொருங்குளவிவரை, யறிவரிதெனினுங்கண்ணறிவிக்குமன்றிமற்றாகொலோவறிவார். (உ௮)

தளர்நடைத்தென்றறிரிவனமொருசார்சந்தனச்சோலைகளொருசார், கிளர்பசும்புயல்கண்டேயில்வனவொருசார்கின்னரமிதுனங்களொருசார், வளரமைதரளஞ்சொரிவனவொருசார் மதமிபஞ்சொரிவனவொருசா, ரிளகுதேனிழியுமிருலினமொருசாரிறவுளர்குரம்பைகளொருசார். (உ௯)

பலவிதஞ்செறிதாபரங்களினாலும்பஃறலைமுடிகளினாலுங், குலவுபூஞ்செடிப்பைங்கொடிகளினாலுங்குகைகளின்றொகைபலவானு, மலமடைநாபாறறெறிதல்ஞலுமாழைநுண்ணுதிபலவானு, முலவுசீர்வாலகில்லியரென்னுமொருவகையிருடிகளாலும். (௩௦)

கண்ணுறக்காண்போருண்ணிகழ்பாவங்கலந்திறவரந்தராலானும், புண்ணியச்சாந்தங்கண்டிகைபுனையும்புனிதமாமுனிவரரானு, மெண்ணருங்கோடிசித்தர்களானும்யாவையுந்தருந்திறலானுந், தெண்ணிலாமுடியோனுறைதலானுந்திப்பியமலையெனத்திகழும். (௩௧)

வேறு.

முன்பதன்வரன்முறைமொழிந்துநூல்பயி
லன்பினன்காசிபன்மரபிலாயவன்
மன்பதைபரவுசீர்வராகமாமுனி
யென்பவன்றுறவினிலேதமில்லவன். (௩௨)

வாலியவடிசிலோர்பாதிமற்றையோர்
கால்வயினறும்புனலயின்றுகால்விட்டுக்
கோலியவிரதமேற்கொள்ளும்பான்மையா
லேலுறுமிரதர்காணெனவுமெய்தினோன். (கங)

ஆற்றருநோன்புகளாற்றியாடல்வெள்
ளேற்றினன்றிருவருட்கேற்பச்செய்குவன்
சாற்றருநான்மறைக்கடவுட்டாழ்ந்தவ
னீற்றணியுயரியநெறிவழாதவன். (கச)

சரியையுங்கிரியையுந்தவறிடாதிழைத்
தரியஞானந்தனையடைகுவானதற்
குரியயோகங்களையுஞற்றவேண்டினன்
விரியுநான்மறைவழிவியந்துநோக்குறு. (கரு)

பூவருநான்முகன்புகழவிண்மிசைத்
தேவருமதிசயந்திளைப்பச்சிந்தைதேர்ந்
தோவருமருந்தவருவகைமீக்கொள
மேவருமக்கிரியேவினானரோ. (கசு)

தேங்கருடதும்பியசிவமுணர்ந்தவ
னீங்கருகுற்றிலைநெடியவன்னியின்
பாங்கரிற்பரசிவயோகலிங்கமொண்
ருங்கமைத்தருச்சனைவிதியினாற்றியே. (கஎ)

சொலற்கருந்தவமுனியாற்றுந்தூய்மையால்
வெலற்கருங்காமனைவென்றுகண்ணுதல்
மலர்க்குழலுமையுடன்விடையின்வந்துள
நிலைப்புறுமிருந்தவன்முன்புநின்றனன். (கஅ)

கண்டனன்பரவசக்கடலுட்டாழ்ந்தனன்
கொண்டனன்புளகம்வாய்குழறிமாமுனி
யண்டருங்காண்பருமமுதையள்ளிநின்
றுண்டனன்கண்களாலுவகைபூத்தனன். (ககூ)

அங்கிலையாவினீடுவசவர்தண
னுன்னிலையாமுவர்தனமுவப்பிலா
யென்னிலையாற்றவமிழைத்தல்சாற்றெண
முன்னிலையாச்சிலமொழிவதாயினன். (௪௦)

அய்யநின்றொண்டருக்கடியனாகலி
னுய்யநின்சரியையமுனூற்றிபெற்றுடன்
றுய்யநின்சேவடித்துணையிற்றூய்மலர்
செய்யருங்கிரியையுந்திளைப்புற்றேனினி. (௪௧)

அருள்வழியுனதுதாட்கமலவாய்மலர்ப்
பொருள்வழியடைதரும்பொருட்மொசிலாத்
தெருள்வழியோகமுட்டெளியுமாறெனக்
கிருள்வழிதீாதரவியம்புகென்றலும். (௪௨)

பூவைபங்கினனருள்பூத்துமாதவத்
தேவரிலெழுவரிற்றிசைமிகவெண்மரின்
மேவருபுலனொரீஇவிளைக்குமோனபிறை
னீவலியுடையையாநிகழ்ந்ததுவாமென. (௪௩)

வேறு.

மருவுமியமமுடனியமம்வயங்காதனம்வாயுவின்கூற்றுற்
பெருகிநிலைத்தவாயாமம்பிரத்தியாகாரம்பற்றி
விரவிவருதாரணைகருணைவிளைதியானஞ்சமாதியெனப்
பொருவினமுனிவவட்டாங்கயோகம்வகையிற்புகன்றன்பால்.

விரியிலுரைப்பக்கேட்டிசதுவேதமுனிவபிழைநூறு
புரியுமவர்பாற்பீடையிளைப்புரியாதிருத்தல்பொச்சாப்பை
யொருவியுரியபொருளுரைக்கலுயர்தேசிகனையாலயத்தைக்
கருதிநவிற்றுபொய்யினைமெய்யெனவுட்கொடுகேட்டுரைகழறல்

மிடிவந்துறினுமேலோர்பாலெவர்க்குமாறுவிளையாமை
முடியவுயிருனருந்தாமைமுடிப்பானெனினுமுயறவங்கள்
படியினொழுங்குவழுவினர்பாற்பருகாதொழிதலருகமலா
வடிசில்சுவைகளவைபலவுமயிலாதிதயமருவருத்தல். (௪௪)

தனதுமுல்லைமனைக்கிழத்திசயனத்தெய்தித்தழுவினுமே, நனைமென்குழலிபுனைதொடிக்கைநறு மெல்விரன்மெய்தொடினுநனி, மனமதுவர்த்தல்புணரினுந்தான்விலக்குநாளின்மருவாமை, சினவுகொடுதெற்றெறவரினுமவன்பால்வைரந்திளையாமை. (சஎ)

மகளிராசைபொருளாசைமண்ணினாசைமறந்தமன்றி
நிகழுமாறுதுறவறங்கைவரினுமொருவனிகழ்கருத்து [ற்சென்
மகனில்வாழ்க்கையொழுக்கமுமாராய்ந்தாய்ந்தகன்றபின்னரி
நிகழ்வுநிரப்புசித்திடன்மற்றியமநியமமிசைக்குதுமால். (சஅ)

வெகுளியறுகையறிவிலார்தம்மையொறுத்துவிளம்புகினுந்
தகுதியொடுமண்ணாற்புனலாலுடலின்மாசுதனைமாற்றல்
பகுதிபெறத்தெண்ணீராற்றற்பணஞ்செய்திடுதலாரியனை
மகிழ்மாதவரைவணங்கியவர்வழங்குமேவற்றலைநிற்றல். (சகூ)

மின்னாரொளிவாளுறைகழித்துவிரைவினெதிரியெதிர்புகுந்
தன்னாருயிரையீர்ந்திடினுஞ்சலியாதாகிப்பொறைநிறுவி [து
யின்னாமதுமுதிர்கொடுநோய்வினையினீட்டமிரிந்தவென
முன்னாநிற்றலெஞ்ஞான்றுமுனிவுநீங்கிநெறிமுயங்கல். (ருo)

சீதநதியிற்புனிதமுறத்தினமுங்குடைதல்சிவாகமங்க
ளோதன்மறையின்வழிநிற்றலுளத்திலுவகைபூத்திடுதல்
கோதிலரியமாதவங்களிழைத்தல்குளிர்பூந்துணர்கொடுநம்
பாதமலரின்வழிபடுதனியமம்வேதபாரகனே. (ருக)

வேறு.

வேற்றொலியச்சமிசைமுதலாயவிரவுறுதமலமேபெறுதற், கேற்றதோரிடத்தில்வரிப்புலித்தோன்மானிலகுதோற்றவிசின்மீதிருந்து, சாற்றுமாதனமற்றவைபிறவிருப்பத்தனவலக்காற்புறமதனை, யாற்றலினிடக்காலுள்ளுறக்கவானிலமைத்துளமலைவுறுதமைந்து. (ருஉ)

வலதுசெங்கரத்தின்புறமிடக்கரத்துள்வைத்தபின்வடதிசையாத, லலதுபூருவதிக்காயினுநோக்கியியற்றுதல்பதுமவாதனந்தா, னிலகுமாயாமமெண்ணிரண்டெண்ணான்கிரண்டெனவியையுமாத்திரையு, ளுலவுயிர்வைத்தமுறையினைச்சுழுனைபிங்கலையிலைவகளினுறவே. (ருங)

நிரப்பியேகும்பித்துடனிரேசிக்கமீள வும்பிங்கலைநிரப்பி, விருப்புறக்கும் பித்திடைவழிபோக்கலன்றியும்விளம்பிலாயாமங், தரிப்புறுசகற்பமகற்பமென்றிரண்டாஞ்சகற்பமதுறுதியானத்தி, லருத்திவைத்தியற்றலதுபலனுகுமகற்பமற்றவையலாதியற்றல். (ருச)

ஐந்தெழுத்தறைதல்சூத்திரரேனைமூவரோமனுவறைந்தியற்றன், மந்திரவழக்கமாத்திரையினனும்வகுக்குறுமெழுத்தினுக்கங்ஙன், றந்தமாத்திரையேகொளல்விதிபிறழ்ந்துசாற்றுமாத்திரைகளுமுளவா, லிந்தவாறிருப்பக்கும்பகாதிகள்விட்டியற்றினுமிரியும்வெம்பாவம். (ருரு)

கைத்தறித்தித்தல்புளிப்பனதிரளக்காய்ந்தபாலுருள்சுரையாதி, துய்த்திடாதருந்தறய்ப்புளியுதரபந்தமேற்றுவக்கிமெய்யாவி, யுய்த்திடற்கொருக்கலொருத்திடாதருந்துமளவுறும்பாதகமூட்டி, வித்தவன்பாவம்விளிவருந்தவனமுளவெனிலிளவெரீர்மிசைக. (ருசு)

இன்னணம்யோகமியற்றிலாயாமமினிமுனிபிரத்தியாகார, மன்னுமோரைந்தும்வினைவுறுமீட்கைதாரணைமனத்தையிந்திரியங், தன்னுழிமடக்கிநமதடிவைத்தல்சாற்றுதுந்தியானநான்மறையும், பன்னரும்பதத்தினினைவுறநிறுவிப்பார்த்திடல்சமாதியும்பகர்தும். (ருஎ)

இலங்குமாதாரமெனநிராதாரமெனவிலவையிரண்டுமேயோக்க், நலங்கொளாதாரநவிற்றியதியானநனியிராப்பகலறுமிடத்துப், பலன்றருநமதுதாண்மலருயிருட்பார்த்திடலதுநிராதாரம், மலர்ந்தநற்சமாதியடைந்திடிற்சித்தியாமனைமைம்புலாதிகளும். (ருஅ)

எண்வகைச்சித்தியடைந்திடுஞ்சமாதியெய்திஞேரேனமாமுனிவ, நண்ணுமிப்பொருப்பியோகவெற்பாதினொன்றினுண்டாயதுநனுகிப், பண்ணருந்தவங்களாற்றியோகினைநீபருக்கின்மாலயனிமையோரு, மண்ணருஞ்சமாதியடைந்துமுத்தியினையடைகுவையெனப்பகர்ந்தருளி. (ருகூ)

வேறு.

மேவரும்யோகினுள்விளைவுபோக்கலா
லேவருமகிழும்யோகீசனின்பெய
ரோவறவாழியென்றருளியும்பர்கோன்
காவலர்திகழ்திருக்கைலைமேவினான். (கo)

விடையவன்போதலும்விடைகொண்டெம்முனி
யிடையறயோகினையியற்றிமுத்தியை
யடைதலாலவ்வரைப்பெருமையாய்ந்துளக்
தடையறயாவரேசாற்றும்பான்மையார். (கக)

அராகமற்றரன்பதமகத்துட்காண்பவ
னிராகநீண்மறைதெரியேனமாதவன்
பராகநீறணிபவன்பரித்தலாற்பெயர்
வராகமாகிரியெனவழங்கிற்றெங்கணும். (கஉ)

சுடர்முடிக்கேழன்மால்வரையின்றேற்றமுந்
திடவரைசார்ந்தமாமுனிவன்றிண்மையு
மிடனுறக்கிளத்தினமிலங்குவெண்டிரை
படருமாம்பிரநதிப்பான்மைபேசுவாம். (கஙு)

வராககிரிச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் உ - இ, திருவிருத்தம் - கச.

---

## ஆம்பிராவதிநதிச்சருக்கம்.

---

வைத்தமனைவியரொக்கன்மரபினர்மக்களிணையினர்பக்கலே
மெத்தவொழுகியவித்தைவழியில்விருப்பானியுறுசித்தமே
பத்தர்பரவுகருப்பபுரிவருபச்சைசலடிவொருபக்கனார்
நித்தர்பசபதியத்தர்பதமலர்நித்தநினைபவர்முத்தியே. (க)

வேறு.

அந்தவ்வரைச்சூழலினுமேணிமாநகருமொருகாலஞ்
சிந்துபுனற்கார்மழைதிறம்பத்தெருமந்துயிருளுணங்குதலு
மெந்தைகைலக்கிரிமிசையினிமையம்பூத்தவுமைமென்றேட்
சந்தமொழுகுகுவவுமுலைத்தலைவிசசிவாண்முகநோக்கி. (உ)

மதிவாணுதன்மாமதுரமொழிவ னிதைகேழல்வரைசூழ்ந்த
பதியாவுளமற்றவைமுழுதும்பாறவருடமுயிருலந்த
விதுநாண்மருவியவ்வசலத்தெழுநீர்காறுநினதுகலை
நதிநீருவம்வரவமைத்துநணுகுவாயிவ்வழியென்ன. (௩)

தண்கூவிளைசூழ்சடாமௌலித்தலைவன்வாய்மைதலைவிபரித்
தெண்கூறுறுபிருங்கிமுதலியனகணங்களிறைஞ்சிவரப்
பண்கூர்கனிவாயரமாதர்பாவையாயம்பரவிவரத்
திண்கூர்கரிகேசரிதிரியுஞ்சிகரிவராககிரிமருவி. (௪)

ஞாலமுய்யத்தனதருளைநதியினுருவாய்வரஞாலே
வேலைகாறுமமைத்தனளவ்வேளையிரவுமாமுனிவ
ரேலமாவினுருவமெடுத்திழைத்தாரிழைத்தற்கரியதவங்
கோலமடவார்கொடிவடிவங்குலவிநாரந்நதிசூழ. (௫)

தானுயுலகமளிப்பவளுஞ்சயிலமொருவிக்கைலையின்க
ணுளதுநாட்டொடங்கியருணதியையம்பாநதியென்றும்
வானும்பிரநீழலின்வருதலாலாம்பிரமாநதியென்றும்
நானுவிதமாநவிலுவரந்நதியின்வளன்யார்நவிலுவார். (௬)

கொர்ப்பபுரிவந்தனைபுரியக்கிளர்வான்சுரபிநெடுங்கைலை
வெற்பையொருவிவராககிரிமேவிநதிதீரத்தலங்க
ளற்பொடருச்சித்தாண்டாண்டேற்றரியதவங்களாற்றுதலாற்
பொற்புமலியாம்பிரவதியாம்பொருளையெனவும்புகலுவரால்.
வேதமுனிவீரதன்பெருமைவிரைமென்கமலவிரிஞ்சனுக்கு
மோதவரிதந்தளிர்மேனியுலவுமதிவாண்முகவுண்கண்
மாதுபாகன்முகையவிழ்ந்ததாதுதூறுமலரிதழிப்
போதுவிரவுசடாமௌலிப்புனிதநீரிற்புகழெய்தும். (அ)

வானமுறைதெள்ளமுதமொலிமலிநீருருவமாகிவரை
தானேரேணியாயிழிந்தசைலப்பொருள்யாவையும்வரன்றி
யீனமறமுன்பயந்தபயோததியைக்காணுவேற்றிறைஞ்சப்
போனதெனமால்வரைதொடங்கிப்புணரியளவுசிமிருமால். (க)

பஞ்சானனங்கொண்டடவுழுவைநெடுந்தோல்போர்த்து
ப்படர்சடைசீ, ரெஞ்சாதணிந்துமானேந்தியிமிழ்தேனிதழிம
லர்புனைந்து, மஞ்சார்பவ்வவிடமிசைந்துமால்வெள்விடைமே
ற்கொண்டெழுதிப், பிஞ்சார்சடிலப்பெருமானைப்பொருவியாறு
பெருகுமால். (கo)

ஆருந்துதிக்கையாலொருபாலணிகோடேந்தலால்யானை
சாருமுகங்கொண்டரவுமணிதரித்தலாற்றண்டமைசெவியாற்
சேருந்தானம்பகர்தோடைமிசையிற்செறிதலால்விசும்பும்
பாரும்புகழைங்கரநால்வாய்முக்கட்பகவனிகருமால். (கக)

குன்றுதொறுநின்றுடிவள்ளிக்கொடிசூழ்ந்துயர்வான்குல
வேழந், துன்றியாறுமுகங்கவினித்துணர்ப்பூந்தோன்றிவெட்
சிகுரா, மன்றலகமழ்பூங்கடம்புவெள்வேலவயங்கிமஞ்ஞைமே
ற்கொளலா,லென்றும்வளமைதிகழ்ந்திமையாவென்றிவேலோ
ற்கியையுமால். (கஉ)

மூல்லைமணந்துபாறயிர்நெய்முகந்துமுருகுகாற்றுதுணர்க்
குல்லைபுனைந்துபுள்ளூர்ந்துகுளிர்பூம்பூவையுருவெடுத்து
மல்லன்ஞாலமளந்துமருதூடுதவழ்ந்துவலையணிந்து
பில்குதிரைப்பாலுததியிற்கண்வளர்ந்தபீதாம்பரற்பொருவும்.()

செங்கோல்வெள்ளோதிமமுயர்த்துத்திசைநான்கினுந்த
ன்முகம்வைத்துக்,கொங்கார்செழும்பொற்றகட்டகட்டுப்பொ
குட்டுக்கொழுந்தாமரைவிரவிப், பொங்கார்கலிசூழ்கிடந்தநெ
டும்புவனநனிபேர்தரப்படைத்துச், சங்கார்தடக்கைமாலுந்தி
தரவந்துதித்தோன்றனைமானும். (கச)

தேவதாருவரசிருக்கைதிகழ்ந்துசிறுகட்பெருங்கோட்டுத்
தாவிலொருத்தலூர்ந்துசெம்பொன்றழுவுதானநிலைவைகி
மேவுமணிவச்சிரம்படைத்துமேலோர்பணியும்படிகுலவி
யோவிலாதசயந்தனையேயுதவிவாசவனையுறழும். (கரு)

பொருவிலாரமுமிழ்கழையுள்வாங்கிப்பொறிமாறுமிறுத்து
மருமென்கமலநறுங்குவளைமௌவல்குருந்தமசோகுமணஞ்
செருகுமலரம்பிடைமிடைந்துசிறுகாலூர்ந்தார்கலிசூழ்இப்
பெருகுமீனர்துவசமுறக்காட்டிவேள்போற்பிறங்கிடுமால். ( )

வேறு.

முன்புளநெடுங்கரைகரைந்திறமுனிந்தே
கொன்பணிலமுந்தரளமுங்கொடுநடந்தே
தன்பரிவினாலழிவுறாமைதலமுய்யப்
பொன்கெழுமுவாணிமிர்புதுக்கரைசுமக்கும். (கஎ)

வேங்கைமலர்செண்பகமிடைந்தொளிருமென்பூ
வோங்குபுநெருங்கிமுகிலூடுசினைநீடு
மாங்கனியுமிழ்ந்தநறவட்புனலின்மேலிட்
டோங்குதிரையாம்பரவதியென்பதுபுதுக்கும். (கஅ)

வண்பொழிலின்மாநறவமார்ந்திவரித்தும்பி
பண்பயில்வயர்ந்துபறவைத்தொழின்மயங்கி
விண்படர்தலின்றிநதிமீதுசெலலாற்க
ளுண்பவருய்யார்சிறிதுமுண்மையெனல்காட்டும். (கசு)

வேரிறவருந்தருவின்மீதுகுருகொன்று
நீரினிறையாற்சுழியினாழ்தல்வினைநீடிச்
சாருதலெண்ணாதுபிறர்தம்முயிர்வதைப்பச்
சேருழியலக்கணுறுதீமையினைமானும். (உ0)

மண்டுபுனல்வீழ்கரியைவெளவியொருபுள்ளுத்
தண்டலிலவாயிவர்தல்சக்கிரியைக்காணூஉக்
கொண்டபகைதீர்கெனக்கைகூப்பிக்கடருழ்ந்த
பண்டைவரைவிண்டனிபறப்பதுகடுக்கும். (உக)

ஓடுபுனலூடுபுலியூருவனதவழ்வ
பாடுநனிதத்துவபறப்பனநடப்ப
நீடுநிலைமிற்பணைநெருங்கிவரலெங்குங்
காடுநடைகொண்டெனல்காண்பனகடுக்கும். (உஉ)

ஓரொருமருங்குபுனலோங்குபதின்காதம்
பாருறுபைங்கூழ்முதலபாய்திரையிரங்க
வாரமொடெழுந்திவலையால்விளையுமென்றால்
யாரிலகுகுரூதநதியின்றிறனிசைப்பார். (௨௩)

தோடிலகுகோதைமணியாரநகைதுப்பு
நீடுமிதழ்தூயவிளநீர்முலைநிகர்ப்ப
மாடமலிசோழவளநாடுதிகழ்பொன்னிக்
கோடிலகுசேடியொடுகூடிவிளையாடும். (௨௪)

வேறு.

பல்வளனின்னதிகழுமாண்பொருனைப்பாங்கரினறுமணி கொழித்துக், கல்லெனவொலித்துநெடுந்திரைசுருட்டுங்கரை மிசைத்துறைதொறுங்கவினு, மல்லன்மாஞாலமுழுதொருங்கு ணர்ந்துவணங்குவிண்டவழ்மதிக்கண்ணிச், செல்வநாயகன்வீ ற்றிருக்குநற்றானமவற்றினுட்சிலதெரிந்துரைக்கேம். (௨௫)

துறுமயிர்க்குன்றிமணிவிழிக்கேழற்சுடர்ப்பெருங்கிரியை முன்படைந்த, மறுவறுதவத்தின்வராகமாமுனிவன்மாநதிக் கரையினோர்சோதிக், குறிநிறீஇநறியகொழுமலர்சிதறிக்கும் பிடும்யோகலிங்கத்தை, யறிவுமீதூரப்பணிபவர்யோகத்தடைக் துபேரின்பவீடடைவார். (௨௬)

வானவர்முனிவரிருடியர்சித்தர்வாலகில்லியரொடுமியக்கர்
தானவர்பிரமசாரியரில்லஞ்சார்ந்தவரில்லுடன்வனத்துப்
போனவர்முழுதுந்துறந்தவர்யோகர்பூசுராநிருபரிலைவ
ரானவர்சேரனுதியர்சூதமாநதியாதியினமைந்து. (௨௭)

மணிகளிற்பொன்னில்வெள்ளியிற்சிறப்பவடிவினிலிரதவா தத்தி, லணிகிளர்சிலையின்மணலினீடுருவினமைத்தனவளப்பி லவிலிங்கம், பணிவதற்கெளிதன்றரியமாதவங்களாற்றிடிற்ப ணியலாம்பணிந்தாற், பிணியிடையூறுமூப்பொரீஇப்பிறவிபெ யர்த்துபிஞ்ஞகன்பதம்பெறலாம். (௨௮)

சூர்முதறடிந்தசுடரிலைநெடுவேற்சுராதிபனொருபெருங் கோட்டுப், போர்முகத்தடக்கைப்புங்கவன்செங்கட்புள்ளுயர் த்தவன்மறைக்கிழவன், கூர்முகவயிரவாட்படையுழவன்முதலி யர்குறுகிநின்றிறைஞ்சும், நீர்முகந்தலைக்கும்வேணிநீடிலிங்கநி கழ்த்திடிலளப்பிலவுளவால். (உக)

மறைபயில்கௌசிகன்பரத்துவாசன்வயங்குகாசிபன்றுரு வாசன், குறுமுனிததீசியத்திரிவசிட்டன்கோதமனுரோமதன் கபில, னறையுமத்தியனாரதன்பராசரன்காலவமுனிவியாதனு தியர்தாஞ், செறிநதிப்பாங்கராருச்சனைபுரியுமிலிங்கமோரளப் பிலதிகழும். (௩0)

தாமநாற்றியதண்டரளமேபோலத்தடமலர்மடலவிழ்பூ கச், சோமநாதத்திற்றண்சுடர்க்கலையோன்றுகளறுமுனிவரன் றலைவி, காமர்பூங்குழலியால்வருஞ்சாபந்தொலைவுறக்கடிமலர் மழைதூ, யேமறவழுத்துஞ்சோமநாதப்பேரிலிங்கமொன்றுள திசைக்கரிதால். (௩க)

வாழ்தலமதனுக்கடுத்தகீழ்பாலின்வளரிளம்பிறைக்கொழு ந்தரவு, தாழ்சடைகழுமுட்கரந்திகழனந்தகணேசனென்றிரு நிலஞ்சாற்றுஞ், சூழ்சுடரிலிங்கந்தனைநனைமலர்தூய்த்தொழுப வரெழுபவந்தொலைந்து, காழ்படுமிடறுஞ்சுடருமிழ்மூன்றுக ண்களுங்கவினவீற்றிருப்பார். (௩உ)

கொக்கிறகொளிருங்குடிலவான்சடிலக்குழைதவழ்செவி கொடுநெஞ்ச, மைக்கணிந்தொழுகுமிடற்றுவாகீசனெனும்பெய ர்மருவிலிங்கத்தைச், செக்கமலத்தன்முதலியர்வழுத்துஞ்சேவ டிச்சிவபெருமானைத், தக்கவன்பொடுபோற்றுநர்முதுக்குறைவு சார்ந்துசாரூபமேயடைவார். (௩௩)

தென்றிசைவடபாற்சமஞ்செயப்பொதியஞ்சேருழித்தமி ழ்முனிகருவூர்ப், பன்றிவெற்புடையான்பொருனையின்குடபா ற்கரையில்வெண்பால்புரைமணலை, யன்றுகைக்குவியாலருச்ச னைபுரியுமவிரொளியகத்தியவிலிங்க, மொன்றுளததனைநன்றுற ப்பணிவோரொளிர்பரகதியினையுறுவார். (௩௪)

இருளறநிமிருமொருபெருஞ்சுடராயிலங்குகாஞ்சேசனெ ன்றிசைக்கு, மருளுருவிலிங்கமொன்றுளததனுக்கடுத்தவேத்தி ராரணியத்தின், மருவுமோரிலிங்கமுளதிமையவருமறைபயின் முனிவரும்வழுத்தக், கருணைகூரிலிங்கங்களைவழிபடுவோர்கதி யினையெளிதினிற்காண்பார். (௩௫)

திங்களங்குழவிக்கோடுரிஞ்சியதண்சிணைமலர்ப்பொதும்ப ரிற்கமஞ்சூன், மங்குல்கண்படுக்கும்புரிசையுந்தரளமணிநிலா விரிக்குமுன்றிலுஞ்சூழ், கொங்கணேசத்திலிங்கமொன்றுள தக்கொழுமலர்க்கொன்றைசூழ்வேணி, யங்கணனுமங்கொங்க ணேச்சுரன்சென்றடிதொழுபவர்சிவனுவார். (௩௬)

கந்தநீடளகத்தவளவாண்முறுவற்கவரிதழ்க்கௌரிபங்கு றையு, மெந்தைகாளீசனிணையலர்ப்பாதமிடையறவிரவுநண் பகலுஞ், சந்திரசேகரத்திற்புதுப்புனல்பெய்துதண்ணலர்கொ ய்தருச்சிப்போர், பந்தவாணவத்தினிருட்படாங்கிழித்துப்பட ரொளிப்பரப்பையேகாண்பார். (௩௭)

கடவுள்வான்மிசையிலெஞளிவளர்தாராகணங்கடாம்வழிப டுபிழிதோய், மடலவிழ்கடுக்கைத்தாரகேச்சுரனைமாநதிகொ ணர்ந்தமஞ்சனநீ, ரிடர்கெடவாட்டிமலர்மழைபொழிவோர்யா வராயினுமுடுக்கணங்க, ளுடனுறைந்தமலபரசிவரூபமெடுத்து மாபதியுலகுறைவார். (௩௮)

வலிகெழுதக்கன்றலையறுத்தொருத்தன்மறுதலையளித்த வாள்வீரன், பொலிசிவகணங்களுடன்மரீஇமறுவில்பூசனைபுரி தருவிரிவான், சலிலநீள்வேணிமௌலிவீரேசன்றமரைக்காம ரஞ்சரண, மொலிவரவாழ்த்திவணங்கிஞேரிணங்கியுறைகுவர் முத்திவீடுண்மை. (௩௯)

பண்ணிவர்கிளவித்தவளவாண்முறுவற்பவளவாய்குவளை யுண்கருங்கட், பெண்ணிடங்கலந்துபிள்ளைவெண்டிங்கட்பிள விளைச்சடைமிசைச்சுலவி, விண்ணுயர்குடுமிக்கோயில்வீற்றி ருக்கும்விசாலலிங்கத்தைவிழைந்து, தண்ணளிபெருகியுருகிய ஞ்சலிப்போர்சலிப்பறப்பெறுவர்சாரூபம். (௪0)

விரிதலைக்கருங்காய்நெட்டிலைப்பருஉத்தாள்விண்ணுயர்கூந்தலம்பெண்ணை, மருவியசீழற்சேதிமத்துறையுமறுவறுகாட்சி நாயகனை, யொருபொழுதேனுந்தொழுபவர்சுழல்காற்றூசல்பாருருள்சகடுறழக்,கருவினிற்சுழலார்பொருவிடைத்துவசன்கமலமென்பதநிழற்புகுவார். (சக)

ஓங்கலுட்குழையப்பசுந்துழாய்ப்படலையுரம்பொலிசாயகம்பூட்டித்,தூங்கெயின்மூன்றும்புகையெழமுறுவற்சுதையிளநிலவுமிழ்கனிவாய்த்,தேங்கமழிதழித்தொடைதுயல்வருந்தோட்டிலகுமேலச்சுரனெனுநாமந், தாங்கியவிலிங்கந்தனைநினைந்திறைஞ்சுந்தகையினர்முத்திசார்குவரால். (சஉ)

இப்படித்தலங்கள்பலவுளவிப்பாலேதமிலாதிமாபுரமா, மப்படிநீவிரறைந்ததொல்பதியுமதுவுயிரனைத்தையுந்தரலாற், செப்பருங்கருப்பபுரியெனும்பெயருந்திகழ்வுறச்செப்புவரதனு, ளொப்பருமிலிங்கமைந்துளவைந்துமொளியருளீந்திடுமிலிங்கம். (சங)

உரைத்திடுமேவற்றுளாதிநாயகனென்றொருசிவலிங்கம்வன்மீகத், தருத்தியினுறையுமதனுளெம்மிறைவனைத்தொழிலியற்றுவனெல்லாம், விரித்துரைக்குநர்யார்மேலதுகிடப்பவிளம்புமத்தலமெனுமாதி, புரத்திலக்கினிமாதிரத்திலாரணங்கள்புகழொருதலனுளதறைதும். (சச)

மறிதிரைச்சூதமாநதிக்கரையில்வடக்கில்வஞ்சுளேசனென்றுரைக்குந, குறியுளததன்பாற்குணக்கினீடரசவனத்திடைக்குறுகினான்மறையோர், வெறிமலர்பொழியமுனிவரரிறைஞ்சமேதினியாதவர்மகிழ்வோ, டறிதுயிலமர்ந்துமரகதவரைபோலச்சுதனன்கொடுபொலியும். (சரு)

வஞ்சுளாடவிக்குத்தரகுணக்காகவாம்பிரவதிநதிமதிபோல், விஞ்சுமாமணிமுத்தாறுகாவேரிமேவுழிமேவுமேவுதலா,லெஞ்சலிருமுக்கூடலென்றிசைப்பரிசைக்குமத்தலனிடையிமையோ, ரஞ்சன்மாலபோற்றுமிலிங்கமுண்டதனையருண்மணியீசனென்றறைவார். (சசா)

தேமலிதரங்கமிரங்குமுவலகையசெழுநதியொருங்கெழலானு, யாமணியீசனலவநடுப்பொலிந் துலைவருதலானுமத்தலத்தைப், பூமலிகமலவிரிஞ்சன்மான்முதலோர்புண்ணியத்தலனெனவிரித்துப்,பாமலிமறையிற்பகர்ந்தனரென்றால்யாவரேபகுத்துரைக்கிற்பார். (௪எ)

அந்நதிகூடுமிடத்துழிப்புதுநீராடினோரத்தலச்சிறப்பை, நன்னரிற்றுதித்தோர் துதித்தவைகேட்போர்நான்மறைமிருதியாகமங்க, டொன்னெறிப்புராணமோதினோர்சுவர்க்கமெய்துவர்சுடர்மணியீசன், சந்நிதானத்திலிறைஞ்சினோர்ஞானத்தலைவராய்ப்பரகதிசார்வார். (௪அ)

ஆவணிமாதத்தவிர்மதிபருதிமண்டலத்தமையுநாண்மகநாண், மேவினுமேவாதொழியினுந்திருமுக்கூடலின்விரிபுனற்படிந்தோ,ரோவறநூறுபகிரதிபடிந்தோர்க்குளபயனுதவிமெதனிற், கோவெனும்பசுபதீச்சுரர்முன்னர்குடைந்துளோர்பலன்குணிக்கரிதால். (௪௯)

சூதமாநதியங்குலிதொடஇச்சிரமேற்றெறிப்பினுந்தொன்றுதொட்டெழுமுற், பாதகந்தீருமெனிற்பவுத்திரராய்ப்படிந்துதர்ப்பணமவைமுற்றிக்,கோதறுதிருவஞ்செழுத்தையுச்சரித்துக்கொள்ளுநர்கொள்ளுநறபதத்தை,வேதநான்முகனேவிளம்புமற்றன்றிவியாதனேவிளம்பிடல்வேண்டும். (௫0)

இந்தமாநதியிற்சலமலாதிகள்விட்டிழிசவுசாதிகண்முடித்தோர்,தந்தசுத்திகள்செய்துமிழ்ந்துளோராடைதணந்துபுக்கவரெச்சிலிட்டோ,ரந்தினீரதிரப்படிந்துளோர்பூப்புவந்திடின்மூழ்கிமெகளீர், மூந்துறவியலாதனபலவியன்றோர்யாவருமூழ்குவர்நிரயம். (௫க)

செய்வனயாவுங்கரைமிசையாற்றித்திகழிணைத்துகின்மருங்கசைத்துக், கொய்ம்மலர்தூவிநிலனுறத்தாழ்ந்துருவிர்புனலதிர்வுறாதடி, மொய்கரையிவர்ந்துபுலர்துகில்புனைந்துமுறையில்வெண்ணீறுமெய்ப்பூசிப், பெய்வனதானமியன்றனபெய்வோர்பிஞ்ஞகன்பெரும்பதம்பெறுவார். (௫உ)

புதியதண்ணீத்தம்வந்துழிநறியபுதியபட்டாடைபொன்னுடை, விதிமுறையிழைத்தபூணணிமணிகண்மிளிர்பசும்பொன்மலர்பெய்து,பதிவுறவமைத்தவிம்பமுன்னிட்டுப்பனிமலர்ச்சிகழிகைசாத்திக், கதிதருங்கங்கைமந்திரமியற்றி யிறைஞ்சினோர்கதிவழிகாண்பார். (ருக)

பூரணையிரவிமண்டலத்தாலோன்பொருந்துமிழ்கிரணகாலத்திற், பேர்பெறுமத்தோதயமகாவுதயம்பிறந்தநாட்டந்தைதாய்பக்கஞ், சீர்கெழுவெதிபாதத்தினீராடிற்றிசைமுகன்முதலியதேவ, ரேர்கெழுபதங்கடமிலரசியற்றியீற்றிலின்புறுங்கதிநிலைப்பார். (ருச)

பொலியுமந்நீரிலாடியோர்நாட்டாம்பூலமெட்டெட்கணைநல்கின், மலியுநால்வேதமோதிறைக்களித்தபலனுறீஇவண்சிவபுரியின், மெலிவறத்தேவாண்டாயிரமருவிமீளவுத்தமமறைக்குலததி, லொலிகடற்புவியிலுதித்துமெஞ்ஞானமுணர்ந்தரன்பதத்துயர்ந்திடுவார். (ருரு)

அந்தணனொருவன்றனக்கொருபகலத்தீரத்திலடிசிலிட்டுண்டோன், முந்துறவீரைஞ்ஞூறுகுண்டலந்தோய்முதுமறைவேதியர்க்களித்த, சிந்தைதேர்பலதனைச்சேருவனன்றித்திலோதகம்பணணினோன்பிதுர்கக,ளிந்திரபதத்திலரசுவீற்றிருப்பாரென்னில்யாரதன்றிறனிசைப்பார். (ருசு)

வரைவரையறமீக்கிளர்பெருங்கேழல்வரையினைவணங்கினோர்வணங்கித், திரையெறிசூதநதிதுறைசேரத்தீர்த்தங்கள்குடைந்துளோர்குடைந்து, கரைமருங்குறைதண்ணடவிவெள்விடையூர்கடவுளாலயங்கள்கண்ணுற்றோர், புரையறுபதத்திலெய்துவர்மூவேழ்சுற்றமும்பொன்னுலகெய்தும். (ருஎ)

சென்றுநீர்குடைந்தோர்பிறந்தைநீடருவின்வேரறச்சிதைத்தெறிதரங்கந். துன்றுமாநதியின்சரிதையையாசான்சொற்றவாறுரைத்தனம்புலத்தைக், கொன்றுமாதவங்களிழைத்துமுக்குறும்பைஞானநாந்தகங்கொடுகுறைத்து, வென்றுவாழ்முனிவீரென்றனன்கேள்விமேதகுசூதமாமுனிவன். (ருஅ)

ஆம்பிராவதிநதிச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆ-சருக்கம் ௬-இ, திருவிருத்தம்-௧௫௨.

# சராசரச்சருக்கம்.

---

ஒருகிரிமாசுணமுலையமகோததியுதவியகார்விடமெதிர்
போதில், வெருவியமாலயன்மகபதியோர்பதம்விழைகலமேனை
யர்பதமேவோ, நிருமலமாயளவிடலரிதாய்நினைவயர்விலதாய்நி
றைசுடராகி, யருவுருவாயொளிர்பசுபதிநாயகரடியவர்சேர
வையடைவோமால். (க)

வேறு.

சூழ்தவமுனிவர்தம்மைமீளவுஞ்சூதனோக்கிப்
போழிளமதியவேணிப்புங்கவன்றங்கும்வஞ்சித்
தாழ்விலாத்தலத்தின்முன்னர்ச்சராசரமுதித்தவாறு
வாழ்வுறக்கேண்மினென்னுமாமுனிவழங்கலுற்றான். (உ)

பரசிவனருளிற்சோதிபடர்பெருங்குடிலைதன்னின்
மரபுடனுதவிந்துவருஞ்சாதாக்கியம்பின்றோன்றி
யருளுமீசுரந்தான்சுத்தவித்தையையளிக்குமாயை
தருமொருபுருடகாலநியதியும்வரையுஞ்சார. (௩)

கலைதனிலவித்தைதோன்றியிடுமேராகத்தைமுற்று
மிலகுமக்கலையின்மூலப்பிரகிருதியும்வந்தெய்தி
யுலவுமுக்குணமுஞ்சித்தமுந்தரவுதிக்கும்புத்தி
யலைவில்சித்தத்திற்புத்தியாங்காரமளிக்குந்தானே. (௪)

ஆதிதைசதவாங்காரம்வைகரியாங்காரம்பூ
தாதியாங்காரமாகுந்தைசதவாங்காரத்தி
லோதுசோத்திராதியைந்துமுதித்திடுமனமுந்தோன்றுங்
கோதில்வைகரியாங்காரங்கொடுக்கும்வாக்காதியைந்தும். (௫)

சத்தாதியுதித்திடும்பூதாதியாங்காரந்தன்னிற்
சத்தாதிவானுங்காலுந்தழலும்வெண்ணீரும்பாரு
முய்த்தாரவுதிக்குமாற்றாலுதவிடுமவற்றுட்பாரிற்
கொத்தாருந்தோற்றநான்மைகுலவியேழ்பிறவியாமால். (௬)

எழுவகைப்பிறவிபார்ப்பாரிரவிபுள்ளரசுபாந்தள்
செழுமலர்மகரநதேனுசெப்பியவிவையேழாதி
யிழிதொழினீசர்விண்மின்மினியேநாகரமாம்வண்டு
கெழுமியசயிலங்கிடங்கிளருநாயிவையீறாகும். (எ)

நூறுமாயிரமுங்கொண்டநுவல்பதினொன்றுவானோ
ரேறுமுப்பதுநாற்கானீரெழுவனபறப்பவொன்பான்
வீறுமானிடர்பத்தொன்பான்றுபரமிளிர்பன்னைந்து
கூறிலூர்வனவிவ்வாறுகுலவுவயோனிபேதம். (அ)

இப்படிச்சராசரங்களிருநிலமியலுமேல்லை
துப்புறுகமலப்புத்தேடயிற்சுவைகூருமல்லி
னெப்புவனங்களுந்தாழ்ந்திடப்பிரளயம்வந்துற்ற
தப்பிரளயத்தின்பேரந்தரப்பிரளயமென்பாரால். (கூ)

அந்தரப்பிரளயத்திற்சராசரமனைத்தும்வீந்து
சிந்தலுமறிவுநீங்கித்திசைமுகன்றுயிலுணர்ந்து
முந்துறப்படைத்தயாவுமுடிந்தவோவெனக்கவன்று
நொந்தனன்படைப்பிலின்னுமேன்மனநோன்மைமிக்கான். ()

கைவரலின்றிவென்றியிழந்தனன்கவலுநெஞ்ச
னைவரலுதித்துநொந்துநதிமதிபுனையும்வேணி
மைவருகண்டன்றண்டாமரைமலர்ச்சரணம்போற்றி
யுய்வரவனிச்சைபெற்றாலொழிந்துறாதெனவெழுந்தான். (கக)

நோக்கினன்கைலைபோகிநுணுகிடைவருத்திவெற்பின்
வீக்கிளமுலையினாளோடரசுவீற்றிருக்குமேலோன்
பூக்கமழ்கமலப்பாதஞ்சென்னியிறபொலியத்தாழ்ந்து
தேக்கெறிமலர்கனைவிச்சிவசிவபோற்றிபோற்றி. (கஉ)

போற்றியென்றெடுத்திசைத்துப்புனிற்றிளம்பிறையெயிற்றுக்
கூற்றுயிர்குடித்தகொற்றக்குருமணிக்கழற்கால்வெள்ளை
யேற்றுயர்கொடியினாயுன்னேவலிற்றமியேன்பாரி
னாற்றுவித்தனதொலைந்தனாயினேன்றுயில்வுகூ௨. (கங)

மீட்டவைவிதிப்பினுன்றனருளலால்விதிக்கலாமே
சேட்டிளந்திங்கள்வேணிச்சிவபெருமானேயென்றுத்
தோட்டலர்கமலப்புதமேதளிரந்துகைதொழுதுநிற்ப
வாட்டநீதவிர்கென்றண்ணல்வாய்மலர்ந்தருளிப்பின்னர். ()

சராசரமுதிப்பமுக்கட்டனிமுதனினைத்தலுஞ்சீர்
விராவியதேனுவானமொருவிவேதண்டமேவிப்
புராதனப்புனிதபோற்றிபுண்ணியப்பொருளேபோற்றி
பராபரபோற்றியாதுபணிவிடையெனமுனிற்ப. (கரு)

வருதிசுரபிதொல்லைமறையவன்போலவேலை
பொருதிரையாடைஞாலத்தெமையருச்சனைபுரிந்து
தருகுதிசராசரங்களனைத்தையுமெனமுன்றுழா
விரைமலர்தூவித்தேனுவிடையொடும்போயிற்றன்றே. (கசு)

அங்கதுபோயபின்றையலரவனிலவுவேணிப்
புங்கவனளினபாதமீளவும்போற்றிநாக
கங்கணசராசரங்கள்விளிவுறக்கண்டவென்பாற்
றங்கியபாவந்தீரத்தக்கவாறருளுகென்ருன். (கஎ)

தடாகமாமலரின்வைகுஞ்சதுமறைமுனிவவாய்மை
கடாவலாலுரைத்துங்கேட்டிகருத்தையம்புலத்திற்போக்கி
விடாதொருங்கெழுந்துசென்றும்பிரவதிவிரிநீராற்றின்
வடாதெனவிசைக்குந்தெய்வவஞ்சுளாரணியஞ்சூழ்ந்த. (கஅ)

ஆதிமாபுரத்திற்போகியாரணப்பொருளியாவு
மோதிமாவேள்வியாற்றியருச்சனையுஞற்றிலோங்கன்
மாதிஞேடெதிர்ந்துகேட்டவரமுனக்கருள்வோமாங்குப்
போதிநீயெனப்புக்கான்றன்புரியின்மாதவத்தின்மிக்கான். ()

ஈங்கிதுகிடப்பவெக்கையருள்வழியியைந்ததென்று
பூங்கயிலாயத்தென்சார்மருவியாம்பூசையாற்றத்
தீங்கறுதலன்யாதென்னத்தேர்தலுமகதிவீணை
தாங்கியகமலச்செங்கைநாரதன்றமியனுகி. (உ0)

போகுயர்குடுமிவெள்ளிப்பொருப்புயர்புனிதற்போற்றற்
கேகுமந்நெறியிற்காணுவிருவிசும்பொருவியேழை
பாகனைப்பரவப்போமிப்படர்நெறிகவன்றுநின்றுய்
நாகிளஞ்சுரபியுற்றவாறெவணவிற்றுகென்றான். (௨௧)

திவவியாழ்முனிவவெந்தைசராசரஞ்சிருட்டிதெண்ணீ
ரவனியிற்போகென்றானலவைபடைப்பதனுக்கேற்ற
தவலருஞ்சிறப்பின்மிக்கதலனியாதெனக்கவன்றேன்
கவலுறுநெஞ்சந்தெளிவரக்கழறுகென்ன. (௨௨)

யாம்புகலுதுங்கேள்யாருமிசைப்பதற்கரியதூய
வாம்பிரநதிதீரத்தின்வஞ்சுளாரணியமென்னு
மேம்படுதலனுண்டாங்குமேவினர்விழைந்தயாவுந்
தாம்பரிவுடனளிக்குஞ்சத்தியமின்னுங்கேட்டி. (௨௩)

அத்தலந்தனினீராடினோரவரமலராவ
ரத்தலந்தனில்வதிந்தோரவர்கண்மாதவத்தராவ
ரத்தலந்தனிற்பிறந்தோரவர்களேயமரராவ
ரத்தலஞ்சராசரங்களளித்திடுமாற்றலாகும். (௨௪)

மற்றொருதலத்திற்போகிமாதவமுறைவழாமை
முற்றொருங்கியற்றினுலுமுத்தொழின்முற்றுவஞ்சி
நற்றலனெய்தியாதிநாயகற்பூசையாற்றிற்
பற்றிமேளவின்முற்றும்படைப்புறப்போகென்றானல். (௨௫)

என்றியாழோங்குசெங்கைநாரதனிசைப்பத்தேனு
நின்றுளாதரமீதூரநெடுநிலனிழிந்துநாடிச்
சென்றுளார்வினைகடீர்க்குஞ்செறிமயிர்க்குறுந்தாட்கேழற்
குன்றுளார்வியப்பவந்தக்குவட்டினைக்குறுகிற்றன்றே. (௨௬)

மாற்றருங்கேழல்வெற்புமாநதித்துறையும்வைகுஞ்
சேற்றிகழ்விழிபங்காளன்சிவசினகரங்கண்மேவிப்
போற்றொருமேடைந்ததாதிபுரத்தினையருளப்போற்று
வேற்றதோர்பதியைச்சேர்தல்பசுவினுக்கியல்புதானே. (௨௭)

மருவிவெண்டிரைகொழிக்குமானதிப்புதுநீரோடித்
திருமலராய்ந்துகொய்துசிவபரம்பரனைப்பூசை
யருமறைவிதியினாற்றுவானகந்தெரிக்குமெல்லை
யிருவிசும்பிடையினின்றோர்வாக்கெழுந்திசையாநிற்கும்.(௨௮)

வாழியசுரபிகேண்மோவஞ்சுளாரணியஞ்சூழ்ந்த
வூழிகடணந்தவாதிபுரமிதென்றுரைக்கும்வேத
மேழிருநிலனும்போற்றுமித்தலத்திடையோர்புற்றிற்
சூழொளிவிரவிநீடிப்பாதலத்திருந்துதோன்றி. (௨௯)

திவ்வியவிலிங்கமென்னத்திகழுமோரிலிங்கம்வைகு
மவ்விலிங்கத்தினுமமவிரொளியாதிநாதன்
வவ்வியயாவுநல்கும்வந்தனைபுரிதியென்னாக்
கவ்வையினுணரக்கூறிக்கரந்ததுமீளவானில். (௩0)

அம்மொழியமிர்தந்தேனுவஞ்செவிநிறையமாந்தி
விம்மிதம்பெருகிஞானவெள்ளத்துண்மூழ்கிநாளு
மெம்மறைகளுநின்றேத்தும்புற்றினதிடஞ்சார்வுற்று
மும்முறைவலன்வந்தன்புமுகிழ்ப்பமெய்விதிர்ப்பநோக்கா. ()

குடம்புரைசெருத்தருங்குஞ்சுரைநறுங்கொழும்பாலாட்டித்
தடம்பணைப்பொதுள்வனத்துப்பத்திரநறியதண்டே
னடங்குபன்மலர்கவேவியன்பமுதூட்டிநெஞ்சி
னிடங்கொளுமறைபழிச்சியிறைஞ்சிவந்தனைகளாற்றும். ()

பூசையிவ்வாறுதேவவருடமோர்மூன்றுபோற்றி
யாசைகூர்நாளினோர்நாளழல்விழியுழுவைமென்றோற்
றூசரையசைத்தோன்செய்யசுடர்மணியரவுதிங்கள்
வாசநீர்மிலைந்தவேணிமௌலியின்வாமந்தன்னில். (௩௩)

ஒருகுளம்புருஞ்சியூறுபடுதலுமுளங்கவன்று
வெருவிநெட்டுயிர்ப்புவீங்கிமெய்நடுநடுங்கிவாளி
யுருவியதென்னமாழ்கியுருகிவாய்புலர்ந்துசூழ்ந்த
தருவினையெனவெம்பீழைக்கடலினுளாழ்ந்ததன்றே. (௩௪)

வேறு.

அஞ்சியஞ்சியகலும்மனுகிடும்
மெஞ்சியாவியிழக்கவெழுந்துயர்
நெஞ்சினுன்றலைப்புண்டுநெடுங்கணீர்
மஞ்சினூடிழிமாரிகவிழ்த்திடும். (௩௫)

விழுமழுங்குமலம்வந்துவிம்முமீண்
டெழுமுணங்குமிரங்குந்தரங்கிகின்
றழுமெம்மண்ணலுக்கன்பிலர்போற்கொடும்
பழுதுசெய்தனனென்னும்பணிப்புறும். (௩௬)

ஓதலாவதென்னுற்றுணர்வோர்பெறக்
கோதலாதனநல்குங்குழகன்பாற்
றீதலாமையிழைத்திலன்றீமையே
ஞதலாலெனக்கார்கொலொப்பாவரே. (௩௭)

வேதனுக்கரிதாமுடிமேலன்ப
ராதரத்துடனீரலரேற்றிரு
ரேதமுற்றியயான்வடுவேற்றினேன்
பூதலத்திடையார்புகழ்பூண்டுளார். (௩௮)

இன்னகூறிப்பழிபுரியிவ்வுடன்
மன்னவாழ்வதுவாழ்க்கையன்றேயெறு
வுன்னவ்வேல்வையிலிங்கத்திறேஞ்கொளி
முன்னவன்பசுமுன்னரிற்றுன்றியே. (௩௯)

நீவருந்தல்வருந்தனின்பாலெமக்
காவதோர்விளையாட்டிதுகேட்டியாற்
பூவர்தூய்நமைப்பூசைபுரிகுநர்
பாவமாற்றினும்பற்றறுப்பாமரோ. (௪0)

விரியுநீருலகத்தினில்வெவ்வினைத்
துரிசறும்படிதூயவராய்த்தினம்
வரிகொளாய்மலர்கொண்டெமைவத்தனை
புரியிலெட்பிழையும்பொறுப்பாமரோ. (௪௧)

பாசவேரைப்பறிக்குமெம்பாதத்தி
லாசையாரறியாதுசெய்வெம்பிழை
மாசுவந்ததந்தோவெனின்மற்றவர்
பூசையாற்பொறுப்பாம்பொலிவெய்தவே. (௪௨)

ஆயைநீயுந்தொடர்மனவர்க்குட
லாயமூன்றுமறியாதுசெய்பிழை
பேயயாமும்பொறுத்தனம்பூணிகேண்
மேயபூசனையாற்றும்வியப்பினால். (௪௩)

நம்மைஞாலம்பசுபதிநாயக
னெம்மையாளுடையான்கருணேசுரன்
மும்மைநாமமுழுவதுமோதிடச்
செம்மையாம்வரந்தந்தனந்தேனுவே. (௪௪)

மீளவும்மிறைவேண்டியநல்வரங்
கேளெனக்கயிலைக்கிரியின்பசுந்
தாளதாமரைநான்முகன்மூன்றுயின்
மூளுமல்லின்முடிந்தசராசரம். (௪௫)

சேரநீதருகென்றுசெவ்வாய்திறந்
தாரவையவருளினையாதலிற்
பாரினுட்படைப்பிற்றிணைப்பான்மைகள்
சோருறுவகைசொல்லெனப்போற்றலும். (௪௬)

வேறு.

யாமுறையிடனுக்கவாசிதென்கீழ்பானிருதிதிக்கிலைகளி
னிடையிற், றமினிதுரையுஞ்சராசரச்சுவடுதழைதருபிரளய
ந்தோறும், பூமகன்முதலாப்படைப்புழிநம்மைப்பூசனைபுரிந்து
நம்மருளாற், காமர்சூழ்வுறுமவ்வடிகளின்குறிப்புக்கண்டுகண்
டிவ்வணம்படைப்பார். (௪௭)

அச்சுவடுகளைத்திப்பியவடிவமமைவரவாதியினமைத்தாம்,
வைச்செமையிதயத்தவைகளைநோக்கிவணங்குநர்பிறந்தைவாரு
திவீழ்ந், தெய்ச்சிளைப்புறம்பொய்வாழ்க்கையின்யாக்கையெடு
த்திடலொழிந்திமையவரும், பச்சைமாயனும்வேதனுந்தொழு
முத்திவீட்டினைப்பரித்துவாழ்குவரால். (௪௮)

அளிவிளைசுரபிநீயுமச்சுவட்டினடைவடைவெமதருடங் குங், தெளிவரவருக்குந்தொழிலொருங்குணர்ந் துதிகழ்வுறத்தி ருத்துகென்றருளி, யொளிவளர்பவளச்சடாடவிப்பெருமா ஞெங்கொளிவளரிலிங்கத்திற், றளிர்புரைமேனிக்கருணையங் தடங்கட்சாம்பவியுடன்மறைந்தனனால். (௪௯)

நெக்குநெக்குருகிநெடுங்கணீருகுத்துநிருமலனவ்விலிங்கத் திற், புக்கிடுமளவுஞ்சிவசிவபோற்றிபோற்றியென்றிளம்பிறை யறுகு, கொக்கிறகணியுஞ்சடிலனைப்போற்றிவிடையொடுங் கோக்குலக்கபிலை, தெக்கணமனுகிச்சராசரச்சுவடுதெரிதருமெ ல்லைசார்ந்ததுவே. (௫0)

ஆண்டையினெய்திச்சுவடுகண்ணுக்கியருமறைச்சிரத் தின்மேலொளிரும், பாண்டரங்கனைத்தனுள்ளுளேவிழித்துப் பார்த்துமீளவும்வியனுலகைக், காண்டலுங்கமலக்கடிமலர்ப் பொகுட்டுக்கடவுள்வேதியனுளங்கவல, வேண்டியவாறேசரா சரமனைத்துமுதித்தனவிம்மிதம்பெருக. (௫௧)

பூத்திடவுதித்தசராசரமனைத்தும்பொசித்திடலுள்ளிடை த்தெரிந்து, நீத்தவார்சடிலநிருமலனுறையுநீடிருக்கோயிலினுத க்கின், மீத்திகழமுதந்தானெனத்திரண்டவெண்ணெய்மால்வ ரையினைவிதித்துத், தீர்த்தமொன்றதன்கீழ்பால்வருத்ததுவத் தீர்த்தமுந்தேனுமாதீர்த்தம். (௫௨)

செப்பருங்கபிலைதருநவநீதச்சீதமால்வரைக்கிணைசெப்பின், முப்புவனங்கடம்மிலொன்றின்றென்மொழிவதற் கெவன்கொல ப்பெருமை, யெப்புவனங்கடோறுந்தொறும்வினைகட்கேதுவா யுதித்தபல்லுயிர்க்குந், துய்ப்பனயாவுமளிப்பதுகயிலைச்சுடர்க் கிரிநிகர்ப்பதுசிறப்பால். (௫௩)

விட்புலன்மலிநீர்வைப்பிவைமுழுதும்வெதும்பவெவ்வழலெ ரியெழினுந், தட்பமோர்சிறிதுந்தணப்புறுதலைபைந்தளிர்புரை மேனிமென்கோதைக்,கட்கருங்குவளைக்கதிர்நிலாமுறுவற்கௌ ரிபங்கினன்மடற்கைதைத், முட்செருக்கியவாலெயிற்றுவெம்பா ந்தண்முடியினன்வடிவமேவியது. (௫௪)

காண்பதற்கிதயங்கருதிடின்முக்கட்கடவுடனுலகளிப்பது
தாட், சேண்படுநெறியிற்றேய்வுறநடப்பிற்சிவனுடனிருத்துவ
தனாகி, மாண்புறக்காணிற்பரம்பரனுருவம்வழங்குவதருச்சனை
புரியிற், பூண்பதற்கரியபதமளிப்பதுவப்பொருப்பையார்குணி
த்தளவிடுவார். (௫௫)

அலகிலவாயசராசரமனைத்துமார்கலியாடைசூழ்கிடந்த
மலர்தலையுலகின்வளனுடன்பொலிந்துவாழுநாட்பசுபதிநாத
னிலகியகமலபதமிசைமீட்டுமேருச்சனையியற்றியக்கயிலை [தால்.
தொலைவிலவரனுமிறைதிருவருளுஞ்சூழ் வுறத்துறக்கமேவிய

பொருவறுஞ்சுரபியருச்சனைபுரியுங்காலையிற்போழிளமதியு,
முருகுயிர்த்தறுகாற்சுரும்பிசைமுரற்று மொய்மலர்க்கடுக்கையு
முடித்த, திருமுடியுறுபடக்குளம்புறைக்கமிதிக்கவுந்திருவு
ளத்தெண்ணு, தருள்சுரந்திடலாற்கருணைநாயகனென்றமல
னையுலகெலாமறையும் (௫௭)

வரன்முறைவழியேபிரளயந்தோறுமாய்ந்தவைவழங்கலா
னாதி, புரமதுதனைத்தொல்வேதமுங்கருப்பபுரியெனப்புகன்றி
டுமென்றால், விரவுமேதினியினுளதலன்களினும்விசிட்டமித்த
லமிகுதவத்தி, னாரவியதொல்சீர்முதுக்குறைவினருமுறைவத
ற்காண்டுளம்விழைவார். (௫௮)

ஞாலமாதியவந்துதிப்பதன்முன்னர்நவிலுதற்கரியபேரொ
ளியாய், மூலமாய்முளைத்தபசுபதியிலிங்கமுறிதிரைப்புடவியி
ன்முளைத்த, வேலுறுமிலிங்கமெவற்றினுமதிகமுண்மையென்
றுரைத்தனன்வியாதன், சாலுறவையமிலையிதற்கையஞ்சாற்
றினேரிழிகுலத்துதிப்பார். (௫௯)

பார்புகழ்பசுபதீச்சுரனென்னும்படரொளியிலிங்கத்தின்
கீழ்பாற், றார்புனைகோடியிலிங்கமொன்றதன்கீழ்சார்கயிலாயநா
யகனென், றேர்புனையிலிங்கமொன்றதன்றென்பாற்கரியமாலீ
சனென்றிசைக்கு,மோரொளியிலிங்கமதற்கொருசார்வஞ்சுளே
சனென்றுரைக்குமோரிலிங்கம். (௬௰)

இலங்குமெய்ச்சோதியியல்புடைப்பஞ்சவிலிங்கமுகத்வ வியவிலிங்க, மலங்குநீராடைமருங்கின்மீதிசைத்தவத்தலத்த ன்றியோர்வேறு, தலன்களினின்றலத்தலப்பெருமைசாற்றி டற்கரிதுமுப்பகையும், புலன்களும்வென்றமுனிவிர்காளென் னச்சூதமாமுனிவரன்புகன்றன் (சுக)

சராசரச்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆ சருக்கம் ச- இ, திருவிருத்தம்-உகக.

---

# அலங்காரவதிச்சருக்கம்.

மண்ணினுளனிடையெண்ணவரியனவண்மையுளபொரு ண்மன்னுமே, யுண்மையொளிதரவுண்மையருள்பெறுமுண் மையதுவருமுண்மையே, கண்ணிதொடைகணையண்ணலுயிர்கவ ர்கண்ணரழல்புரைவண்ணனார், விண்ணினுயரியதண்ணமதிநி கர்வெண்ணெய்வரைதணைநண்ணுமே. (க)

வேறு.

இந்தவாறுரைத்தமுனிமுகநோக்கிமுகமனோடேத்தியா ண்டு, மூந்தமாதவமாற்றிச்சிவார்ச்சனையைவரன்முறையின்மு ற்றிஞான, முந்துமாவரங்களுடன்முத்திவீடடைந்தோரை யுரைத்தியென்னுப், பந்தவாணவப்படலங்கிழித்ததவமுனிவரர் தாம்பகரலுற்றார். (உ)

பகர்ந்தசவுனகராதிமுனிவர்முகஞ்சூதமுனிபார்த்துப்பாச, மிகழ்ந்துமுழுதொருங்குணர்ந்திருச்சனைகளியற்றினோர்க்கெ ல்லையின்று,லுகந்துபராசரன்றவத்திலுதித்தெமையாளொருகு ரவனுண்மைஞான, மகந்தெளியமொழிந்தவையிலறிந்தவாறு ரைத்துமெனவறையலுற்றான். (௩)

தெண்ணிலவுதவழ்வேணிச்சிற்பரனையொருகாமதேனுனா
ன, முண்ணியமவழிபாடுபுரிந்துசராசரமுழுதுமுதவியும்பர்,
விண்ணிலதுபோயினதுசொற்றனமுன்றுகினவரைமிசையின்
வைகும், பண்ணிவர்சொல்லலங்காரவதிமுதலோர்புரிந்தடை
ந்தபரிசுசொல்வாம். (௪)

மூதண்டமுகடுருஞ்சிமுழுநிலவுபரப்பிமறைமுழங்குவெ
ள்ளி, வேதண்டநெடுமுடியினமலனொருபாலரசுவீற்றுவக்குங்,
கோதண்டமுறழ்புருவக்கருணைபொழிகுருமணிப்பொற்குழை
கடாழுங், காதண்டவருநெடுங்கட்கௌரிதலைவனைநோக்கிக்க
ழறுகின்றாள். (௫)

எவர்க்குமுடலுயிருணர்வாயிருந்துமளவிடற்கரியவிறை
யேயாற்றுந், தவத்தினுளேதவமரியதவந்தெரியவடியேற்குச்
சாற்றுகென்னச், சிவத்தசெழுங்கனிமொழியாயரியதவஞ்
சிவார்ச்சனைமற்றதுதான்செப்பிற், பவக்கடலைக்கடத்திமுத்தி
க்கரையேற்றிவிடுவதற்கோர்பகுதியாமே. (௬)

இருவரறிவதற்கரியவொருபொருளேயிருநிலத்தினொரு
வாதுன்னைப், பொருவறுபூசனைபுரிதற்கிவ்வுழியென்றடியேற்
குப்புகலுகென்னக், குருவயிரமணியிமைப்பவருவிகொழித்தெ
றியிமவான்கொம்பேதொல்லை, யருமறைகள்பழிச்சும்வஞ்சுளா
ரணியத்தேகுதியென்றருள்செய்தானால், (௭)

வேணிநாண்மதிக்குழவிமிலைந்தபரம்பரனைவிடைகொண்
டுதேவி, வாணிநாமகளுமலர்மகளுமலர்தூவியிருமருங்குமொய்
ப்பச், சேணிசேர்மகளிரரமகளிர்முதலாயசேடியர்களீண்டக்,
காணியாகியவஞ்சுளாரணியத்திடைப்புக்காள்கைலைநீங்கி. ()

குற்றேவலிற்றழைக்குங்கோற்றொடிவேற்றுணைவிழியார்
குறுகிநிற்ப, மற்றேவல்பலவாற்றுமணிநிலவுநகைமாதர்மருங்கு
மொய்ப்ப, நற்றேவமகளிர்முதலியமடவார்பணிவேட்டுநயந்து
சூழ, வுற்றேவன்முலைநாரிதானேயாராதனைக ளுஞற்றலோ
ர்ந்து. (௯)

புதுநீர்மஞ்சனமாடிப்புண்ணியவெண்பொடிமேனிபொலி யப்பூசி, மதியார்வண்டுணுமுன்னர்மலர்கொய் தநீர்த்தூம்பில்வ டித்துப்பெய்து, முதிர்வாசமலிதெய்வைமுதலபலதிரவியமுமு றையினேந்தி, யிதுகாலமெனப்பசுபதிச்சுரனைவழிபடலினிந் யம்போக்கி. (௧0)

ஐந்துவகைச்சுத்திமுற்றிச்சோடசத்தில்வழுவாமையருச் சித்தேத்தும், பைந்தொடியைமுகநோக்கிப்பசுபதிநாயகன்கரு ணைபாலித்துன்போல், வந்தனையாற்றுநரரிதுவருதியலங்கார வதிமங்கையென்னச்,சந்ததமும்பிரியாமையுடனமர்ந்தாளோ ர்தவிசிற்றலைமைமிக்கான். (௧௧)

ஆயகாலையிற்சிறைவண்டறைதருவெண்கமலமலரகட்டு வைகுந், தூயவாணியுஞ்சுருதிமறைமிருதியாகமங்கள்சொற்ற வாற்றான், மேயபூசனைபுரிந்துவிமலனருட்பணிதலைமேற்கொ ண்டுதண்டேன், பாயுநீடொருவனத்திற்பன்முறைமாதவம்வி ழைவிற்பயில்வதானாள். (௧௨)

விளரிபாடியசுரும்புபசுந்தேனுஞ்செந்தேனின்மேய்ந்து மூழ்கு, முளரிவாயரசாட்சிபுரிதிருவுமுகிழெருக்குமிதழித்தா ரும், வளர்சடாடவிப்பெருமான்மலர்த்தாளில்வந்தனைபன்மு றைவழாமைக், கிளர்விறுற்றிளைத்தருளின்வழியொருசார்மா தவத்திற்கெழுமலுற்றாள். (௧௩)

விஞ்சைமாதருமமுதமொழுகுகுழலிசைமதுரமிழற்றுங் கின்னரி, யஞ்சொலாரணங்கினருமலங்காரவதியுடனாரணங்க ளேத்தும், வஞ்சியாநிலைநாதன்றனைநனைமென்மலர்தூவிவழி பாடாற்றி, நெஞ்சமேவலிற்போக்கிநித்தமாதவமிழைக்குநினை வில்வாழ்ந்தார். (௧௪)

அலங்காரவதிமதிவாணுதலிகலைவாணியரவிந்தைமிதி, ரிலங்காரமுலைவனிதையிவர் புரிவந்தனைபுகன்றுமிளநீரோடை த், தலங்காணுநளினமலர்ச்சதுமுகவனைம்முகவன்றனைப்போற் றிப், புலங்காயுநனிதவத்தீர்பூசைபுரிந்தவைதெரியப்புகலலுற் றாம். (௧௫)

அலங்காரவதிச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் ௫ - ௱), திருவிருத்தம் - ௨௨அ.

# பிரமச்சருக்கம்.



கமழ்சோலைநீலமலர்வாவிமேவுகருவூரராதிபுரனூர்
நமையாளுநாதர்மறையோதுபாதர்நவநீதசீதவரையா
ருமைநேசர்தேசுபொலிபூசையாசையுறையாதுதேசமுழல்வீர்
யமபாசமோசமலநாசமேனியுறவீசிலேதுபுகலே. (க)

வேறு.

புண்டரிகநாண்மலர்த்தோட்டகட்டுநெடுப்பொகுட்டிலரசி
ருக்கும்புத்தேள், கண்டெயிலிற்சராசரங்களுயிருலப்பக்கவன்
றுதிருக்கயிலைபோகி, யண்டர்பிரானருளியவாறக்கரிற்சிலப
கன்மாமகங்களாற்றித், தண்டலைசூழ்கருவூரிற்றலைவனைவந்த
னைபுரியச்சார்தல்வேண்டி. (உ)

செய்யசூட்டஞ்சிறைவெள்ளோதிமத்தின்வெரிநிடையிற்
றிகழவெய்தித், துய்யமாமுனிவரருமிமையவருநனிதவருஞ்
சூழ்ந்துபோற்ற, வையமீதிழிந்துவளர்வஞ்சுளாரணியத்தினெ
ல்லைகாணு, வையன்வாழ்பதியிதெனவூர்திவிடுத்தரகரவென்ற
ஞ்சலித்தான். (ஙா)

அரகரவென்றஞ்சலித்தமறைக்கிழவனேத்தொலியுமமரர்
யாருங், கரகமலமுகிழ்ப்பமொழிகுளறொலியுமாதவத்திற்கரு
ணைவைத்த,விரகமுனிவரரார்ப்புமேனையோர்மிடைந்திறைஞ்
சுமொலியுமாக, வரதனுறைதருகருவூரெழுஉதெழுநீர்க்கடலொ
லியுமறைத்தமாதோ. (ச)

பின்னிமறிதிரையெறியாம்பிரநதியிற்படிந்துபிதாமகன்
றொல்வேத, முன்னிவிபூதியுமக்கமணியுமுடல்கவினவுமை
யோர்பாகன்றன், சந்நிதியிலரகரசங்கரபோற்றியெனும்வாய்
மைதழைப்பநண்ணிச், சென்னியுறப்பன்முறைதாழ்ந்தனனெ
ழுந்துசெழுங்காமதேனுமுன்னம். (ரு)

படைத்தசராசரச்சுவடுநவநீதப்பருப்பதமும்பார்த்துவெ
ள்ளை,விடைத்துவசனருளுடையோர்க்கியாதியலாதெனமனத்
துள்வியந்துவாசத், தொடைத்துளவோனுபிமலர்த்தோன்றி
னானித்தலனைத்தொழமுன்னாற்றிக், கிடைத்ததவப்பயனிது
வென்றமலனருச்சனையன்புகிளர்த்தலுற்றான். (௬)

நத்தேறுநனிதிரைப்பாற்கடலினமுதயின்றிமையாநாட்ட
ம்பெற்ற, புத்தேளிர்மிடைந்துபுடைப்பணிகேட்பப்பூங்கமலப்
பொருட்டுப்புத்தேள், கொத்தேறுகொழுமலரின்குலைகணறு
ங்குறடுருஞ்சுந்தெய்வைவாசச், சுத்தோதகம்பளிதமுதலதிரவி
யங்கொணர்ந்துதுணியுமன்பால். (௭)

தொல்லைஞான்றுதித்தசராசரந்தொலையவருபாவத்தொ
டர்புமேரு, வில்லைவாங்கிப்புரமூன்றெரித்தவனையன்றிவிதிக்கு
வலென்றுன்னு, மெல்லையாண்டுறுபுகரும்படைப்பனகண்டுயி
லின்மறந்திடலுமெல்லா, மொல்லைதீர்ந்திடல்வேண்டுமுளத்தி
னனாய்வழிபாட்டிலுறுதிபூண்டே. (௮)

இருக்காதிமறையங்கமாகமங்களியம்பியவாறியைந்துபூ
சைப், பெருக்காசைக்கடன்மேன்மேலும்பெருகிக்கரைபுரளப்
பெருமான்செம்பொன், மருக்காலுமலர்த்தாளில்வைத்தமனு
திகளைவிடாதவணிறுத்தித்,தருக்கானமனச்செருக்கைத்தள்ளி
னான்பரவசமாக்கடலிற்றாழ்ந்தான். (௯)

தாழ்ந்தமனமைம்புலவேடக்குறும்பரூர்வழியிற்சாராவ
ண்ணம், வாழ்ந்துருகியூசியுங்காந்தமும்போலவந்தனையில்வழா
மைபற்றிச், சூழ்ந்துவிழிநீரருவிசொரிதரவானந்தநெடுந்துழ
ணியாற்றி, யாழ்ந்தனன்ராசதமொருவிச்சாத்துவிகமடைந்து
துதியறையலுற்றான். (௧௦)

வேறு.

உருவேயருவேயொளியேசரணம்முணர்வேயுணர்வாரு
ணர்வேசரணங், குருவாய்வெளியேவருவாய்சரணங்கொடுமால்
விடமார்மிடறுசரணங்,கருமாகரிவீழுரியாய்சரணங்கருவேரற
வேவருவாய்சரணந், திருமாலறியாவிறையேசரணந்திருவாகி
லையாய்சரணஞ்சரணம். (௧௧)

யுகமீறுமிலாவமலாசரணம்மொளியூடொளியாவொளியே சரணம், முகமாயிரமாமுதலேசரணம்முறையேதமர்தாயிலி யேசரணம், அகனேபுறனேயிலனேசரணம்மடியார்துயர்தீர டிகேள்சரணஞ், செகநாயகனேசிவனேசரணந்திருவானிலையா ய்சரணஞ்சரணம். (கஉ)

பவளாசலமேனியனேசரணம்படிநீரெரிகால்வெளியே சரணந், துவளாவொளிர்மாமணியேசரணஞ்சுகஞானபரபர னேசரணம், நவநீதசிலாவிறையேசரணந்நடுமேலொடுகீழுமி லாய்சரணஞ், சிவனேசிவதேசிகனேசரணந்திருவானிலையாய் சரணஞ்சரணம். (கங)

வேறு.

இவ்வண்ணஞ்சதுமறையோன்சரணமெனவேத்துதலுஞ்
செவ்வண்ணச்சிவபெருமான்சிவலிங்கத்திடைநின்று
மெய்வண்ணத்தெழுந்தருளியுகந்தனநின்பூசையென
மெய்வண்ணத்துறுவரங்கள்விழைந்தவைகேட்குதியென்றான்

அலகிலருமறைக்கொழுந்தேயானந்தசுகோதயனே
நிலவுகுணங்குறிகடந்தநிருமலனேயிருவினையின்
மலதிமிரமுனிபருதிவானவர்க்குமேலவனே
யுலவுசததளமணவுனுகளமலரடிபோற்றி. (கரு)

புன்மையேன்கண்படையிற்புவியசராசரங்கள்பொன்றுந்
தன்மையால்வரும்பாவந்தலைவனென்னுமகந்தை
தொன்மையாம்படைப்புமறந்திடவொருலையவருளுகென
மன்மயானத்தாடிவழங்கியருள்புரிந்தருளி. (கசு)

மறைமுனிவவிவ்வுழிநீவளர்வேள்வியொன்றியற்றி
நிறைகலைவாணியைமன்றனிகழ்த்திநமதருணிலையி
னுறைதிரைநீரவனிமுதலியதருதியடைவினெனு
விறையருளும்பணிதலைமேலிருத்தியிறைஞ்சினனகன்றான். ()

வண்ணருமாநதிக்கரையுத்தரத்துவஞ்சுளேசனுக்கு
நண்ணுகுணக்கெனவாதிநாயகர்க்கவாசியென
வண்ணல்வரிவிற்கெழுமூன்றம்புவிழுமாயிடைநற்
புண்ணியமாதீர்த்தமெனவொருவாவிபொலிவித்தான். (கஅ)

நியமித்தவுளகத்தினிமலனையாவாகித்துக்
கயமொத்தவவ்விலஞ்சிக்கரைமிசைமாதவமாற்றி
வியமொத்தமுழக்கெழவிண்ணிமையவரேத்தெடுப்பமறை
நயமொத்தநான்முகவனவநீதக்கிரிநணுகி. (௧௯)

அவ்வரையுதீசியின்கண்ணாரழல்வேள்விக்குண்டஞ்
செவ்விபெறநியமித்துத்திகழ்யூபத்தறிநிறுவி
யெவ்வமறுதிரவியங்களெல்லாமும்வருவித்துப்
பவ்வநிகரியமடுவிற்பங்கயன்மீளவுநணுகி. (௨௦)

புனல்படிந்துமணித்தசும்பின்புதியநறும்புனல்பெய்து
பனகணுநிலைநாதன்மௌலியிற்பன்முறையாட்டி
நினைவினருச்சனையாற்றிநிமலனனுமதிபெற்றுக்
கனகநீள்கருப்பனுயிர்கனவேள்விக்களம்புக்கான். (௨௧)

ஆயிடைநான்முகன்வேள்விதொடங்கினனென்றத்திரியும்
பாயுததிருகர்முனியும்பரத்துவாசனும்புலத்தைக்
காயும்வியாதனுஞ்சுகனுங்காசிபனுங்கோசிகனுந்
தூயவசிட்டனும்பிருகுத்துருவாசமாமுனியும். (௨௨)

வாமதேவனுந்ததிசிமாமுனியுங்கண்ணுவனும்
சாமதேற்கியனுஞ்சாபாலியுஞ்சாண்டில்லியனு
மாமறைரோமதனுமுபமன்னியனுஞ்சங்கணனுங்
காமருசீர்ப்பராசரனுங்கௌதமனுஞ்சுதீக்கணனும். (௨௩)

காசின்மிருகண்டுவுமார்க்கண்டனும்விபாண்டகனு
மாசில்விச்சுவாவசுவுமரீசியும்வாமத்திரியு
மேசில்கௌண்டின்னியனுமெழில்வாலகில்லியருந்
தேசுறுமட்டாக்கிரனுந்தெக்கணனும்புலத்தியனும். (௨௪)

சனகனுஞ்சனந்தகனுஞ்சனந்தரனுஞ்சனற்குமர
னெனவருநான்மறையவருமெண்டிசையினுறைபவரும்
புனைதவநாரதமுனியும்புண்டரிகமாதவனு
மனல்வளர்தத்தாத்திரியுமங்கிராமுனிவரனும். (௨௫)

மெய்முனிவரனையவரு மெய்தினர்விஞ்சையரியக்கர்
பொய்முனிபூசுரர்பிறரும்புகுந்தனர்பொங்கலைநெஞ்ச
மைமலிகந்தரன் மலர்த்தாள்வணங்கினர்வந்தனையாற்றி
நெய்மலிவேள்விக்களத்தினிரைநிரைதொக்கணைவுற்றார். (உசு)

நெருங்கினர்யாவரையுமுகனேர்ந்துமுகமன்னியம்பி
மருங்கின்முறைமுறைதவிசுவழங்கிமலர்மறைக்கிழவன்
கருங்கயமொன்றுரித்தோன்பொற்கழலைமனத்தவிசிருத்தி
பருங்கலையாரணம்பயின்றாரழல்வேள்வியாற்றினான். (உஎ)

ஆற்றியவிப்பாகமவரவர்க்கமைவுவரமரபி
னூற்றமறநனியுதவியுலகீன்றவுத்தமியைப்
போற்றியிளம்பிறைவேணிப்புனிதனுநிலைநாதன்
கூற்றினுயிர்குடித்தமலர்க்குரைகழற்றாமரையிறைஞ்சி. (உஅ)

முழவசனிமுழக்கவிண்ணோர்மொய்மலர்மாமழைபெய்யப்
பழமறைவேதியராசிபகாமுனிவரரேத்த
விழவுமறுகிடையூர்ந்துவிரித்தழல்சான்றாகவயன்
மழலைமொழியமுதொழுகுங்கலைவாணிமணநயந்தான். (உக)

நாமகளைவேட்டபெருநயப்புமிறையருள்சிறப்பும்
பூமகனுட்கொடுபெருமான்பொலிந்துறையவ்வுழிநறிய
மாமணியாலிழைத்தசினகரமொன்றுவகுத்ததற்குத்
தேமணியத்தண்டலைகடிகழ்தருதென்கீழ்பாலில். (௩0)

முத்தலைவேற்பத்திரையைமுழுமணிச்செண்டாயுதனை
வைத்தவர்வைகிடக்கோட்டம்வகுத்துவஞ்சுளாடவிகு
ழத்தலனைமுழுதுமெழிலமரர்கோன்பதிபோல
வித்தகர்மீதூரவிதித்தனனெவையும்விதிப்போனே. (௩க)

விதித்தபினுடகச்சிகரிமேருவெனவொருதிருத்தேர்
மதித்தனன்மூவுலகுறைவோர்வரமுரசமறைவித்துத்
துதித்தெழுபங்குனித்திங்களுத்திரத்திலுயர்கருவூர்ப்
பதித்தலைவர்க்கிதத்தவிழாப்பொலிவுபெறப்பணுவித்தான். ()

இவ்வாறுசராசரங்களியற்றிவரம்பலபெற்றுச்
செவ்வாய்வெண்ணகைவாக்கின்றிருவுடனுன்மறைக்கிழவன்
சைவாகமத்தெளிவின்றலைவன்விடைதலைமேற்கொண்
டெவ்வானவரும்போற்றவெய்தினுன்றனதுலகம். (௩௩)

வேறு.

பைந்துழாய்ப்படலைபுனைபரந்தாமனிலஞ்சிநறும்பதுமப் போதில், வந்தவேதியன்வேள்விக்குண்டம்விளைநீறுவிதிவழி யிற்சாத்துஞ், சிந்தையார்முத்திவீடடைகுவர்மந்திரமின்றித் தெளிவில்லாத, புந்தியார்வாளாமெய்பூசிடினுஞ்சிவகணத்திற் பொலிந்துவாழ்வார். (௩௪)

முளரிநான்மறைத்தலைவன்மழலைவரிவண்டிரங்கமுருகு நாறுந், துளபமால்விடையவனைத்தொழுதுவழிபடலுரைத்தா ஞ்சுருதிநூலிற், கிளர்பராசரன்றவத்திலுதித்தெமையாள்வியா தனருட்கிள்ளைபாகன், றளசரோருகமிறைஞ்சிப்பதரிவனஞ் சார்ந்தபடிசாற்றுகின்றும். (௩௫)

பிரமச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் ௬ - ௫, திருவிருத்தம் - உ௬௩.

---

## பதரிவனச்சருக்கம்.

கஞ்சச்செழுமலரஞ்சிப்புனலளறுறவேகவினுவவரிமா லா, யெஞ்சிப்புடவியிடந்துட்கவலைகொடினநேடவுமரியனநூ லோர்,நெஞ்சப்பொருளினவன்பார்க்கெளியனநிலைநாடகநவிலு வகீர்சூழ், செஞ்சொற்றெரிதமிழ்வஞ்சிப்பதியுறைதிருவாநி லயிறையவர்தாளே. (௧)

வேறு.

ஆண்டனைமாமுனிவருமர்ச்சனையாற்றியண்ணலருள்
வேண்டியிருக்கையினகன்றாருண்மறைவியாதமுனி
பூண்டுநிரந்தரம்பரனைப்பூசைபுரிவதுகருதி
மாண்டமனத்தினனாகிவரதனையேத்துபுநின்றான். (௨)

ஏத்தலுமாமணிமன்றினெழினடனம்புரிஞானக்
கூத்தனிமயாசலப்பைங்கொடியொருபங்கினனாகிப்
பாத்தனிரதங்கடவும்பால்புரைவெள்விடைமீதிற்
பூத்தனனற்சுடரிலிங்கத்திடைநின்றும்போந்தருளி. (௩)

நெக்குருகியிறைஞ்சுவியாதனைநிமலன்விழிசாத்தி
மிக்கதவமறைமுனிவவிழைந்தமைகேட்குதியென்ன
நக்கவனையருச்சித்துநனிதவமாற்றிடவீண்டு
தக்கதலனருளுகெனச்சசிபுனைவேணியன்சாற்றும். (௪)

உற்றுரையுநமதிருக்கையக்கினிதிக்குத்தரபாற்
சிற்றிலைநன்கனிப்பதரிதிகழ்வனமொன்றுளதவணி
னற்றவவைகுதியென்றாவிற்றுநகுதலைதரித்தோன்
மற்றவனுக்கருள்வழங்கியுளர்குறியினிடைப்புக்கான். (௫)

எந்தையருளியவாற்றாலேதமுனிவியாதமுனி
முந்தைமலமுருக்கியமாமுனிவரருமறைக்கேள்வி
மைந்தர்பலர்புடைநெருங்கமலர்ப்பதரியாணிறைந்த
வந்தவனந்தனக்குரியவாச்சிரமமெனவடைந்தான். (௬)

வேறு.

இரந்தையவ்வனமென்னினுமிலஞ்சிமாதுளைவேய்
நரந்தைசம்பிரநாளிகேரஞ்சுரபுன்னை
செருந்திதாதகிசெண்பகம்பாதிரிபலாசு
குருந்துசந்தனங்குங்குமங்குரவுதக்கோலம். (௭)

வில்லுவம்பலாவாசினிவிளாக்கரவீர
நெல்லியாம்பிரம்பிப்பிலகீர்வஞ்சிகியமங்
குல்லைமல்லிகைதுருக்கத்திவெட்சிகுங்குலிய
முல்லைபித்திகைமுதலியமாஞ்செடிமொய்க்கும். (அ)

கொன்றைமுன்னரோரெரிமரங்குலவுதன் மாலை
துன்றுகாலையினதன்மிசைப்புட்குலந்துவைத்தல்
கன்றுழைக்கரன்முன்றிலிற்கார்த்திகைத்தீப
நின்றெழும்பொழுதன்பர்களார்ப்பனநிகரும். (௯)

கலம்பெய்வெட்சியினிறைவுறமலர்ந்ததண்ணறும்பூ
சிலம்பிநூலினுண் மறைந்ததனிடையொளிதெரித
லலம்புநீர்முடியந்தணனழல்புரைமேனி
யிலங்குவெண்டிருநீற்றினூடிருத்தலேயேய்க்கும். (௧௦)

தூங்கணங்குரீஇக்குடம்பைகணிரைநிரைதொக்குத்
தேங்கமழ்ந்தபூம்படப்பைகடொறுந்தொறுஞ்செறித
ருங்கருந்தவமுனிவரர்தனித்தனியொடுக்க
மாங்கமைத்துமாதவம்பலவாற்றுதல்கடுக்கும். (௧௧)

நீடருந்தவமிழைக்குநர்நெக்குநெக்குருகிப்
பாடலேடவிழ்த்திருகணீர்பனித்திடலன்றி
மாடணைந்தபூந்தணவனங்களுந்தினமு
மேடவிழ்த்துளநெகிழ்வுறநெடுங்கணீர்நிறைக்கும். (௧௨)

முற்றொருங்குணர்ந்தாற்றியநோன்பர்முக்குறும்புஞ்
செற்றுநல்விரதம்புரிபலன்கொடுதிகழ்வார்
மற்றையோரவரன்றியுமவ்வனமரங்க
ளுற்றமாவிரதம்புரிபலன்களோடுறையும். (௧௩)

மோனமாப்புலனடக்கிநீண்மூச்சவித்திருக்கு
ஞானவாட்படைத்திறலினர்நான்மறைமுடிவு
போனகேள்வியாமுதுக்குறையவர்பொறிதேற
வீனவல்வினைக்கிழங்ககழ்ந்தினிதுவீற்றிருப்பார். (௧௪)

கறையெறிந்தவெண்பல்லினர்கமலனும்வெட்க
மறையெறிந்துசேப்பொழுகியவாயினர்விதிக்கோ
லுறைதரும்புனற்குண்டிகைக்கையினருரத்திற்
செறிமுந்நூலினர்மரவுரித்துகினர்திகழ்வார். (௧௫)

வேறு.

முருகுயிர்க்கும்பசுந்தென்றன்முளரியசோகந்தளவ
மருமலர்ச்சூதங்காவிமதுகரங்கோகிலங்கிள்ளைச்
§ செருமுதன்மாதவர்க்குடைந்துதேர்விசிகநாரிசின்னம்
பரிவிடுத்துப்படைமாரன்புறங்கொடுத்தபான்மையதே. (கசு)

பாண்மிளிரமறையாடும்பனவர்குறுஞ்சாலைதொறு
நாண்மலர்செங்கனிதருப்பைநன்கமைத்துப்பாந்தளுமிழ்
சேணவிர்செங்கதிர்விரிக்குஞ்செய்யமணிச்சுடரேற்றி
மாணவர்போற்செம்முகத்தகருமந்திவழிபடுமால். (கஎ)

வேறு.

முதுநான்மறைமகராலயமூழ்கிப்பவநீக்குந்
துதியாகமநதித்தீம்புனறோய்ந்தேதமகற்றும்
புதிதார்தருமம்பூத்தபுராணத்தடம்படிந்து
கதிநீடிருந்துறைசேர்ந்துநெஞ்சுவகைக்கரைகாணார். ( )

செறியுந்தவமுனிவோர்மனத்திமிரந்திசைபோகி
மறியும்படியுதயஞ்செயுஞானச்சுடர்மான
வெறியுந்தியமலர்க்கானிடைவீங்கும்மிருளிரியப்
பொறியுந்துபையரவின்மணிபொழியுங்கதிர்நிலவும். (கக)

வேறு.

இன்னதாபரமக்கொடிமுதலியயாவு
மின்னகாலத்திலின்னவையளிக்குமென்றியம்ப
லின்னகாலமென்றொருகாலத்திலீயு
மின்னபலவளர்தருவனப்பெருமையாரிசைப்பார். (உ௦)

அந்தநீள்வனத்தாயிடையளவின்மாணுக்கர்
சிந்தைதேரருந்தவத்தினர்திசைதிசைமொய்ப்பப்
பைந்துழாய்முகிற்கலையெனவரும்பராசரன்றன்
மைந்தனவ்வழிவைகினன்மழைவளஞ்சுரப்ப. (உக)

---

§ செருமுதல் - எதுகைநோக்கிவந்தது.

வேறு.

அணுகுமுனிவரனெழுநாவழற்கிறைவன்றிசைமாழை
நணுகுநதிக்கரையருகினுதக்கெனநான்மறைகொழுந்தி
னுணுகுபொருளுருவர்சொன்றுளததன்கீழ்நுவலவரு
மணிகொடுதெண்டிரைகொழிக்குமொருதீர்த்தம்வயங்குமால்.

செவ்விதரும்பிப்பிலமாதீர்த்தமதன்றுறைபடிந்து
நவ்விவிழியுமைபாகனருச்சனையினலர்திளைத்து
வவ்வியகாயத்ரிமாமனுவினுளவுறுப்பனைத்தும்
வெவ்வினைதீர்தரவருளிவேதியருக்களித்தருளி. (உ௩

வியாதமுனிவரன்பதரியிளிர்வனமேவியதுரைத்தாம்
புயாசலரெண்டிசைப்பாலர்புணரிவிடநுகர்பெருமான்
மயானநடனவில்பாதமலரிலருச்சனையாற்றித்
தியானமனந்திளைத்தடைந்தபடிதெரியச்செப்புவாம். (உ௪)

பதரிவனச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் எ-ம், திருவிருத்தம் - உஅஎ.

---

## திக்குப்பாலகச்சருக்கம்.

---

செறிகானடைந்துசிரமார்புடைந்துதெளிநீர்குடைந்துசகமேல்
வறிதேதிரிந்துதவமேபுரிந்துமறைநூல்புரிந்துதிரிவீ
ருறுவோரிறைஞ்சிமலர்தூவவஞ்சியுறுவார்விரிஞ்சனெடுமா
லறியாதமுன்பரணிமாலையென்பருளீயுமன்பரெனுமே. (க)

வேறு.

வயிரவாட்படையுழவன்மடலவிழ்கற்பகமலராற்
கயிலைநாயகன்மலர்த்தாள்கருவூரிலருச்சித்து
வெயிலுலாவியமௌலிவிண்ணவருக்கரசாகிப்
பயிலுநீள்சனகவுலகெய்துவரம்படைத்ததனால். (உ)

வெய்யகதமொழிக்கடவுள்விமலனேவந்தனையாற்றிச்
செய்யமகங்களுக்குரிமைதிகழ்தென்கீழ்த்திசையடைந்தான்
பையரவனடியின்வழிபாடுபுரிந்தருமறலி
வையமெலாநடுவெனெனத்தென்றிசையாள்வரம்பெற்றான். (௩)

திருமருவுமாயனுடன்றிருகுசினத்தினனாகிப்
பொருதமுராசுரன்மரபிற்பொறிவிழிக்காருடற்பேழ்வா
யருவரையினுறழ்திணிதோளக்கினிபக்கணனென்னு
நிருதனுதலியசிறுவனிகழ்வலியினாற்பெரியன். (ச)

ஒருவரவனுடனெதிர்ப்போருடற்றிமலேவுறுவலியும்
பொருதிறனுமின்மையினாற்புனைந்தனன்றுற்சயனெனும்பேர்
தருமமனஞ்சலிப்பமறந்தலையெடுப்பக்கொலைபடைத்த
கருவியுணவினுந்துயிலுங்கனவிலுங்கைநெகிழாதான். (ரு)

அடவியிடைத்தழல்வேள்வியாற்றுநருக்கிடர்விளைத்தும்
புடவியிற்பல்லுயிர்யாக்கைப்புலவுவாய்கமழநுகர்ந்
துடல்வளரக்கொலைவளர்த்துமுறுவராச்சிரமமெரி
படவிளித்துநிசாசரரைப்பரிசனரைப்புரிந்தளித்தும். (சு)

பழித்தொழில்கள்புரிந்துபெரும்பாவமுருவமைந்ததெனக்
கழித்தனன்சில்பகற்சின்னாட்கானகமுங்கனவரையுஞ்
செழித்தனனிவ்வாறுதிரிதினத்தொருஞான்றரியநுதற்
கிழித்தவிழியினன்வைகுங்கெருப்பபுரிதனைக்கண்டான். (எ)

அதிர்திரைநீருலகினுளவாரணியங்களிற்சிறந்த
விதுவுமொருவனங்காண்டுமெனவடையுமேல்வையினின்
மதுரமொழுகியகனிவாய்வடிவுடைநாயகிபாகன்
பதுமமலர்ப்பதமுனிவர்பழிச்சிவழுத்திடல்காணு. (அ)

அத்தலத்தின்விசிட்டமோவலதவன்முற்பவத்திழைத்து
வைத்ததவப்பயன்கொல்லோமனம்புத்தியாங்காரஞ்
சித்தமெனுங்கரணங்கடிரிபின்றித்திரியாநாட்
கைத்தலத்தினெடுத்தபடைக்கலந்துறந்தர்ச்சனைபுரிந்தான். ()

கரமுகிட்பவிழியருவிகவிழ்க்குநிசரர்கோமான்
பரசிருத்துகரமுக்கட்பகவனருளியபேற்றுன்
முரசதிரநிருதியெனமுடிபுனைந்துதென்றிசைமேற்
கரசிருக்கைபடைத்தனனர்ச்சனைப்பயன்மற்றெளிதன்றே. ()

மாரிகொடுதெளித்தமலன்வந்தனையாற்றுபுவருணன்
பாரியவேணியனருளாற்பச்சிமதிக்கரசுய்த்தான்
சீரியனுமனலனரன்சேதிமத்தினலகிட்டுப்
பேரியல்வந்தனையாற்றிப்பெற்றனனுத்தரமேல்பால். (கச)

அளகையர்கோனணியிழைகடிருத்தியருச்சனையாற்றி
வளநிலவுமிருநிதியும்வடதிசையும்வரப்பெற்று
னிளமதிவேணியன்பாதமீசானன்வழிபடலா
லுளமகிழ்வினிறையுருப்பெற்றுத்தரகீழ்த்திசையுற்றுன்.(கஉ)

என்டருதிக்குறைபாலரிணர்தூவியருச்சித்துப்
பண்டருளின்வழிநிலைத்தபரிசுரைத்தாமயனுதித்த
முண்டகநாபித்திருமான்முனிவர்முதலியர்நிலை
கண்டனைவந்தனைபுரிந்தபடிதெரியக்கழறுவாம். (கங)

திக்குப்பாலகச்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆ சருக்கம் அ - இ, திருவிருத்தம் - ௩00.

---

## கடவுளருச்சனைச்சருக்கம்.



முடிசூட்டுசெய்யசடைவீட்டில்வெள்ளமுகநீட்டமெள்ள நகுவார், வடிவேற்றதையலொருகூற்றினல்லமகிழ்வாழ்க்கை செய்யமகிழ்வார், கொடியேற்றுவெள்ளைவிடையேற்றர்சைவர் குடியேறறமுள்ளகருவூ,ரடியார்க்குநல்லரடியேத்தவல்லரருள் வாய்த்தசெல்வரவரே. (க)

### வேறு.

வண்டுளர்தண்டுளபமுகில்வண்ணனழல்புரைவண்ணன்
முண்டகச்சேவடியினருச்சனைவழாமையின்முற்றி
யண்டர்பிரானருளினாலவ்வுழியாயிரந்தோட்டுப்
புண்டரிகமலர்மகளைப்புதுவதுவையாற்றினான். (௨)

மலர்மகளைவேட்டமணிவண்ணன்மதிமுடிவள்ள
லலர்கமலப்பதம்போற்றியவனியளிப்பதுபெற்றாங்
குலவைதிகழ்பிப்பிலமாதீர்த்தமதனுத்தரத்திற்
குலவியுறுதுயில்கூர்ந்துகொழுனியரோடமைவுற்றான். (௩)

ஆரணமாறங்கமுடனமலனையர்ச்சனையாற்றிப்
பேருலகினாரின்னசெயினின்னபெறுவரெனச்
சீரியசெவ்வியவாய்மைசெப்பிநெல்வரம்பெற்றுப்
பாரொடுமுப்புவனங்களெங்கெங்கும்பயின்றிடுமால். (௪)

பரவுசராசனன்வாயுபக்கனபக்கன்பிருங்கன்
விரவியவத்திரிநீரன்னனமிளிர்தூம்பரநன்முனி
யுரனுறுகணுதமுனியுயர்தீர்க்கசிவகனொ
மருமறைமாதவன்முதலோரளவின்முனிவரரெய்தி. (௫)

உறைந்துதழற்கிறைதிசையினுள்ளெரிவேள்விகளோம்பி
நிறைந்தநெடுமூச்சவித்துநிற்குநிலைமையினிலையா
வறைந்துமறையுணர்வுதுறந்தைம்புலவேடரைமுருக்கிச்
சிறந்தசிவகதிவாய்ப்பத்திகழுமருந்தவமுற்றி. (௬)

திசைதிசைகடொறுமநந்தசிவலிங்கமுறைநிறுவி
யிசைதருபூசனையாற்றியெழில்வளர்கோடிச்சுரனை
யசலவஞ்சுளேசனைமானணிகைலைநாயகனை
நசைபெறுசோமேச்சுரனைநன்குறவந்தனைபுரிந்தே. (௭)

ஊனிலையாக்கையின்வாழ்க்கையுளத்தினருவருத்துதறித்
தேனிலையின்றூயமலர்கொய்துசிவானந்தவொளி
யாநிலைநாயகனருளினாதரமுற்றருச்சித்து
வானிலையுமிருங்கதிநல்வரம்படைத்துமகிழ்சிறந்தார். (௮)

குருகுபெயர்க்குன்றமுஞ்சூர்க்கோக்குருவுந்தடிந்தாவி
பருகுசுடரிலைநெடுவேற்பண்ணவனண்ணலையேத்தி [ப்
முருகுயிர்க்குநறுந்தொடையன் மொய்மலர்கொண்டருச்சித்து
பெருகுதிரைகொழித்தெறியாம்பிரவதியின்றீரத்தில். (௯)

குணமொடுதென்னுடல்குழையக்குனிசிலைநாரியிற்பூட்டுங்
கணைவிழுசெய்மைத்தாகமேல்பாலிற்கறைமிடற்றோ
னணைதருமாநிலைக்கீழ்பாலலர்கோபிதாரவனத்
துணைவமுதமயமிதெனவொருதீர்த்தமுதவினான். (௧௦)

அத்தீரத்தறுதொழிலந்தணர்மருவியருமுனிவர்
மொய்த்தீண்டியாச்சிரமமுறைமுறையாய்வகுத்தமைத்து
மெய்த்தேவர்வியப்பெய்தவேள்விதிளைத்தைந்தெழுத்துள்
வைத்தேறுசிவகாயத்திரியெனுமந்திரம்பயின்றே. (௧௧)

கன்னிகாரக்கொழுந்தண்கடிமலர்த்தாதகிநறிய
வன்னிகூவிளையிதழிவாசிகையிண்டைகள்சாத்திச்
சென்னியாலுறத்தாழ்ந்துதெளியமுதகானவிசை
பன்னியாரணம்பரவிப்பரகதியினணைவுற்றார். (௧௨)

ஆதபன்சூழ்தருபதியிலவிர்நிலாக்கதிருமிழுஞ்
சீதகலைமதியாரல்சிந்தைகூரியன்சிறந்த
பீதகன்சாவகன்வசிட்டன்பிறங்குமயணிவர்தத்த
மாதவத்திற்குறிநிறுவிவழுத்திவரம்படைத்துயர்ந்தார். (௧௩)

வேறு.

அரக்கிதீவிழித்தாடகையடல்கொளுமயுதநீடரிமானிற்,
செருக்குதிண்வலித்திறலினள்பசுபதிச்சிவபரம்பரன்முன்னர்,
பெருக்குதீர்த்தமொன்றமைத்ததிற் குடைந்திளம்பிறையணல்
கறைப்பாந்த, ளெருக்குநீண்முடியிறைதிருப்பதமலரேத்தி
வந்தனையாற்றி. (௧௪)

வலிகெழுந்திறற்கோளரிக்குரு[illegible]ன்மாரிசனெனுநாமம்,
பொலிகெழும்புதல்வனையுயிர்த்துயர்ந்துவெண்பொடிநிலவுமிழ்
மேனிச், சலிலமேனியன்றருபெருவரங்களுமாயையுந்தலைப்
பெய்த, வொலிபுனற் புடவியிற் றனதிருக்கையினுறைந்தனள்
சிறந்தம்மா. (௧௫)

வரிசிலைக்கொடிச்சேரனும்புலிக்கொடிவளவனுமலிநீர்சூழ்
விரிதலைப்புவியுயரியகயற்கொடிமீனவர்பெருமானுந்
தெரிவதற்கரும்பசுபதிநாயகன்சேவடிதனிற்பூசை
புரிதவத்தினூற்றிரிபுவனங்களும்புகழ்நிதிஇப்புரந்தாரால். ()

புரந்துநானிலமொருகுடைநிழற்றிவான்புனிற்றிளம்பிறைவாச
கரந்தைநீண்முடிக்கடவுளாலயமுதலியபணிகைப்பற்றி [க்
யரந்தைதீர்தரப்பற்பகலாற்றிவிண்ணமரர்களெதிர்போற்ற
நிரந்தபொன்னுலகடைந்துயர்கற்பகநீழலினுறைவுற்றார். (கஎ)

கோடிலிங்கம்வந்தனைபுரிபலந்தருங்கோடிலிங்கனையன்பி
னூடிமந்தமாருதந்தவழ்பொதிகைமாநற்றவமுனிவேதம்
பாடிவந்தனைபுரிந்தடிபோற்றினன்பச்சிமத்திசைதன்னி
னீடிநின்றொளிவருணனுமருச்சனைநிரந்தரம்புரிந்தானால்.(கஅ)

கயிலைவந்தடைகுநர்க்கருள்புரிதிருக்கைலைநாயகன்பாதம் [தார்
வெயிலிலங்குமென்றூழ்மதிமுதலியர்விழைந்தருச்சனைசெய்
துயின்முகுந்தனேரியர்க்கிறைகரியமாலீசனைத்தொழுதுய்ந்தா
ரயின்மழுப்படைவஞ்சுளேசன்றனையாரிடர்தெரிசித்தார். ()

எம்பிரான்பசுபதிமுதலியசிவலிங்கவந்தனைசெய்தோ
ரம்புராசிசூழவனியிற்பற்பலரறிந்தவாறரைகுற்றாந்
தம்பிரானடித்தாமரையிருதயத்தடத்தலர்தரவானத் [ன்.
தும்பரேத்தவாற் றியதவமுனிவிர்காளென வுரைத்தனன்சூத

வேறு.

திருமருமார்பினன்முதலதீர்த்தருச்சனைசெய்து
பொருவில்வரம்பெற்றதிறன்புகன்றனன்பூதலம்போற்று
பிருகுமுனிவரன்மரபிற்பிறங்கியபார்க்கவனிறைபான்
மிருதசஞ்சீவினிமனுப்பெற்றுயர்ந்தபடிவிளம்புவாம். (உக)

கடவுளருச்சனைச்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் க-இ, திருவிருத்தம்-ஙஉக.

# சுக்கிரனுபதேசம்பெற்றசருக்கம்.

மருத்துளவனைச்சதுமறைக்கிழவனைக்கதிர்மணிக்குலிச னைப்பிறரையே, யருத்திகொடளித்தருள்விளைத்தொருகணத் துழியழித்திடுமுதற்பரமனை, செருக்கிளமதிச்சடைமுடித்தவர் நடித்தவிரிருக்குமையிடத்தமலனோர், செருக்கவுணர்முப்புரமெ ரித்திடுசிரிப்பினர்திருக்கரபுரத்திறைவரே. (க)

வேறு.

அசுரர்புரோகிதனெனவந்தவதரித்தபுகர்முனிவன்
விசுவமெல்லாம்படைத்தளித்துமீளவொடுக்கியவிமல
பசுபதிகோயிலிற்பவனதிசைப்பதரிப்பாலடைந்து
வசுவளர்வேள்வியினுப்பண்வயங்குமொருமலர்த்தாளில். (உ)

பெருவிரலைநிலனூன்றிப்பிறங்குமற்றையொருதாளை
மருவுகுறங்கிடைச்சேர்த்திமலர்க்கைசிரமிசைமுகிழ்த்துப்
பொருவருமைம்பொறிகளுமைம்புலன்களும்போக்கறநிறுவி
யொருமைவரமனுவழியொழுகாமேநிலைபெற்று. (ந)

[துச்
செழுத்துப்பொரும்யாக்கை நிலையெனத்தோய்ந்தயனெழுத்
சோரெழுத்துட்படநோன்பின்றுறைபடிந்தோருளம்படிந்த
சொழுத்தினுட்சிறந்ததிருவெழுத்தைந்தினையும்வகுத்
தோரெழுத்துக்கோரிலக்கமாகவுளத்துருவேற்றி. (ச)

வேறு.

காலகாலனைத்தெரிவரும்பொருளினைக்கமலனோர்சிரமு ண்க, பாலமேந்தியகையனைமெய்யனைப்பைந்துளவனைக்கோ த்த, சூலபாணியைமனுதிகட்கனுகொணுத்தோன் றலைத்தொ லையில்லாக், கோலம்வேறுவேறுகி யொன்றாகிய குணமிலாக் குணத்தோனை. (ரு)

அஞ்செழுத்தொருவடிவெனவோங்கியவமலனையழிவில்லாச்
செஞ்சுடர்ப்பரம்பரமனையசலனைச்சிற்சொரூபனைஞான
நெஞ்சகத்தினுளேற்றியவிளக்கினைநிமலனைநிலைபெற்ற
பஞ்சவத்தையுமொருவிநின்றாடியபசுபதிப்பெருமானை. (சு)

கோட்டிளம்பிறைக்கொழுந்துவெம்பணியலைகொழித்தெ
றிதிரைக்கங்கை, காட்டுவேணியனாகவுங்கதழெரிக்கலைமதிக்
கதிரென்றாழ், நாட்டமூன்றினனாகவுமாகமேனனுகலார்புர
மூன்றும், வூட்டுபுன்னகைமுகிழ்த்தசெவ்வாயினனாகவும்மணி
வாய்த்த. (எ)

மகரவார்குழை வளரொளித்தோடிவைவயங்கு நான்மறைவா
பகரருந்துணைச்செவியினனாகவும்பண்ணவனயன்மாய [ணர்
னகரம்யாவுமற்றழிந்தொழியாவகைநரலையிலெழுநஞ்சம்
புகரறும்படிபுனைதருகந்தரனாகவும்பொலிவெய்த. (அ)

திணிகொளெண்புயனாகவுமான்மழுச்செறிகரன்றிரிசூல
மணிகரன்வரதாபயனாகவுமழல்விழிப்புலியாடை
பணிநெருங்கியகச்சினனாகவும்பாரிலோர்பதமூன்றித
தணிவிலாதொருபதமெடுத்தாடியசம்புவாகவுநண்பால். (கூ)

தூமவார்குழைத் துடியிடைப் பணைமுலைச் சுதைநிலாநகைத்
வாமபங்கினனாகவுமத்தனாரீச்சுரவடிவாயு [தோகை
மோமெனுந்திருவெழுத்தினனாகவுமுணர்வறுமொலிவீறுஞ்
சாமவேதநீடுருவினனாகவுந்தனித்தனிதியானித்தே. (க0)

தெளிவிலங்குநெஞ்சகமிகநெகமதித்தெண்ணிலாவென வோங்
மொளிவிளங்கியசுங்கவன்பங்கயன்புங்கவருவப்பெய்த [கு
வளிவிளைந்துளகடவுளைவருடமீரைம்பதுபிறழாமை
வளிநுகர்ந்துமெய்வருந்தவுமலைவறமாதவம்புரிநாளில். (கக)

போற்றிநாணிலம்புரிசிவநிசிதனிற்புனிதமாதவமுன்னி
யாற்றிநான்மறைசாற்றியபார்க்கவனவனெதிரடர்வெள்ளை
யேற்றினாயகிவடிவுடையிமகிரியிறைவியோர்புடைதோன்றத்
தோற்றினானயனரிமுதலியருளர்ந்தோற்றியுந்தோற்றாதான். ()

இந்தமாதவமிழைத்தனைமகிழ்ந்தனம்வருகபேரெழில்வெள்ளி
சிந்துதெண்டிரைமாலத்தாருயிர்சிதைந்தவாசிதையாமை [ச்
வந்துதோன்றியமிருதசஞ்சீவினிமந்திரம்விழைவுற்றாய்
தந்தனம்மெனச்செவிப்புலப்படவதுசாற்றினன்றனிநாதன்.()

சொற்றபின்னரின்வெள்ளியைநோக்கிநீசுங்கவதொழுதெம்பா
லுற்றமந்திரமசுரருக்குரைத்திடலொழிகுதியெனவாய்மை
முற்றநல்கியுய்குதியெனவவன்சிரமுடிமிசைப்பதஞ்சேர்த்திப்
பெற்றமூர்பெருமானிலிங்கத்தினுட்பெட்புடன்மறைந்தானால்

வேண்டுநல்வரம்விழைந்தவைவேண்டியவிளங்கொளிப்புகர்ப்புத்தேள், பாண்டரங்கனம்பசுபதிநாயகன்பங்கயமலர்ப்பாதம், பூண்டவன்பொடுமென்புநெக்குருகிடப்பூசைபன்முறையாற்றி, யாண்டநாயகனருளியவிடையொடுந்தன்பதியடைந்தானால். (௧௫)

அடைந்தசில்பகலகன்றபின்னமரருமசுரருமடுபோரின்
மிடைந்தகாலையின்வேலையின்மந்தரமேருவிற்பணிபூட்டிக்
கடைந்ததெள்ளமுதாசனர்க்குறும்பிசிதாசனர்கடற்றனை
யுடைந்துவீந்ததுகண்டனன்விண்டவழொளிகவினியவெள்ளி

நெளிந்ததெண்டிரைப்பாற்கடற்பிறந்துவாணீணிலம்பணிப்பெய்தச், சுளிந்தநஞ்சமுதுண்டிருண்மிடற்றினன்றுகளறநணிநல்குந், தெளிந்தசிந்தைதேர்மிருதசஞ்சீவினித்திகழுமந்திரங்கொண்டு, விளிந்ததானவர்யாரையுமெழுப்பினன்விண்ணவர்வெரூஉக்கொள்ள. (௧௭)

கண்டவானவருளங்கவன்றுலந்தவக்கடுந்தயித்தியர்தம்மைக், கொண்டவாறெனிச்சுங்கவனெழுப்பினன்குறையிலையவர்க்கென்னுப்,பண்டைநான்மறைப்பொன்னவனிருக்கையிற்படர்ந்துபண்ணவர்யாரும், வண்டலம்புதாட்பங்கயமிறைஞ்சினர்வந்தவாறுரைசெய்தார். (௧௮)

புலவர்வாசகங்கேட்டலுஞ்சுரர்குருபுனிதமாதவத்தின்ற
வலகில்கேள்வியன்கசன்முகநோக்கிநீயவிரொளிப்புகர்தன்பா
லுலவிமேவியபுரிந்துவீடியவுயிரொப்பனவுதவுஞ்சீர் [ன்.
நிலவுவிஞ்சைகற்றீண்டணைகுதியெனநிகழ்த்தினனிகரில்லா

அந்தணன்சுதன்றனக்கறைதலுஞ்சுரராருயிர்தருவிஞ்
சை, மந்தணங்கொடுகற் றுவந்தாலழல்வளர்மகத்தவிப்பாக,
முந்தையோர்க் குதவியபடிதருகு முறைமையினெனவாசா
ன், றந்தைமைந்தனுஞ்சிந்தைநொந்தகன்றனன்சல்லியன்றனதி
ல்லின். (உ0)

தருவர்மந்திரிசரண்சரணெனமுறைதாழ்ந்தெழுந்திருசெ
ங்கை, முகிழ்வரும்படிவணங்கலுஞ்சங்கவன்முகமலர்ந்தினனி
ன்பி, னெகிழுநெஞ்சினனெனத்தெரிந்தருகிடைநீவருகென
வாய்மை, மகிழ்வுசெய்திவண்வந்ததென்மொழிகெனமறையவ
ன்சேய்கூறும். (உக)

அய்யநின்பணிக்குரியமாணுக்கரிலாயவாறடித்தொண்டு
செய்யவந்தனனெனப்பளிங்குளந்தெளிவரவிழைவுறச்செப்பி
வையமேற்பணியாவுளபுரியினுமனஞ்சுளியாதாற்றி
மெய்யுறுஞ்சுரர்பருவமோராயிரமேவியங்குறைகுற்றான்.(உஉ)

ஏவலின்றலைநிற்குமக்கசனிடத்திலங்கொளிப்புகரின்ற,தே
வயானியென்றொருமகள்சிந்தைவைத்தவன்றினம்வரல்வேண்
டிப், பூவர்சோலைபுக்கெனக்குநீமறையவபுதுமலர்கொடுநித்தம்,
வாவெனும்பணிமொழியவம்மொழிப்படிவழாதளித்திடல்செய்
வான். (உங)

தேனரற்றுமென்மலர்கொடுவருந்தொறுஞ்சிந்தைசெய்த
வன்செய்ய, வானனத்தைநோக்குபுபலகலைவலோயங்குலியுளர்
யாழின், கானவித்தைகளிசைக்குதியெனுமணிக்கனங்குழை
செவிதாழ்ப்பத், தானிசைத்திடல்புரிகுவனின்னணந்தார்க்
தொழுகலுமோர்நாள். (உச)

ஆனினம்பரித்திடல்புரிந்தந்தணனருளியகசன்போய
கானிடைத்தயித்தியர்குழீஇயிவன்புகர்கடிமலர்ப்பதம்போற்றி
வானவர்க்கெலாமளிப்பமீட்டுயிர்தருமந்திரம்பெற்றுய்ந்தா
னூனுடற்கொடுவெரிக்கிரையாகமற்றுயிரொழிக்குவமென்று.()

சென்றுவெவ்வழற்றயித்தியர்பொன்றருஞ்செல்வனைச்செறுத்தாவிக், கொன்றுவீற்றுவீற்றுயரிந்தடுபுலிக்குழுவினுக்கிரையிட்டா, ரன்றுநள்ளிருளடைந்தும்வந்திலன்கசனடுத்ததென்னெனமாழ்?, நின்றுகெட்டுயிர்த்தவிரிழைதந்தையானிகழ்த்தலுமவனோர்ந்து. (உசு)

வெள்ளிபொன்மகன்வருகெனவிளித்தரன்விளம்புமந்திரங்கூறப், பள்ளியிற்றுயிலுணர்ந்தவனெழுந்தெனப்பார்க்கவற்கெதிற்புக்கா,னள்ளிருட்பிழம்படுத்தும்வந்திலையுனக்கடுத்ததென்னதையிங்ஙன், றெள்ளியோயறை கென்றலும் விளைந்தவை செப்பினன்மறைச்செம்மல். (உஎ)

பின்புமோர்பகற்சுக்கிரனேவலிற்பீதகன்றருமைந்தன்
முன்புபோற்பசுமேய்ப்புழித்தயித்தியர்மூரிநீர்க்கடலுப்பண்
வன்புறப்புகுத்தினர்புகருணர்ந்தவன் வரவழைத்தலும்வந்தாங்
கின்பவாரிதிமூழ்கினன்மீளவுமேகினன்பளிங்கேவ. (உஅ)

நிருதராயிடைக்கரந்தருமறையவனிரைநிரைதொகமேய்ப்ப, வருதலுங்கடல் வளைந்தெனச்சூழ்ந்தனர் வாய்மடித்திருகையாற், குருதிசோர்தரக் குத்தினர்மாய்த்தனர்குறைத்துடறனையீர்ந்து, பெருநெருப்பிடைமடுத்தனரெரித்தனர்பிசைந்தனர்பொடியாக்கி. (உகூ)

கும்பமொன்றினிற்பெய்துபைந்தருவளர்கோநகர்மிசைவைகு, மும்பருண்சுரையுடன்கலந்திலங்கொளியொன்றியோனுவப்பெய்தச், செம்பொன்வட்டிகைவாக்கிமுன்வைத்தனர்வஞ்சனைச்செயலெண்ணு, னம்பினன்றினங்கொணர்ந்தளித்திடலெனநறுமதுவினிதுண்டான். (ங0)

அற்றைநான் றுநண்பகற்பொழுதொருவியதடைந்தது கருங்கவ்குன், முற்றநோற்றவந்தணன்மகன்வந்திலனெனமதி முகம்வாடிச், சிற்றிடைப்பெருமுலையினள்கவலையிற்றெரும்வர லுறல்காணுப், பெற்றசுக்கிரன்வருந் தலைதிருந்திழைப்பிடிந டையெனப்பேசி. (ருக)

வருகவந்தணனெனத்திருமந்திரமனந்தினைத்திடுவெள்ளி [ப் திருவயிற்றிருந்தெழுந்தடிகேள்வருந்திறனெனக்கருளென்ன பொருவில்பார்ற்கவனிவ்வினையம்புரிபுரையர்யாரெனவுள்ளங் கருதிவெவ்வியவசுரர்கைதவமெனக்கருத்துறவுணர்ந்தானல்.

அறிந்தவன்றனக்காங்கிலைநாயகனளித்ததொன்மறையங் கஞ், செறிந்தமந்திரமுளத்திடைமொழிந்திடிற்றெளிந்ததை வயின்போழ்ந்து, பிறந்துவந்துபின்னம்மையும்பிழைத்திடல் புரிந்திடும்பெரிதென்று, விறந்துளோர்தருமம்மனுப்போத கத்திசைத்தனன்வருகென்றுன். (ருரு)

சுங்கவன்சடலம்பிளந்துதித்தனன்றென்மறைக்கசன்வெள்ளி யங்கிறந்ததுகண்டனன்காண்டலுமளித்தமாமனுவாய்ந்து தந்தவாறுயிரெழுப்பலுமெழுந்தவச்சல்லியன்மகிழ்வெய்தி பிங்குநீகுருபுத்திரனெனும்பெயர்புதுக்கினையெனப்பேசி. ()

யாவராயினுமிச்சுரைபருகினோரிருநிலந்தனில்வானிற் பாவகாரியரற்பசண்டாளராய்ப்படரெரிநிரயத்தின் மேவுவாரெனச்சபித்தனன்பாற்கவன்வியாழமாதவன்றந்த தேவைநோக்கிநின்னிருக்கையிற்செல்கெனச்செல்கவென்றெ ழுபோதின். (ருரு)

வேறு.

தெளிமறைப்புகர்தருதேவயாணிவந்
தளியவென்றனைப்புதுவதுவையாற்றுகென்
றெளிவளர்கசன்றனக்குரைப்பமற்றவன்
குளிர்மலர்புனைகருங்குழலைநோக்குறு. (ருசு)

மாதுநின்ளுதைதயென்குரவன்மற்றவ
னோதருவயிற்றில்யானுதித்தல்கண்டுநீ
யேதமூர்பழிமொழியிசைத்தின்றேழையாம்
பேதையரெனப்பகர்பெயர்நிறுத்திணை. (௩எ)

பொன்மகனிம்மொழிபுகலலும்புகர்
தன்மகள்சபித்தனடாக்கைதமுந்துற
நின்மனநிலைபெறநெகிழுமன்புடன்
சொன்மனுவுனக்கதுசேர்கவென்றரோ. (௩அ)

தந்தைசொன்மந்திரந்தணக்கவென்றனை
நீந்தனையறைந்தனெநெடுங்கணும்மறை
யந்தணர்மணநயவாமையன்னிய
மைந்தர்தோள்சேர்கெனவைதுபோயினான். (௩௯)

போயபின்வேறொருபுனிதவேதியற்
காயதொன்மந்திரமறைந்துவிண்மிசை
வீயுயிரெழுப்பியவிஞ்சையாற்கசன்
பாயொளிசேரவிப்பாகம்பெற்றனன். (௪0)

என்றுசுக்கிரனரனிடத்திலிம்மனு
வன்றுபெற்றுயர்ந்தவாறறைந்துமாதவந்
துன்றியகூதமாமுனிவன்றொல்புலன்
வென்றதாபதருடன்மீட்டுங்கூறுவான். (௪க)

சுக்கிரன் உபதேசம்பெற்றசருக்கம் முற்றுப்பெற்றது.
ஆக சருக்கம் க0-ல், திருவிருத்தம்-௩௬௨.



## முசுகுந்தச்சருக்கம்

நலமலிபோதாகுழையணிகாதாநடனவினோதாமலர்மீதா
ளிலகெழின்மாதார்மனைதனிலேதானிரவொருதூதாயிசைபாதா
கலைதெரிவேதாகமநவில்கீதாகரபுரநாதாகணநாதா
வுலகினுண்மாதாவயனிடைபோதாதுனதருளேதாபரநீதா. (க)

வேறு.

மாதவமுனிவிர்காள்வாதனைப்புகர்
போதமோடருச்சனைபுரிந்ததோதினுங்
கோதறவணிமுசுகுந்தன்பூசைசெய்
தாதரமுறவடைந்ததுவிளம்புவாம். (உ)

வேறு.

வருக்கையிலாயத்தேன்வீவருமிருல்கிழித்துவண்டேன்
பெருக்கையிலாயமந்திப்பிணுவுடன்கவென்போந்து
தருக்கையிலாயங்கேயுஞ்சாரல்வாய்த்தவத்தோர்போற்றுக்
திருக்கையிலாயமென்னுந்திகழ்சிலம்பிடையோர்ஞான்று. ()

பூவினைதேனிற்பாலிற்பொருவில்யாழிசையிற்றேய்ந்து
பாவினையாமைநல்கும்பனிமொழிக்கௌரியோடுங்
கூவினைநீழல்வாய்ப்பூங்கொன்றையணிருக்குமெல்லை
காவினையாடலுற்றகாரெழின்முசுக்கடம்பில். (ச)

கரிமுகச்செம்பினேற்றைமுசுக்கலையொன்றுகன்னி
யுருவமுமெந்தைமெய்யும்புதைதரவுயர்வில்வத்திற்
பெருகிலைகொய்துகொய்துபெய்திடப்பிறங்கலீன்ற
திருமகள்காணுவுள்ளந்தியங்கிவெஞ்சீற்றமிக்காள். (ரு)

மாதுநீவெகுளலெம்மைவழிபடாநிற்கும்வில்வ
மீதுறுமுசுவையென்ஞவிழிறுதற்பெருமானந்தப்
போதுணர்வதற்குநல்கப்பொருக்கெனவிழிந்துச்செம்பொற்
றுதுகுமிதழிவேணித்தலைவனைத்தாழ்ந்ததன்றே. (சு)

எந்தையெம்பெருமானின்னையன்னையம்பிராட்டிதன்னைச்
சிந்தனைபுரிதலின்றிச்சிறுதொழிற்புன்மைசெய்தே
னந்தவெம்பிழைதீர்க்கென்ஞவடிதொழுதிறைஞ்சவண்ணல்
வந்தனையெனக்கொண்டாநீவருந்தலைமுசுவென்றோதி. (எ)

நீநமைவழுத்துசீரானீணிதிவரைசூழென்றாழ்
வானவன்குலத்துட்டோன்றிமணிமுடிமிலைச்சிவையந்
தாஞெருகவிகைகீழ்றங்கவாழ்குதியென்றந்தக்
கூனல்வெண்பிறைதண்கங்கைக்குடிஞைவான்சடிலன்கூற. ()

ஏத்துமாமுகவிசைக்குமிருவினைப்பயன்றடுப்ப
நீத்தவெம்பிறவியார்த்துநிகழ்வுறியடியேற்காங்கு
தீர்த்தசிற்பரசம்பூசையுணர்வுதிராமைதோன்ற
மாத்தலனருளியிந்தவதனமும்வழங்குகென்ன. (௯)

முசுக்கலைமொழியவேணிமுடிக்கலைமதியோன்கூறும்
வசுக்கலைமறையோனூற்றிமதிக்கலைமகளைவேட்டுப்
பசுக்களையுதவுங்கற்பபுரியெனும்பதியிற்பானு
விசித்திரமரபிற்றோன்றிமேவுதியிவையாங்கென்ன. (௧௦)

அங்குரைநிகழ்ந்தவாற்றானஃறிணையுருவநீங்கிப்
பொங்குதொல்லுலகந்தன்னிற்புனிதமாமறைகணான்குந்
தங்குமாறங்கமாறுசாத்திரமுதலவாய
செங்கலைபலவுமுய்யத்திகழுயர்திணையிற்றோன்றி. (௧௧)

நிறங்கடையளவிற்சேர்ந்தநீள்விழிமன்னர்சூழக்
கறங்கடையலாநிதானங்கரிபரிகொணர்ந்துசெம்பொற்
புறங்கடையுணங்கிநாளும்போற்றுசெம்பருதிவேந்தாய்ப்
பிறங்கடையெனப்பாருய்யப்பிறந்தனன்கருவூர்தன்னில். ( )

சூரியன்குலத்துட்டோன்றிச்சுதைமதிற்றோற்றம்போலச்
சீரியகலைகளுஞ்சீர்த்தியும்பெருந்திருவுமோங்கி
மூரிவேலரசர்போற்றமுசுகுந்தனெனப்பேர்தாங்கி
வாரிநீருலகமேத்துமணிமிளிர்மௌலிசூடி. (௧௩)

வேறு.

வானிலைத்தூரிரவியொளிவளர்கனகமணிக்குடுமி
யாநிலைக்கோயிலிலடிகளடிகளருச்சனையாற்றி
நாநிலத்தினருவிடையோனற்றானமும்பிறவுந்
தானிலைத்தென்புருகமுறைதாழ்ந்துவழிபடல்புரிந்தே. (௧௪)

எல்லைதீருடலுயிரினுணர்வறவெங்கணுமுலவித்
தொல்லைநான்மறைமுடியிற்சுடருமொளியருளுருவாய்
வல்லைநேர்முலையியவான்மகள்காணநணிபுரியுந்
தில்லைநாடகமுதைத்திழிகளாற்றினைத்தருந்தி. (௧௫)

பொன்றூர்மனத்தினளாய்ப்புனிதமாதவம்புரியுக்
தென்றூர்தனிலேகிச்செழும்பவளக்கொடியெனி
மின்றூர்மதியரவுமிலைந்தவிரிசடைமௌலி
துன்றூர்சுடுமுறுவற்சருதிநாயகற்போற்றி. (௧௬)

அருமறையாரணியமுதலாயதலனருச்சித்து
மருமலர்மானுயர்தவஞ்செய்வளநகர்மீளவுமருவிப்
பொருவிடையூர்ந்துயர்த்தியபுற்றிடங்கொண்டபுண்ணியனை
யொருபெரிழுதும்பிரியாவமையருச்சித்தாங்குறையுநாள். (௧௭)

பொன்னகரிலயிராணிபொம்மன்முலைப்போகநுகர், மன
னவன்பாசறைக்களத்தின்மலைந்துமருவலர்க்குடைந்து, வெங்
கிடவொற்றுணர்ந்துவிரைவினற்படையொடும்போய்த், து
ன்னலரைக்கடிந்துடலக்கண்ணனைத்தோழமைகொண்டே.

காசைமலர்புரைமேனிக்கருந்துழாய்முகிலிடத்தி
லோசைமறையாகமங்களோதியவாறுணற்றுபெரும்
பூசைமுதற்கொண்டருளிப்போகினிதவப்பயனு
லாசையுடனருச்சிப்பவமர்கின்றபெருமானூர். (௧௯)

நீரூர்வெண்டிரையாழிநிலமகளுக்கணியாய
வாரூரினெழுந்தருளவளித்தருளியலர்மடந்தை
சீரூரவ்வூரதனிற்சில்பகல்வீற்றிருந்துசெழுங்
காரூரும்பொழில்சூழுங்கருவூரின்கண்ணுற்றே. (௨௦)

வேறு.

வந்துலைபைந்தளிர்ச்சீறடிப்பேரல்குன்மடந்தை
சந்துமூழ்குபூண்முலைச்சுவடழுந்தியதடந்தோட்
கொந்துயிர்த்துநுண்டுளிநறவூற்றுபூங்கொன்றை
யிந்துவேணியெம்மடிகளையிறைஞ்சினைவகினனுல். (௨௧)

இன்னணம்பொதுக்கடிந்துலகளித்திடுமேல்வை
யன்னவூர்திகண்படைகொளும்பாயினியமேப்பப்
பின்னல்வெண்டிரையந்தரப்பிரளயம்பரிற்
றுன்னலுஞ்சராசரக்குழுமுழுவதுந்தொலைந்த. (௨௨)

தொலைந்தபின்னரிற்சுருதிவேதியன்றுயில்கங்குல்
புலர்ந்ததந்தரப்பிரளயம்போயதப்போழ்தி
லலர்ந்தவேணியனருளினாலார்கலியாடைத்
தலந்தயங்குறத்தந்தனன்சராசரமனைத்தும். (௨௩)

அனைத்துமொய்மலர்ப்பொதியவிழ்த்தாய்பிழிமாந்திக்
கனைத்துவண்டிமிர்கமலனைக்கடுப்பவேவகுத்து
நனைப்படசந்துழாய்ப்புயலெனமனுநெறிநடாத்தி
யனைத்துமுற்றொருங்குணர்ந்தவனினிதுவீற்றிருந்தான். ()

இருக்குமப்பருவத்துதித்திருவிசும்புலக
முருக்குதிண்டிறற்பெருவரச்சூரனைமுதிர்போர்ச்
செருக்களத்திடைச்சுடர்வடிவேலினாற்செகுத்து
மருக்கடம்பன்மீண்டுயர்பரங்கிரியில்வந்தெய்தி. (௨௫)

மாகமென்களிற்றணங்கினைவதுவையாற்றிடுதென்
மேகவூர்தியொற்றுலுணர்ந்தாயிடைமேவி
யேகநாயகன்றூதலபுத்தேளிரையிறைஞ்சிச்
சீகரத்தநீர்வஞ்சியிற்போந்தனன்செம்மல். (௨௬)

போந்துநற்சிவபுண்ணியத்தெளிவுநீர்ப்புணரி
நீந்திமுப்பொருட்கரையறிந்தருட்டுறைநீடி
யேந்துதற்கருந்தவம்பலவிழைந்துவீட்டின்ப
மார்ந்துளோர்ப்பணிந்துறைந்தனனளப்பில்பல்காலம். (௨௭)

அடியர்பாலருள்பழுத்தவெம்மாநிலையடிகள்
கடிநறுமலர்ப்பதத்தினிற்கமழிணர்தூவி
யொடிவில்கேழ்விமாலயன்முதலியருணர்வொண்ணா
முடிவிலாதபேரானந்தமுத்திமேயினனால். (௨௮)

அறிவிலோர்முசுவமலன்மேல்வில்வமென்றழையை
வெறிதிலிட்டிவாறடைந்ததென்றால்விடைப்பாக
னறியமென்மலர்த்தாளினிலதுகொடுவைதீ
ருறுதியால்வழுத்துநர்பெறும்பேற்றையாருரைப்பார். (௨௯)

ஆதலாற்கருவூர்க்கிணையாயதோர்தலனுந்
தீதிலாநிலாயகற்போலொருதேவு
போதுகுழ்சினைவில்லுவம்போலொருபூவு
மோதநீருலகத்திலின்றென்பர்நூலுணர்ந்தோர். (சு0)

மேலவானுருஞ்சிரசதவெற்பினோர்முசுவன்
சூலபாணியைப்பராய்க்கருவூர்தனிற்சேறன்றி
ஞாலமுய்யுறவகுத்தவாநவிற்றினமிப்பாற்
பாலலோசனன்றலத்துளதீர்த்தங்கள்பகர்வாம். (சுக)

முசுகுந்தச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் கக - இ, திருவிருத்தம் - சுகஎ.

---

## தீர்த்தச்சருக்கம்.



வண்டுநாண்மலர்ப்போதுண்டுவெழுத்தநாவுண்டுவாழ்த்திக்
கண்டுநாடுதற்குநாட்டமுண்டிருகரங்கள்கூப்ப
வுண்டுநான்மறைதேர்வஞ்சியொருவனுண்டுறுதிபூண்டு
தொண்டுநாம்புரிதுநெஞ்சேதுயருண்டேதுணிவுகொண்டே. ()

வேறு.

சூதன்றவத்தோர்முகநோக்கினன்மீட்டுஞ்சொல்லும்
வேதம்பயின்மாமுனிவீர்விடைப்பாகன்வஞ்சி
நாதன்றலனிற்றிகழ்தீர்த்தமுந்தீர்த்தநாடிக்
கோதங்கறமூழ்குநர்பேற்றையுங்கூறக்கேண்மின். (உ)

பிரமன்றருகாசிபகோத்திரப்பேறிதென்ன
வரவந்தவன்காலவமாமுனிமாசிலாத
வரமென்புரிநூலினன்கோதமைதீரத்துற்றேன்
பரமன்பதபங்கயம்பற்றியபற்றின்மிக்கோன் (ந)

நன்றென்பினுன்மறைக்கேள்வியன்ஞானபோதஞ்
சொன்றென்மையர்பாற்றொடர்பாயவன்றூய்மைபூண்டு
தன்றேகைகொண்டன்னையர்தந்தையர்தங்கண்மாட்டு
முன்றேதுகுற்றேவலிற்சிந்தைமுயன்றுவைத்தோன். (௪)

பொற்பாவையையொத்துவிளங்கியபொற்புமிக்காள்
கற்பாலுயர்பன்னியறந்தலைகாப்பநாளு
மிற்பாலிருந்தேதமுறாதவளோர்மென்புற்
றற்பாயவன்மேவியவாச்சிரமத்தைநோக்கி. (௫)

ஈவத்துதியானமளிக்குதியென்றுநித்தன்
மேவத்துதியாவும்விளம்பிவிளங்கிவெய்ய
பாவத்துதியாமைமெஞ்ஞானப்பரப்பினுற்ற
தேவத்துதியாம்பெயர்த்தொன்மறைசெப்புமேலோன். (௬)

சீலங்குணமன்னுணர்வுண்மைசெபந்தியான
மேலன்பன்வெறுப்புவிருப்பிலன்மேயமூன்று
காலங்களுமென்றவனைம்புலக்கள்வர்வீசுஞ்
சாலங்களைநூறுதவப்படைதாங்குதக்கோன். (௭)

சென்றன்கடைவாயிற்சென்றுழிச்சேர்ந்துமுன்றி
னின்றார்சிலர்கண்டனர்துண்டநிலாவெண்டிங்கட்
பின்றாழ்சடைப்பிஞ்ஞகன்போல்வரெனப்பெயர்ந்து
பொன்றாமுறைகூறியகாலவற்போற்றிமாதோ. (௮)

துவராடையன்றண்டினன்குண்டிகைதூங்குங்கையன்
பவராசிபறித்தவிரத்தனற்பண்புமிக்கோன்
றவரானவரிற்றலையாயவன்சால்பின்வேறு
கவராமனத்தோனடைந்தானெனக்கட்டுரைத்தார். (௯)

வேறு.

அதிதியர்வந்தனர்கொலெனவகன்மார்துபுறனணையுமள
வின்ஞானத், துதிதிகழ்முனிதேவத்துதியெனவுள்ளுணர்ந்து
சுரநதிநிலாத்தண், மதிதவழ்வேணியனம்பிற்பொன்னடிகாத்
தினனென்னமகிழ்வுதூங்கி, யெதிரிருளைசிரமிழ்ப்பவெழூஉ
த்ருள்கவிங்கெனக்கொண்டிருக்கைசார்ந்தான் (௰)

இறுதிமுதலகன்றவிறையவனியெனத்தவிசிலேற்றி மென்பூ, வறுதரிசிகொபேர்த்தியாசமனூர்க்கியமளித்தஞ்சமிக ளாற்றி, நெறியில்வருமினைப்பாற்றித்திருவுளத்துக்கேற்றபடி நிகழ்த்தவாற்றான், மறுவறுமென்கனிமூலமமுதேற்றியேற்ற முகமன்கள்கூறி. (கக)

யாண்டிருந்திங்கெழுந்தருளிற்றெனத்தீர்த்தயாத்திரை யிற்போகின்னைக், காண்டலின்வந்தனமென்னவெத்தலனுற் றெத்தீர்த்தங்கலந்தீர்வேறுய்ப், பூண்டமுறைதமியேனுக்கரு ளுகெனமலவிருனைப்புறனிற்போக்கு, மாண்டமனத்தினன் றேவத்துதிகாலவனைநோக்கிவழங்கலுற்றான். (கஉ)

போதார்பைந்துணிரின்மணமுயிர்க்குநறும்பொதும்பரிற செம்முகத்தமர்ந்தி, மீதார்தண்பனிக்குடைந்துசுடர்மணித்தியெ னக்காயவிரைந்துசெல்லுங், கேதாரதமொருதீர்த்தம்புட்கர மென்றுளததனைக்கெழிமியாட, லாதாரமெனப்பணிந்தோர்மு த்திவீடடைகுவரீதுண்மையாமால். (கரு)

யாக்கைவிழுந்தவர்முத்தியடைகாசிப்பதியில்வளையுமிழ்தீர த்து, வீக்குதிரையதிர்மந்தாகினிநதியிற்பாலவயிரவாதாமேவிக், காக்குமணிகன்னிகையென்றொருதீர்த்தமது கடவுட்டீர்த்தமற் றைப், பூக்கிளர்வேதியன்முதலோர்தொடுதீர்த்தமனநதமுளபு கலுங்காலே. (கச)

விரியுமறைபழிச்சுபிரயாகைதனில்விளங்குதிரிவேணிதீர த்த,மரியகயைதனிலுரியபிதுர்தீர்த்தமலம்புதியிலவன்னிதீர்த் தங், தெரிசெய்மணிகூடத்திலொளிர்திரிபுட்கரதீர்த்தமுதலதெ ண்ணீர், நருமதைகோதாவிரிகாளிந்திதுங்கபத்திரைபார்நலங் கொடீர்த்தம். (கரு)

பருப்பதத்தம்பாதீர்த்தம்பலன்றருமாளவ்வியத்திற்பானு தீர்த்தம், விருப்புறுசத்தாரணியமிளிர்பிரமதீர்த்தமலர்மிசையி ன்வைகுர், திருப்பொலிகாளத்திதனிற்பொன்முகலியாகாச தீர்த்தஞ்செம்பொன், றருப்பொலிபிற்பாசகத்திற்றங்கியவாரு ணதீர்த்தஞ்சாற்றுங்காலே. (கசு)

ஆலங்காட்டேட்குகதீர்த்தம்மணிகாஞ்சியிலணைவேகவதி
யாதி,சிலங்காட்டெண்ணிலதீர்த்தம்மருணாசலத்திலயன்றினைத்
ததீர்த்தங், கோலங்காட்டியதுர்க்காதீர்த்தமுதலியதீர்த்தங்குல
வுஞான, மூலங்காட்டியவிருத்தகிரியின்மணிமுத்தநதிமுதல
தீர்த்தம். (௧௭)

ஞானவானந்தநிருமலன்கனகமணிமன்றினாப்பண்ஞாலம்,
வானநான்மறைதுதிப்ப நடநவிலுமவிரொளிதன் மணிப்பொற்
கோயிற், கானவோருழியமலவடிவாயசிவகங்கைமுதலாவந்த
ண், டேனவாவும்பொழில்சூழ்தில்லையிலெண்ணிலதீர்த்தந்திக
ழுமன்றே. (௧௮)

செய்யதிருவாரூரிலுளதேவதீர்த்தமுதலியதீர்த்தங்க [த்த
டெய்யமறைவனத்தின்மத்தியானமணிகன்னிகைதொல்வேததீர்
மையறநீடியகோடிதீர்த்தமுதலியதீர்த்தம்வானநாட்டி
லையர்புகழ்புகலூரிலக்கினிதீர்த்தம்முதலாவளவிறீர்த்தம்.(௧௯)

தேவர்தொழுஞ்சுவேதவனத்தினிற்காயத்திரிதீர்த்தந்திரு
மால்விண்ணோர், யாவருமெண்சாய்க்காட்டிற்சாயாதீர்த்தங்கட
லூரியமதீர்த்த, மோவொருகாளியிற்பிரமதீர்த்தமயிலாடுதுறை
யோவாதுற்ற, காவிரியிற்றுலாத்திங்கடனிற்கங்கையுதித்திடு
மோர்கடவுட்டீர்த்தம். (௨௦)

புள்ளிருக்கும்வேளூரிற்போர்கெழுவேற்படைக்குமரன்பொ
ருவிறீர்த்தந், தெள்ளிருக்குநிகர்பணைத்தோட்டாடகையாற்றி
கழ்தீர்த்தந்தெளிவோர்சிந்தை, யுள்ளிருக்குமொருவனாவடுது
றையிற்சுரபியினாலுற்றதீர்த்தங், கள்ளிருக்குமலர்ச்சோலைவீழி
மிழலையிற்றிகிரிகவினுந்தீர்த்தம். (௨௧)

மடைவயலிற்கயல்பாயும்வாஞ்சியத்திற்சூரியனால்வயங்குந்
தீர்த்த, மிடைமருதூரினிற்றிகழ்காருண்ணியதீர்த்தந்தரங்க
மிரங்கியாரப், புடையெறிகாவிரிதனிற்றைப்பூசமுதலியதீர்த்
தம்புனிதவெள்ளை, விடையவனீச்சுரத்தின்மிளிர்தோகைமயி
லூர்திவிதித்ததீர்த்தம். (௨௨)

வயங்குகும்பகோணத்திலுலகுய்யமறைபயின்மாமகமென்
றங்க, ணியங்குதிரைக்கன்னிகாதீர்த்தமலையெறிதருகாவிரிபி
னேமி, முயங்கியதீர்த்தஞ்சத்திமுற்றத்தின்முத்தலைவேன்மொ
ழியுந்தீர்த்தம், புயங்கனுறைவலஞ்சுழியிறபொன்னிவலஞ்சு
ழித்தெறியும்புனிததீர்த்தம். (௨௩)

ஐயாற்றிற்பஞ்சநதிமுதலியதீர்த்தங்களுளவானைக்காவின்,
மெய்யாயசம்புநதிசூரியபுட்கரணிமதியினிருந்தீர்த்தஞ், செய்
யார்தண்புனனுட்டிற்சேட்டிளம்பூங்கொன்றையினந்திங்கட்க
ண்ணி, பையாடலரவணிவோன்றலங்களெல்லாந்தீர்த்தமுள
பகருங்காலே. (௨௪)

பெருக்கூடலின்றிமலர்ப்பெண்ணணங்குநாமகளும்பிறங்
கிவைகுந்,திருக்கூடலுறையறைநீர்த்தெண்ணிலாமதிவேணிச்
சிவனேர்பங்கின், மருக்கூடலங்கோதைமுன்றிகழ்பொற்றும
ரைமாதீர்த்தம்வந்தோர், கருக்கூடலொழிவைகைமுதலியதீர்த்
தங்களுளகருதுங்காலே. (௨௫)

மனுக்கோடியெழுவகையுமறைநான்குமாகமமும்வகுத்த
சோதி, பினுக்கோடீரனைமாயன்பின்றொடரும்பிரமகத்திபெரி
திளக்கு, மனுக்கோடியிடவருச்சித்துய்ந்தகந்தமாதனத்தில
ணிசேர்சேதுத், தனுக்கோடியிலக்குமணதீர்த்தமுதலியதீர்த்தந்
தயங்குமன்றே. (௨௬)

நற்றுலம்விசும்புறைவோர்சரணெனவந்தடையவவர்நலிவு
முற்றிச், செற்றுலநுகருமணிமிடற்றிறைவன்ஞானதேசிகனாய்
மன்னி, யுற்றுலகீழலினுன்முனிவரருக்குண்மையுணர்வுரைத்
தோன்வைகுங், குற்றாலமெனுந்திரிகூடாசலத்திற்சித்ரநதி
குலவுமாதோ. (௨௭)

நெல்வேலிநாதனருள்விழிநோக்கும்பொருனையிற்றீர்கிறை
தொல்வேதச், சொல்வேலியிடுஞ்சிந்துபூந்துறையென்றொரு
தீர்த்தந்துலங்குமங்கண், வல்வேலியெனவம்புடனைக்கொங்கை
வடிவுடைமாதுமைதன்முன்ன, ரெல்வேலியிடுமேமபுட்கரணி
யெனுந்தீர்த்தமிலங்குமன்றே. (௨௮)

மலயமால்வரைப்பொருனைமூலத்தில்வருஞ்சருவதீர்த்தம
ற்றைத், தலையிலேசருவர்மதீர்த்தம்வாணாசுரன்சொற்றயங்கு
தீர்த்தத், தொலைவில்பாதகந்தீர்க்குஞ்சுருதிமறைதொழும்பாவ
நாசதீர்த்த, நிலவுதீர்த்தம்பிறவும்பலவுளவாலினைத்தெனயார்நி
கழ்த்தற்பாலார். (உகூ)

அந்தவரைப்பாங்கரினேங்குபுவயங்குந்தூங்கருவியத்தி
தீர்த்த, முந்துதிரைகொழுத்தெறிதாம்பிரயன்னிமாநதியினு
யர்தீரத்தி, னெந்தைபிரானுறைதலன்மற்றெண்ணிலவுள்ளன
தலன்களியாவுஞ்செய்ய, விந்தைபயிறருதீர்த்தமளவிலவா
ம்விரித்துரைக்கிற்பெருகுமேலோய். (௩௦)

குமரிதனிற்கன்னிகாதீர்த்தமுதலியதீர்த்தங்குலவும்வீறிச்
சமர்புரிநேமியன்வைகுமனந்தபுரந்தனிலறமாந்தன்மதீர்த்த
மமரர்புகழ்கேரளத்திற்பாண்டமொதீர்த்தமாண்டடைந்தோர்பா
கமரடங்கத்தெறுபாவதீர்த்தமுதலியதிகழுங்கருதுங்காலே[வக்

மாகன்னல்வேலிசெந்நென்மலிபழனமொலிதிரைநீர்வாவி
சூழுங், கோகன்னமிசைக்கோடிதீர்த்தமுதலியதீர்த்தங்குவவு
க்கொங்கைப், பாகன்னமொழிமடவார்பயிறருமென்னடைக
ண்டுபேதுமப்போதி, ஞகன்னநடைபழகுமுவளகஞ்சூழ்கொங்
குவளநலஞ்சேர்நாட்டில். (௩௨)

திருக்காஞ்சிநதிகுடகநதிமுதலதீர்த்தங்கடிகமழுமன்றிப்,
பெருக்காழிபொருவுதிரை யாம்பிரமாநதி தீர்த்தம்பிறங்குகொ
ன்றை, மருக்காலுமலர்வேணித்தலம்பலவத்தலங்கடொறும்வ
யங்குந்தீர்த்த,மிருக்காதிமறைமிருதிபுராணமிவையளவிலவெ
ன்றிசைக்குமன்றே. (௩௩)

அந்நதியுத்தரதீரத்தகண்டபரிபூரணமாயசலமாகி, நன்
னதிநாண் மதிவேணியாகிலநாதன்வைகு நளினப் போதிற்,
பொன்னதிதோய்வாவிகளிற் பொலிதருதென் கருவூரிற்புனித
மேனிப், பன்னதிவெண்டிரைகொழிக்கும்புண்ணியதீர்த்தங்க
ளுளபகரின்மாதோ. (௩௪)

தீர்த்தச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் கஉ - இ, திருவிருத்தம் - ௪௨௭

# தலதீர்த்தச்சருக்கம்.



பைந்தொடிபங்கினர்கருப்பபுரியாரன்றுபாண்டியன்மாற்றடிக்குழூஉம்பெடுத்தார்பார்த்தன், வெந்திறல்வில்லடிக்குழுடிபொறுத்தார்வேடனெச்சிலுக்குமிச்சைசெய்தார்வீதிதோறுமிந்தனங்கூறினர்கூறிவலைகள்விற்றாரிளையான்றன்குடிமாறனில்லம்புக்கா, ரந்தணன்செந்தமிழ்க்கிரவுநடந்தாரென்றாலரியயன்றேடற்கரியாரானவாறே. (௧)

வேறு.

என்றுதொல்புவியிலீசன்றலனுமத்தலங்களெய்தி
யொன்றியதீர்த்தம்யாவுமொன்றறவுரைத்தவாய்மை
துன்றுமாமுனிவன்றேவத்துதிதனைநோக்கிப்பாசங்
கன்றிவீந்திடநோன்பாற்றுங்காலவமுனிவன்கூறும். (௨)

தொல்லைநான்மறைதேர்தேவத்துதிமுனிவரனுந்தொல்லோ
னெல்லைதீர்தலங்களுந்தீர்த்தங்களுமிசைத்துப்பின்னர்
வல்லைநேர்முலைபங்காளன்வஞ்சுளாரணியமென்னு
நல்லெழின்மூதூர்தன்னைநவிற்றியதெவன்கொலென்ன. (௩)

நீவினவியதுநன்றுநினையன்றிநின்றுளாரிப்
பூவினில்வினுயதும்யாம்புகன்றதுமின்றுநோன்பிற்
றாவின்மாமுனிவமுன்னைத்தோற்றியதலனியாவு
மோவியோவாததந்தப்பதிமுழுமறையுமோதும். (௪)

ஆதலினதனையாதிபுரமெனவறைதலானும்
வேதநான்முகவர்கற்பந்தொறுந்தொறும்வியந்துதித்து
மாதவமிழைத்தெல்லாருமடைவுறவகுத்தலான்மெய்ப்
போதகர்போற்றுங்கர்ப்பபுரியெனப்புகறலானும். (௫)

அளக்கரும்பொருளாய்ஞானனந்தமாயமுதாயன்ப
ருளக்கணுக்கன்றித்தோன்றாவொருபரம்பரமனென்றுந்
துளக்கமிலிலிங்கமென்னத்தோன்றியாருயிர்கட்கெல்லாங்
கிளக்கருமிச்சாஞானக்கிரியையைநடத்தலானும். (௬)

ஒருபெருஞ்சுடரினேற்றுமொளிவளர்சுடர்கண்மீட்டுந்
தருமதனிடனிற்சாரிற்றயங்கியொன்றாதற்போலப்
பொருவிலப்புரத்திற்றேன்றும்புரங்களும்பொருளுமீள
வொருவுகாலங்களிற்சென்றொடுங்கவுட்கரத்தலாலே. (௭)

கரபுரமெனநூல்வல்லோர்கழறலினாலுமேனை
வரனுறுதலன்மற்றெல்லாம்வைத்துமுன்னவற்றிற்பின்னத்
தரனுறுகருவூர்தன்னைச்சாற்றினஞ்சாற்றற்கொண்ணாக்
கரனுறுதவத்தோயென்னக்காலவனுரைக்குமீட்டும். (௮)

துகளறநோற்றதேவத்துதிமுனிவரனேவேதப்
புகழ்விரவமலன்கெர்ப்பபுரிதனிற்புலவர்போற்று
நிகரறுதீர்த்தம்யாவுநிகழ்த்தியந்நீருண்மூழ்கிப்
பகவனைப்போற்றிப்பெற்றோர்பலத்தையும்பகர்தியென்ன. ()

கதிவரநோற்றுயர்ந்தகாலவமுனிவகேட்டி
நதிமதிபுனையும்வேணிநாயகனுறையும்வஞ்சிப்
பதிவருதீர்த்தங்கூறிற்பறபலவவற்றுளாடும்
விதியுடையாறுதீர்த்தம்விசிட்டமாம்விளம்புகின்றாம். (௧௰)

மாநதிவிசிட்டமேனும்வஞ்சிசூழெல்லைகாறுங்
கோநதிதீர்த்தமுன்னர்க்கூறவற்றினுள்விசிட்ட
மாநதியதனிலாடியமலனைப்போற்றிசெய்யி
னூனதிலுற்றயாக்கையொழிந்துவீடுயர்ந்துவாழ்வார். (௧௧)

கிளர்நவநீதவெற்பின்கீழ்த்திசைதேனுதீர்த்த
முளதகினிடபத்திங்களுற்றபூரணையின்மூழ்கித்
தளர்பவர்தம்பார்க்கஞ்சமொருபிடிதானளிப்பி
னளவறுவெய்யபாவமகன்றுபாரரையராவார். (௧௨)

பொருகடலாடைவையம்பொருவறவகுத்தனூன்றிற்
பெருகருமறைகளோதும்பிதாமகன்பின்னுகனமுன்
மருவுசேதிமத்தின்றென்கீழ்மாதிரத்தமைத்தமுக்க
ணொருதிரிசூலிதண்டாயுதன்பூசையுஞற்றுவித்து.　　(கங)

கடவுடன்பூசைதிங்கட்கலையுபசாரத்தாற்றி
யிடனுடற்கோயிலெண்கான்மவுனத் திலியன்றுசூழிற்
புடவியினுளதானங்கள்பொழியுமப்பயனியாவு
மடையுமன்றியும்வேறுன்றைவிழையினுமதுவுமெய்தும். ()

வள்ளலாலயத்தின்பூநவத்தின்மாநதியின்மேற்கிற்
கள்ளவிழ்கோபிதாரவனத்திடைக்கதிர்வேலண்ண
லொள்ளிதினமைத்ததீர்த்தமொன்றுளததனின்மூழ்கிற்
றள்ளரும்பாவமெல்லாந்தணக்குமாறளிக்குஞ்செவ்வேள். ()

சேயருளத்தடத்திற்சித்திரையாயதிங்க
ளாயபூருவபக்கம்பூரணையிலாதித்தவார
மேயதோர்சோதிநாளிலியன்றசித்திரரேருத்தர்
பாயொளிமனுவாராய்ந்துபாதுகைதொடுதோலாதல். (கசு)

நண்டுகில்கவிகையாதனூலுணர்முனிவர்க்கேனுந்
தண்டிகைப்பொறுத்தோர்யாவராயினுமவர்கடம்பாற்
கொண்டளிக்குநர்தம்பண்டைக்கோத்திரப்பிதிராயுள்ளோரா
திண்டிறற்கூற்றந்தண்டஞ்செய்தொழிற்கருகராகார். (கஎ)

அறிதுயிலமர்ந்தமூர்த்தியாலயமதன்றென்பாங்கர்
மறிதிரைகொழிக்குஞ்சூதமாநதிமணித்தீரத்திற்
செறிதருமச்சுவத்தர்திகழ்வனத்திரவியூர்வா
னெறியிலாசினையோர்போதிரீழலினுளதோர்தீர்த்தம். (கஅ)

ஆரணவியாதன்மூழ்கியாங்கிலைபமலர்க்காளாங்
காரணமுனிவனென்னக்கந்தவழிநிலைத்தானுங்கு
பூரணமாயகாயத்திரியோடப்புனல்படிந்தோர்
நாரணன்முதலாருள்ளநயப்புறுபோகந்துய்ப்பார். (கக)

தாடகைபகவன்கோயிற்சந்நிதிதனித்தொடீஇய
வாடகமிழைத்தகூவலொன்றுளததனீராடிப்
பாடகமணிப்பொற்பாதப்பாவையர்பரிந்துட்கொள்ளி
னூடகனிரந்துவேண்டுமெகார்தமையுயிர்ப்பருண்மை. (உ0)

காந்தனும்மனைவியும்மக்கூவலினுடிற்கற்பி
னேந்தெழிலாதிராதற்கியன்றனபொருளளிப்பிற்
சேர்ந்தநன்மகப்பேறுற்றுச்செய்கடனாற்றுஞ்செய்கை
சார்ந்தபின்னிமையோர்வைகுந்துறக்கமுஞ்சார்வரன்றே. (உக)

நாற்றிசைவதனன்ஞாலம்படைப்பதுகருதிநாடி
நோற்றஞான்றமலர்க்காட்டிநுவலும்வஞ்சுளேசனுக்கு
மேற்றிசையிறைகோயிற்குதெற்கெனவிதித்ததூய
சேற்றிதழ்க்கமலவாவிதீர்த்தமொன்றுளதுமன்னோ. (உஉ)

பிரமமந்திரத்தைமுக்காற்பிறங்கிடவிதயஞ்சேர்த்தி
யரவகங்கணனைஞானவமுதினைப்போற்றியாடும்
வரனுடையவர்தாய்தந்தைவரன்முறைவழியினுள்ளா
ருரவியசிவலோகத்திலுறைவாமீண்டுதயாபாரில். (உங)

திங்களைவியாழந்தீண்டுந்திவசமாகுதலத்திங்கட்
பொங்குபேரொளிநாயிற்றிற்பொருந்துநாளாதல்பாவந்
தங்குதற்கரியவத்தோதயமகாவுதயமாத
லெங்கணுநிலவுஞ்சூதலியன்றபூரணையினுதல். (உச)

சாற்றியவெதிபாதத்தினுகுதறந்தைதாய்ப்பே
ரேற்றியதிவசத்தாதலிருநிலமிசையிறந்தாந்
தோற்றியதினத்திதல்சுருதிவேதியன்முன்றேட்டுப்
போற்றியவாவியெய்திப்புனிதநீராடினார்தாம். (உரு)

விடற்கரும்பாவமெல்லாம்விட்டவிரொளிவிமானத்
தடற்படைவேற்கண்வானத்தாடரம்பையர்மார்போற்ற
மடற்றிகழ்தாருநீழன்முதலியபதங்கண்மன்னி
நடத்தொழிலிறைவன்முத்திவீட்டினைநணுகிவாழ்வார். (உசா)

கார்த்திகைத்திங்கடங்குகார்த்திகைநாளிற்செய்ய
பூத்திகழ்பிரமதீர்த்தப்புனிதநீர்படிந்துவஞ்சி
மூர்த்திசந்நிதியினன்பான்முயன்றியற்றீபமேற்றி
யேத்திடிற்சிவலோகத்திலெழிலுருமிளிரவாழ்வார். (உஎ)

அந்தமாதத்திற்செவ்வாய்நான்குவாரமுமணைந்து
வந்தருணோதயத்தினிலமகன்மனுமனக்கொண்
டெந்தறுகரிசிசென்னிசேர்த்தியொண்புனலிலாடிற்
குந்தநோய்வயிற்றுநோவுகுட்டநோய்கிட்டவாரா. (உஅ)

பத்தொடுபத்துறழ்ந்தபவத்துறுவறுமைபாறி
முத்துறுகுடைநிழற்றமுழுதுலகொருங்களிப்பார்
வித்தகமுறவத்திங்கண்முழுவதும்விடிந்துமூழ்கி
னெத்திறத்தனவியாதியாவும்விட்டிரிதறிண்ணம். (உக)

அரிவையர்போகந்துய்யாரவர்வயின்விழைவுநீங்கிப்
பொருவறவருடமொன்றுபூரணைதொறுந்தொறும்பூ
வருமயன்றடநீராடிச்சேதிமம்வலன்சூழ்ந்தன்பிற்
கருவைநாயகன்பொற்பாதங்கருத்துறவணங்கினோர்தாம். ()

இல்லிடையில்லாண்மைந்தரிவருடனிடையூறின்றிச்
சொல்லரும்பருவநாறுசுகோதயரென்னவைகிச்
செல்லுறமுருவமாயோன்றிசைமுகன்றேவர்போற்று
மல்லுறழ்கிரீசன்பாதத்தடைகுவரையமின்றால். (௩க)

காசில்வைகாசித்திங்களுரோகணிகலந்தவுச்சி
மாசறுபோதின்வேதாமனுவுரைத்தரிசிதூர்வை
தேசுறவணிந்துமூழ்கிற்றென்புலத்தவர்சுவர்க்கத்
தோசையோடுறைந்துதேவருடனமுதுண்டுவாழ்வார். (௩உ)

ஆவணிமந்தவாரநண்பகலணைங்கன்னூர்மேற்
றுவுறுமனநிறீஇத்தடங்குடைகுநர்பான்மந்தன்
மேவியசென்மமுன்பின்மூன்றினும்விரவாநிற்ப
வோவறவருநோய்பீழையொழிவுறுமுண்மையுண்மை. (௩௩)

கடாகிறங்கறுத்திருண்டகம்பளங்காரெண்ணிலட்
படாமிரும்பிவையினொன்றைப்பங்கயவிரிஞ்சன்கண்ட
தடாகநீடூரத்துற்றோர்தமக்குநன்களிப்பின்மந்த
ணடானவர்மகாரிடத்துமளித்திடான்பீழையம்ம. (௬௪)

கண்ணிருநான்குநான்குகவினியமுகமுமுற்ற
வண்ணறன்னிலஞ்சிநன்னீராடியைந்தெழுத்தையுன்னிப்
புண்ணியப்பூதிமேனிபொலிவுறவணிந்துசெம்பொன்
விண்ணுயர்குடுமிக்கோயின்மிளிர்திருமுன்றின்வைகி. (௬௫)

நீலவத்திரன்கோடேரனீணிறநீழற்சாய்கை
போல்பவன்கரியோன்காரிதினகரன்புதல்வன்மந்தன்
வாலியகிரகநாயகன்பிரமண்ணியன்சீர்
சால்புறுமுடவன்மேற்கோள்சாவலன்சவரிபங்கு. (௬௬)

என்பனசனியினாமமெடுத்தெடுத்திசைத்துநாவா
லன்புடன்சனியன்றன்னையகந்திளைத்திறைஞ்சினோர்பாற்
றுன்பமுங்கிரகபேதத்தொடர்ச்சியுந்தொடராவாழ்க்கைப்
பொன்புனைமைந்தர்வாணாள்புண்ணியநண்ணுமாதோ. (௬௭)

பூமலர்ப்பொகுட்டுப்புத்தேள்புகரறத்தொட்டநன்னீர்த்
தேமலர்தடத்தினுற்றசேதகமாசுதீர்த்தோர்
மாமணிபுயங்கந்தாங்குமாநிலம்புரந்தெஞ்ஞான்றுந்
தாமலமொருவிஞானத்தனிமுதலுருவஞ்சார்வார். (௬௮)

அம்மலர்வாவிசுற்றுமணிமலருய்யானங்கள்
செம்மலர்ப்பொதும்பர்வைத்தோர்சிறந்தனபுரிந்தோர்ஞாலம்
விம்மிதம்பெருகவைகிவிண்முழுதளித்துநாளு
மும்மதிளெய்தவில்லிமூதுலகெய்திவாழ்வார். (௬௯)

செங்கலிற்கருங்கலிற்செம்பொன்னில்வெண்பொன்னிற்செம்
றங்குமேனையவுலோகந்தம்மினாகுதல்வயங்குங் [ம
கங்கைநீர்கொழிக்குங்கஞ்சனுவளகங்கவினச்செய்தோ
ரங்கவைசெய்வித்தோர்வீடடைவரீதுண்மையாமால். (௭௦)

காண்டருபிரமதீர்த்தக்கரைமிசையணுகியெம்மை
யாண்டவெம்பெருமான்காட்சியளிப்பசீராடியண்ணல்
பூண்டருகுரவரன்பர்பூசனைபுரிந்தோராண்டுச்
சேண்டருமறைகாணுதசிவபதஞ்சேர்வர்திண்ணம். (சுக)

வேதநீர்தீர்த்தமாடவெனவழிக்கொளினும்வெய்ய
பாதகமுழுதுந்தீருமுன்பொருபரவையாடைப்
பூதலநிருபனந்தப்புனிதநீர்படிந்துசாபத்
தீதுறுகொடுநோய்தீர்ந்துசிவபதமடைந்தான்மன்னே. (சுஉ)

என்றிவையிசைத்தலோடுங்காலவனிறைஞ்சிஞானக்
குன்றனமுனிவவேந்தன்கொடும்பிணிச்சாபமேற்று
மன்றலம்புனலிற்றேய்ந்துதீர்ந்தரன்மலர்த்தாள்சேர்ந்த
தொன்றறவருள்கெனத்தேவத்துதியுரைக்கலுற்றான். (சுங)

தலதீர்த்தச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் கங - இ, திருவிருத்தம் - சஎ0.

---

## கோபிதாரச்சருக்கம்

போரானையுரியுரிவைப்போர்த்தானைப்பூங்கடுக்கைத்
தாரானைவீட்டின்பந்தருவானைப்பொருவில்கரு
வூரானைமழவிடையொன்றூர்ந்தானையுருள்பெருந்தேர்ப்
பாரானைமதன்வீழப்பார்த்தானைப்பணிகுவாம். (க)

வேறு.

சுருதியின்முடிவையுள்ளந்துகளறத்தெரிந்தயாருங்
கருதருந்தவங்களாற்றுங்காலவகருவூர்வைகு
மொருதனிக்கடவுட்டாளன்புடையையீயாதலாலிச்
சரிதையிலிதயம்போக்கிவிழைந்தனைசாற்றுகின்றாம். (உ)

கண்டொடுகுழையார்சாயல்களிமயில்கண்டொளிக்கும்
வண்டொடுபயில்பைங்கானுமாமலர்க்குழல்கண்டஞ்சித்
தண்டொடுபுனற்கணொலித்தரையுகந்தேங்கியோடும்
விண்டொடுபுரிசையுஞ்சூழ்விசாலைமாநகர்க்குவேந்தன் (௩)

கராவிடரிழைப்பக்கூவுங்களிற்றுயிரளித்தநேமி
யராவிடனுறையுமாயோனலரவன்முதலதேவர்
பராவிடக்கடுநஞ்சுண்டகண்டனைப்பரவுந்தொல்லைத்
திராவிடமரபிற்றோன்றிச்செய்யகோலோச்சுஞ்செம்மல். (௪)

கொடைதனிற்கமஞ்சூன்மேகங்குணத்தினிலமிர்தமன்ன
நடையினர்க்கனங்கமாரனடுவினிற்றருமன்வீறு
மடையலர்க்கசனிகல்விக்கசலமாமுனிவன்வாசத்
தொடைபுனைகோபிதாரத்துசனெனுஞ்சுடர்செய்பூணான். (௫)

வேறு.

கறைதாழ்கண்டன்றொண்டர்தமைக்காணிலெழுந்துகசிந்
துமுறை, முறைதாழ்ந்தெழுந்துபணிவிடையின்முயலுவோன்
முனிவரிருடியர்நான், மறைதாழ்செய்யவாய்மையினர்முதலி
னோர்முன்றிலின்வரினோ,ரிறைதாழ்வின்றியெதிர்ந்துகுறைவி
னவியுளதேலதுகடிவோன். (௬)

கலிமாநிலம்வந்துறினுமதுகடிந்துவரிசையாநோக்கி
மெலிவாராய்ந்தேழையரடைந்தோர்தம்பால்விழையுமனனாகி
வலிவாளரசர்திறையளப்பவயவாளரியாதனமேவி
யொலிநீராடையுலகமொருங்களிக்குநாளிலொருஞான்று. (எ)

விந்தாசலத்தையடக்கிவென்றிவாதாவியையின்னுயிர்வீட்டிக்
கந்தார்களிற்றின்வலியுடைவில்வலனைக்காய்ந்துகறங்கருவி
மந்தாகிலக்கன்றசைந்துதளர்நடைவந்துலவிமணமுயிர்க்குஞ்
சந்தார்சோலைதவழ்பொதியவரையினுறையுந்தமிழ்முனிவன்.

கட்டுச்சடையர்மரவுரியர்கலையாதனத்தர்கதிவழியி,லெட்
டுமனத்தர்கடிந்தேழையிகழ்ந்தோராறையம்புலத்தைச், சுட்
டதவர்நாலெனுங்கரணங் குணமூன்றொருங்குதொகவிரண்டு,
நட்டவினைகடுலைநேரநாடியஞ்சிநலஞ்சிறந்தோர். (௯)

உடுத்ததுவராடையர்திருநீற்றொளியர்தெளிநீர்க்குண்டிகைய
ரெடுத்தவேய்ந்தண்டினர்தருப்பையினர்காலசனர்மறைவசனர்
தடுத்தபொறியாமலமூலமகழ்ந்தநெறியர்தரைவாழ்வு
கெடுத்தவிதயர்செபவிரதங்கெடாதமுனிவர்நணிசூழ. (௧௦)

ஆயமறைகளாகமங்கடொடர்புராணமரியதமி
ழாயவருணுண்ணுணர்வுடைமாணாக்கர்போற்றியருகுவர
மாயவினைதீர்தவமுருவம்வயங்கிநடைவந்தியங்குதல்போ
னையமுடனாணிலம்புரக்குநிருபற்காணாநெகிழ்மனனாய். (௧௧)

அரசனுறையத்தாணியவண்புக்கான்புகுமவ்வளவினின்முன்,
னுரைசெய்யூழிற்பெருவலியாவுளமற் றொன்றுசூழினுந்தான்,
றரைபினிடைமுந்துறுமெனுஞ் சொன்னிலைப்பத்தரணிதாங்கி
யுயர்,வரைசெய்புயனூழ்வினைவழியையமறைத்துள்ளறிவைமய
க்குதலால். (௧௨)

எய்தற்கரியானெய்தினனென்றெண்ணுதியன்றமுறையி
ன்றிச், செய்தற்கரியசிறப்பிலொன்றுஞ்செய்யானாகித்தினந்
தினமும், பொய்தற்புகுதும்பொதுமகளிர்போகந்துய்க்கும்படி
ற்றொழுக்கா, னுய்தற்குணருமுணர்விலர்போலொன்றுமுறை
யாதிருந்தனனால். (௧௩)

இருக்கும்வேலையெழுவேலைபருகியுமிழ்ந்தவிருந்தவத்தோ
ன், செருக்குமுளத்தனிவனெனக்கண் சிறிவெகுளித்தீப்படர்
ந்து, பெருக்குமலைத்தெண்டிரைபுரட்டும்பெருநீர்க்கடலைநணி
நுகரக், குருக்கும்வடவையெனக்கொழுந்துகொழுவிவளரக்
கொதித்தெழுந்தான். (௧௪)

சீறியெழுந்துநிருபனவைதீர்ந்துமன்றிற்கடையெய்திப்
பேறிலரியமுனிவர்தம்மிற்பிரமிட்டன்றன்முகநோக்கி
வீறுதவத்தின்முனிவாநமக்கின்றோர்விரதமுண்டதனா
லாறுபுனைகோமரனடியவரைமதியாதவணிருந்த. (௧௫)

கொடுங்கோலரையன் றனைவெய்யசாபங்கூறிவருகெனலு
மடுங்கோபத்தீயெனவுள்ளவரையனவையையனுமிமதம்
படுகோட்டொருத்தலுரிபோர்த்தபரமனடியர்ப்பணியாது
கடுங்கோளிழைத்துமனச்செருக்கா லுலகமளிக்குங்கடியோனே

குட்டநோயிற்குளித்துடலம்வருந்துகென் றுகொடுஞ்சாப
மிட்டவேள்வித்தழற்றமங்கமழுமேனியிலங்குபிர
மிட்டன்மீண்டுதமிழ்முனிக்குவிளம்பமுனிவன்முனிவருடன்
கிட்டர்சூழத்தமிழ்மலயச்சிமையவரையைச்சேர்ந்தனனால். ()

மொய்த்தமுனிவர்தமிழ்மலயமுனிவற்போற்றித்தவமுயலுந்
தத்தமிருக்கையாம்பன்னசாலைபுக்கார்பிரமிட்ட
னித்தனெனக்கும்போதயனைகின்றுவணங்கிப்பணிதலைமேல்
வைத்துமறைமாதவம்புரிகான்வதியுஞ்சாலைமருவினன். (கடு)

பேசவரியமுனிவர்தவமெளிதோபிரமிட்டன்னிறையை
யேசியகலுமதுபோழ்தின்யாருமிகழ்ந்துநோக்கியகண்
கூசியிதயமருவருப்பக்குட்டநோய்மெய்குடிகொண்டு
வீசியுடற்றநெட்டுயிர்ப்புவீங்கிவீங்கிமெலிவுற்றான். (கசு)

மதியோடரவுவிரவமுடிவைத்தோனடியரடிபூண்டு
துதியோடிறைஞ்சலின்றேடுநின்றொலைந்தவாறுந்தூய்தவத்தின்
முதியோன்கொடியசாபமெனமுனிந்துமொழிந்தவாறுமுன்
விதியோசிவனேயரசாளும்வினையமாகாவெனவயர்ந்தான். [னை

வேறு.

வீழ்ந்தான்றுயருழன்றனறமெலிந்தான்பிணிக்கடலுட்
டாழ்ந்தானிலைகுலைந்தானுடறளர்ந்தான்கருவிகளாற்
சூழ்ந்தாருயிர்துடிப்பச்சுடுதொழிலேசெறிழுருவைப்
போழ்ந்தாலெனப்புலர்ந்தானுளம்புழுங்கிப்புலம்புற்றான். ()

பதைத்தான்பெரும்புகழைப்புடவியினுட்படர்கலியிற்
புதைத்தான்மிருகண்டுதருபுதல்வற்கறுவியகூற்
றுதைத்தானடியவர்ப்பேணலருறுவாரிடரெனமுன் [ன்
கதைக்காவியத்துரைப்பாருண்மைகண்டோமெனக்கரைந்தா

அந்தோவெனவொளிகுன்றினனரவுண்கலைமதிபோ
னைந்தோகையிழந்தாவிநலங்காநடுநடுங்கி
நொந்தோர்புகலிலனாய்த்தனிநுடங்கிச்செயலடங்கிக்
கந்தோடிகன்மதமாரிபெய்களிற்றுண்கனியானான். (உ௩)

மோகாதிகண்முனியுந்தவமுனிவற்கொடுநெடுநாள்
யாகாதிகளியற்றுதனவியற்றப்புரிவித்தான்
போகாதிகண்மறையோர்தமக்கூட்டிப்பொருளளித்தான்
சாகாதிகளின்றுந்தவம்புரிந்துஞ்சலித்தனனால். (உ௪)

தனந்தானியமுதலாயினகேட்போர்தமக்களித்தும்
வனந்தாவியதவரோடலம்வந்தும்முடனொந்துந்
தினந்தாழ்வறமருந்தானவையின்றும்பணிநின்றுங்
கனந்தாழ்வரைதிரிந்துப்பிணிதணியும்வகைகாணான். (உ௫)

என்செய்குதுமென்செய்குதும்யாம்பாதகமிழைப்ப
முன்செய்ததம்முனிமுன்னிலையாய்முற்றியதென்றே
தன்சிந்தனைதெரிந்தானுடல்சரிந்தானகம்பரிந்தான்
பொன்செய்துணைப்புயமால்வரைபுல்லென்றுபுலர்ந்தான். ()

வேறு.

கிளைகளுந்துணையுந்தானைக்கிளர்ச்சியுமமைச்சுமில்லும்
வளைகடலுலகுநீத்துமழைதவழ்வனமும்பாசத்
தளையறமுருக்குந்தக்கோரிருக்கையுந்தடஞ்சூழ்வெற்பு
முளையும்வெம்பிணியுடற்றுமுடல்சுமந்துழலுநாளில். (உ௭)

மன்னவன்கொடுநோய்தீர்வான்மற்றொருபுகலுமின்றி
பின்னலங்கடலின்மூழ்கியினியிதுதுணிபென்றெண்ணி
நன்னரின்முன்னராற்றுநனிதவமிருந்தவாற்றுற்
பின்னலஞ்சடிலந்தாங்கும்பிரமிட்டனிருக்கைசார்ந்தான் ()

சரணமென்றடியில்வீழ்ந்துதமியனேற்குனையல்லான்மற
றரணமொன்றிலையிழைக்குமப்பிழைபொறுப்பதக்
கரணமுங்கடந்தோய்நுங்கட்கதுகடனன்றோநாயே
னிரணவெம்பிணியைநீக்கவேண்டுமென்றெதிர்ந்துதாழ்ந்தான்.

இரந்தவனிற்பவெண்ணீற்றெழின் முனிநோக்கினாலம்
புரந்தருணிருபநின்பாற்பொதியமால்வரையிற்புத்தேள்
வரந்தரப்புகுந்தான்சற்றுமதித்திலைவினையின்கொட்பா
லரந்தையுற்றிடவெஞ்சாபமறையெனவிடுத்தானெம்மை (௩௦)

தேசிகவாய்மையாலுஞ்சிவனடியவரைப்போற்றிப்
பூசியாதகர்தையுள்ளம்பொதிந்தனையிருத்தலானு
மேசினமெம்பாற்றீர்கென்றிரந்தனையெளிதோவிந்த
மாசினைக்கழுவுநீரோர்யார்கொலோமலிநீர்வைப்பின். (௩௧)

இங்கெனையளித்தியென்றுவெமையடைந்தமையாற்கேட்டி
சங்கவெண்குழையார்பாலன்புறுதமிழ்முனிபாற்போகி
யங்கவர்ப்பரசினாயேன்குறைபொறுத்தருளுகென்றாற் [று.()
பொங்கழற்பசும்பொன்னென்னப் பொருக்கெனவெகுளிதீர்ந்

வெந்துயருழப்பவிட்டசாபவெம்பிணிதீர்ந்தாவி
யுய்ந்திடுமெதற்குபாயமொழிகளுமுரைக்குமோவ
வைந்தவிர்த்துயர்ந்தோர்க்கேதமிழைத்தவரடையிற்காணா
மைந்தரிற்காண்பர்தென்கால்வரைதனிற்போகென்றான். ()

மாற்றுதற்கரியவேதமறைமுனிகருணைவைத்துச்
சாற்றுதற்கரியவாய்மைதந்தனனெனப்பார்தாழ்ந்து
போற்றியப்பணிமேற்கொண்டுபொருதிரைப்பொருனைமாலை
னாற்றியபொதியமெய்தும்வழிக்கொடுநடாயினனால். (௩௪)

புகழ்தவமுனிவற்காணிலகலுதிபுலையவென்று
விகழுமோநமையடைந்தானெனத்திருவுளமிரங்கி
மகிழுமோவெய்யசாபமாற்றுமோமருவிலாண்டு
நிகழுதல்யாதோவென்றுநினைதொறுமுயிர்ப்புவீங்கி. (௩௫)

தென்றமிழ்மணமுஞ்சந்தக்குறடுருஞ்சியதெண்ணீரின்
மன்றலுங்கறுத்ததூமவாசமுமணைந்துதென்றற்
கன்றகவியமாமஞ்ஞைக்கணஞ்செறிசாரல்வாயி [ன்.()
னின்றுலாவருந்தண்சோலைப் பொதியநீள் வரையைச்சார்ந்தா

பொதியமால்வரையினெய்திப்புண்ணியத்தவங்களாற்று
முதியமாமுனிவர்சூழுஞ்சாலையினுப்பண்முன்னை
விதியினாலமைத்தவீரைமென்கையினடக்கியுண்டோன்
பதியெனவைகும்பன்னசாலையின்பாங்கர்நண்ணி. (௩௭)

நச்சரவணியுநம்பர்நளினமென்சரணமல்லா
லிச்சைவேறில்லார்யோகத்திருப்பவர்குழாநெருங்கு
மச்சபையணுகிவேந்தனச்சமுள்ளுறுத்தநாளு
முச்சகம்புகழுந்தெய்வமுனிவரன்முன்னர்வீழ்ந்தான். (௩௮)

அடிமிசைவீழ்ந்துகண்களலையெறியருவிவெள்ளம்
படிமிசைவீழ்த்திநெஞ்சம்பதைத்துவாய்புதைத்துவெள்ளைப்
பொடியணியமலனன்பர்தமையவமதிக்கும்பொல்லாக்
கொடியவல்வினையேன்யானுமுய்வனோமுனிவர்கோவே. (௩௯)

வேறு.

யாழார்மொழிபாகன்றொண்டரெதிரெய்தினங்ஙன்
றாழாதசென்னிதரித்தேனறடிந்தலே
னூழாலுணர்விழந்தேனூழிதொறும்வேறொருவர்
வீழாதவெங்கிரயம்வீழத்துணிந்தேனே. (௪௦)

பண்டிருவர்காணாப்பரன்றொண்டரைக்கண்டுங்
கண்டிலர்போலன்றிமைத்தகண்ணிணைக்களைந்திலேன்
றொண்டரிசைகேளாச்செவியின்றுளைவழியிற்
புண்டரவேல்காய்ச்சிப்பொதுத்தேனிலைப்புல்லேன். ()

சேவையுயர்த்தசிவனன்பர்சேவடிமென்
பூவைமுரலாப்புழைநாசிகொய்திலேன்
பாவையுறுர்தொன்னூற்படிறென்றவாய்புழுக்க
நாவையரிந்துருமலிக்கிட்டேனுமில்லேன். (௪௨)

அல்லார்கிரீசனடியாரையவமதித்த
பொல்லாதநெஞ்சுளையப்போழ்ந்தேனிலைபுலையே
னல்லாரெதிரினிர்நாடிமுகிழாக்கரத்தைக்
கொல்லாடல்வாளாற்குறைத்தேனிலைகொடியேன். (௪௩)

வேளாட்டிலாவிபருகும்விழிநுதலார்க்
காளானவர்வரவேற்றன்றெதிர்செல்லாதிருந்த
தாளானவைகடறித்தெறியாமேதடறும்
வாளானதுபிடித்துப்பேடியெனவாழ்ந்தேனே. (௪௪)

அத்தநினைநிற்சூழ்தவரையவமதித்து
மத்தெறியுந்தாவெண்டயிர்போன்மதிதுழங்கிச்
சித்தமுளைநோயினூற்றியவுடல்பலவே
தித்துயரமோநரகினைதுபடாதின்னுமே. (௪௫)

மன்போலவணிபுரக்குநாள்வந்தவுனை
யுன்போலுநரையிகழமொலிவுற்றநா
ளன்போடறியாமைதிர்கென்றழுதிரங்கா
வென்போல்வாரில்லையில்லையானேயிறையவனே. (௪௬)

இந்தவாறேந்தலிரங்கியுளம்புழுங்க
மந்தமாலூருமலயத்தமிழ்முனிவன்
சிந்தைதேர்ந்தன்புகிகழமகிழ்தூங்கி
யந்தவேன்மன்னற்கபயமளித்தருளி. (௪௭)

வேறு.

மன்னநீயினிவருந்தன்மனுநெறிவழாமைநோக்கி
யின்னுயிர்போலஞாலமளித்தனையெனுமுவப்பா
னின்னுழையடைந்துஞ்சற்றுநினைத்திலையதனாலென்னை
யன்னதுகிடப்பநம்மோடடைந்திடியிவர்களெல்லாம். (௪௮)

விமலனன்புடையரன்றிமிளிர்குருமொழிவழாமை
முமலமுமறுக்குஞானமுனிவரர்முராரியுஞ்செங்
கமலனுங்கீழ்மேலோடிக்காண்பருஞ்சுடராய்நின்ற
வமலனென்றியாரும்பூசையாற்றுதற்குரியரானார். (௪௯)

ஒன்றினைத்தாபித்தாரேல்யாரெனுமுவப்பத்தன்னைப்
பின்றவழ்சடையினானும்பெயர்த்திடல்புரியானென்னின்
மன்றுளானடியார்தன்மையாவரேமாற்றுநீரார்,
மின்றலைவேல்வல்லோய்நீயுணர்ந்திலைவிதியின்கோட்பால். ()

ஆதலின்வெய்யசாபமறைவித்தாமேற்றநீயும்
போதமுள்ளனையாயீண்டுப்போந்தனைபோந்தவாற்றுன்
மாதவமுனிவர்ப்போற்றப்பெற்றனைமன்னநின்பாற்
பாதகமொழியுங்காலமாயதுபகர்துங்கேட்டி. (ருக)

உதியர்கோனுட்டினுப்பண்மாநதியுத்தரத்தின்
முதியவர்வதியுமாதிபுரமென்னுமூதூர்தன்னில்
வெதிரிநீள்வனத்தின்மேவிவியாதனைப்போற்றியந்தச்
சதுமறைக்கிழமைமிக்கோன்சாற்றியவாறுசார்ந்து. (ருஉ)

மணமொபாதுத்தந்தைதந்தமலர்பொதுளியவிலஞ்சித்
தண்புனல்படிந்துவேனைத்தழலெழவிழித்தோன்பாதம்
பணபெறப்பழிச்சிலுன்னைப்பற்றியபாவமெல்லாம்
விண்படர்பருதிமுன்னர்ப்பனியெனவிளியும்வேந்தே. (ருங)

சார்கெனும்பணிமீக்கொண்டுதமிழ்முனிவரனைப்போற்றிச்
சீர்கெழுமுனிவர்தம்மைத்தனித்தனிசிறப்பினேக்கிப்
பாரிடைமுறைமுன்றூழாவடிக்கடிபரவியேத்தி
வாரகெழுமருவிதாங்குமலயமால்வரையைநீங்கி. (ருச)

நீங்கினன்ஞிமிறுந்தேனுநிறைமணமுயிர்க்கும்பொங்கர்ப்
பாங்கரின்னிசைகடேரும்பாண்டிநாடதனைச்சேர்ந்தான்
நுங்கமழாரும்வேம்புங்குவிதரப்பொலியுமுன்றிற்
றேறங்கமழ்போந்தைவேய்ந்தசேரர்கோனுடுதன்னை. (ருரு)

இலகெரிக்கடவுட்டொல்லையெழுபவவனத்திற்கேற்ற
கலனிடர்க்கடலைவிட்டக்கரையினைக்காட்டற்கென்றூழ்
மலவிருட்கேணிஞானவழிசெலுங்கதிக்கென்றோர்ந்து
புலவரும்புகழுமாதிபுரத்தினைப்பொருந்தினுனல். (ருகா)

பொருந்தினன்றிருந்துகர்ப்பபுரியினைப்புணரிநஞ்ச
மருந்துநம்பரன்முன்றாழ்ந்தானெழுந்தனனரும்பிணிக்கு
வருந்தினனுகிமாழ்குநாளினப்பிணிவிடற்கோர் [ன்.
மருந்துவைகயுறக்கண்டோன்போன்மலர்ந்தனன்வதனமன்ன

னிமகிழ்வெய்திநோய்தினளிதிரைப்பரவையுண்ட
முனிவரன்மொழியுமாற்றான்மூரிவிற்பருவவேற்கட்
பணிமதிநுதலிபாகன்கோயிலின்றென்கீழ்பாலிற்
கனிபொதிவதரிமூவெனாந்தனைக்கண்ணிற்கண்டான். (ருஅ)

வேறு.

அந்தண்வனத்தாசறுமளவின்மாணாக்கர்
சிந்தைதேரருந்தவத்தினர்திசைதிசைமொய்ப்பப்
பைந்துழாய்ப்புயற்கலையெனவரும்பராசரன்றன்
மைந்தனாதனத்திருத்தலைக்கண்டனன்மன்னன். (ருகூ)

கண்டகண்கணீரருவியிற்சொரிதரக்கரைந்து
மண்டணிற்சிரந்தாழ்வுறப்பன்முறைவணங்குந்
திண்டிறற்சுடர்வாட்படைச்செம்மலைவேதங்
கொண்டமாதவக்குரிசிறன்குறித்தெதிர்நோக்கா. (கூ0)

வருககோமிதாரக்கொடிமன்னவவென்று
வருகழைத்தனனார்கலியுலகெலாமளிக்கு
மொருபெருங்குடைக்குரிசினீயொருவருக்கடாத
பெருகுவெம்பிணிதொடர்ந்திடவிளைத்ததென்பேசாய். ()

பேசலாயதென்பேசுதற்கரியமாமுனிவ
வாசைநீருலகளித்திடுமெரையருக்கடாத
மாசிழைத்தனணியாதெனின்மலயவெற்பொருவ
னேசைமாதவக்குழுவொடுமுற்றனனென்பால். (கூஉ)

வெய்யதீவினைப்பயத்தினால்வெற்புறைமுனியை
யையர்தங்களைமதித்திலன்மூங்கைபோலதனாற்
றுய்யவம்முனியேவலிற்பிரமிட்டன்றேன்றி
யையவுற்றதிக்குட்டநோய்கூற்றெனவருத்தும். (கூங)

ன்றினாலுமீதொழிதரலின்றியொண்பொதியக்
குன்றிலெய்தியம்முனிவரற்குறுகினின்றிரப்ப
நின்றனக்கிதுநிகழ்த்துகென்றுரைத்தனனின்பா
ன்றடைந்தனனளித்தியென்றேத்தினானிறைவன. ()

வேறு.

ஏத்துமானவேலிறைமொழிபுகுமுனமிருசெவிபுதையக்கை
சேர்த்திறன்சிவசிவவெனச்செப்பினன்சிவனடியவர்தம்மை
நீத்தபாதகங்கேட்பினுங்கீழ்புகுநிரயமூழ்குதலுண்மை [றுய.
பார்த்திபர்க்கிஃதடுக்குமோவடுத்ததிப்பார்த்திபன்றனக்கென்

யாவராயினுங்கண்டிநீறணிபவரெம்மிறையெனவெண்ணி
யாவலோடெதிர்ந்திறைஞ்சிடல்வேண்டுமெற்றவர்கடம்மொழு
ளோவினுங்கருத்தெந்தவாறுதெரியாதெனவுன்னுமே[க்கங்க
நாவினுற்பழியுரைத்திகழ்ந்தவர்நரகிடைநணுகுவரென்றும். ()

தூயநெஞ்சிடைத்தெரிந்தரன்றொண்டரைத்தொடாதிகழ்
நிருபன்றன், மேயவிம்முகம்பார்க்கவுமொருமொழிவிளம்பவும்
விதியின்று, லாயினும்மவைபுரிதரவழக்குமுண்டென்னெனி
லடுதெவ்வர்க்,காயும்வெங்கணையுமிழ்சிலைக்கொற்றவன்கற்றகே
ள்வியினுலும். (கூஎ)

பண்டைநல்வினைப்பயனிவற்கிருந்தவப்பரிவினுலுவராழி
யுண்டமாமுனியிருக்கையினுற்றவனுகளதாமரைத்தாளிற் [று
றெண்டுசெய்தமையான் முனிவொழிந்தருள்சுரந்தருளியவாற்
லண்டர்நாயகனுறையுமிப்பதியினையடைந்திடுமெதனுலும். ()

இவனிடத்துமாசிரிதரக்காலமின்றெய்தியதிறத்தானு
மவமதிப்பதன்றினியுயிருய்யுமாறறைகுதலழகென்னுக் [கித்
கவலைகூர்ந்துடல்வெதுப்பியகுட்டநோய்க்கடலிடைதனிமூழ்
திவலைமாரிசந்ததம்பொழிகட்புயச்செம்மலைமுகநோக்கி. (கூக)

வேறு.

என்னைநீகருதிப்பேதாயிப்பிழைவினைத்தாய்நாளு
நின்னைநீங்காதபோதநெஞ்சறைபோயிற்றேயோ
வன்னைபோலவனிகாத்தலநீதியோவந்தோவந்தோ
முன்னையூழ்வினையையாரேவென்றுளார்மூரிவேலோய். (எ0)

அந்தணர்ச்செகுத்தல்கோவையாவைவாம்பரியைக்காய்தல்
தந்தைதாய்மொழிதிறம்பல்தமர்க்கலக்கண்ணிழைத்தன்
மைந்தரைவதைத்தல்வாதைமருவுதல்விருத்தற்கோறன்
முந்தையோர்மொழிநூல்பொய்ம்மைமொழியெனமுனிவுகூறல்.

பன்னியைநீத்தல்கூத்தியோர்ப்புணர்படிற்றொழுக்கம்
வன்னியையிகழ்தல்கற்புமகளிரைவலிதிற்றோய்தல்
பொன்னினூலெழிலான்மூத்தபூவையின்போகந்துய்த்த
லன்னியமாயநீசமகளிர்பாலன்புபூத்தல், (௭௨)

பூப்பினள்போகம்மற்றைவிலக்குநாட்போகந்துய்த்தல்
பார்ப்பனமகளிர்கொங்கைநோக்குவெம்பாவம்வெய்ய
தீப்பதிதொறுமடுத்துச்சிதைத்திடுந்தீயவஞ்சந்
தோப்பலர்த்துடைவைகூவல்குழியைத்தடிதறூர்த்தல். (௭௩)

உயிர்குறைத்திடலூன்விற்றல்கொண்டவனூணுண்ணுமுள்ளச்
செயிர்குறைத்திடல்விடுத்தோன்றனையுணச்செப்பல்செப்பும்
பயில்வினைமறுமையுண்டல்பாதகர்குழுவிற்போகித்
தயவறப்பேசல்பேசிகடுவையோர்சார்பிற்கூறல். (௭௪)

பிறர்மனைவிழைதல்வேறுபுறத்தொழுக்கியையும்பெண்டீர்
திறனொருங்குணர்ந்துமன்னமவளிடவுண்ணுந்தீமை
யறநிலைபுரிதல்போரிலரசரைவிடுத்துப்போதல்
கறவைகன்றூட்டுமுன்னர்க்கறந்துபால்களிப்பவுண்டல், (௭௫)

அதிதியர்க்குணவுநல்காதருந்துதல்பலியிடாமை
முதியகூன்மகளிர்கொங்கைமுயங்குதலவரைக்காய்தல்
கதிர்வெயில்விரிகாலத்திலரிவையர்கலவிவேட்டல்
பொதிகலன்கழித்துமாசுபுனைமடவாரைப்புல்லல், (௭௬)

நட்பிடத்திடர்வினைத்தனண்பகற்பசிக்கூட்டாமை
கட்குடித்துழலுந்தீமைபலபொருள்களவிற்கோடல்
புட்குலம்விலங்குசோரக்கண்ணியிற்படுக்கும்புன்மை
கொட்புறவரைவில்லாமேகொலைத்தொழிலாற்றுங்குற்றம். ()

நஞ்செனக்குறளைபேசியாரையுநலிவுசெய்த
றஞ்செனவடைந்தோர்க்காற்றும்பாதகந்தாவில்கற்பு
வஞ்சியர்தம்மைவிற்றல்பற்றியில்வாழ்க்கையாற்ற
னெஞ்சிலொன்றினையிருத்திவாக்கிலொன்றினைநிகழ்த்தல். ()

விரதமேற்கொடுவிடுத்தல்விரதத்துக்கழிவுசெய்தல்
பரவையிற்கலனிற்போகல்பழிபடக்கோறநபார்த்த
லரவுகைப்பிடித்தலாட்டனீர்விளையாடலேற்கு
மிரவலர்க்கீதலின்மையீதலைவிலக்கும்புன்மை. (எகு)

உடன்றிருந்துணவுமாந்திப்புறனுரைத்துழலும்பாவ
மடல்கெழுமமைச்சன்வேந்தையடக்கிநாடளிக்கும்பாவம்
விடலருமமைச்சைவீணில்விழுங்குவாளரையன்பாவங்
கடலுலகதிற்செங்கோல்வெங்கோன்முறைகாட்டும்பாவம். ()

இவைமுதலாயவெய்யபாதகம்யாவுந்தொன் னூ
லவைபகர்சாந்திரியாலுமரியமாதவங்களாலும்
புவனியினுளினுளிற்றீர்தரும்புகலிற்றீரா
நவைசிலவுளநீகேட்டிநாமவேற்றனைவேந்தே. (அக)

கருவழியுழலாவண்ணங்கண்ணருள்பரிசம்வாய்மை
பொருவில்பாவனைநூல்போகம்புகலவத்திரியாற்பாச
விருள்கெடுத்துதயமாம்பேரின்பவீடருளுஞானக்
குருமொழிபெயர்த்துவேறுகூறுதல்குருத்துரோகம். (அஉ)

சிவனதாலயமிடித்துச்சிவபூசைக்கரிட்டஞ்செய்தல்
சிவனணியிழைதூசாதிதிரவியங்கவர்ந்துகோடல்
சிவனுறைபதிபூஞ்சோலைதிகழுநந்தனவனங்கள்
சிவநிவாவிகூவல்விளைபுலஞ்சிதைத்ததீமை. (அங)

சிவபணிவிடைக்கென்றேற்றுவேறொருதிறமையாற்றல்
சிவனதைந்தெழுத்துநீறுகண்டிகைபழித்ததீமை
சிவனைமான்முதலினோருளொருவனென்றிசைக்குந்தீமை
சிவநெறிவழுவிச்செப்பன்முதலியசிவத்துரோகம். (அச)

குரவன்வாய்மொழியுளத்துட்கோடலுங்கொண்டவாற்றுற்
பரசிவனருளிற்றோய்ந்துபற்றியபற்றுமாகி
விரவுமவ்விரண்டினுக்குமுரிமையாமேன்மையன்ப
ருரவியபெருமையாரேயோர்ந்துணர்ந்துரைக்குநீரார். (அரு)

அவர்தமைகீராயுள்ளாரவர்களேயவர்கடம்மைக்
கவரறமதித்தல்போற்றல்வழிபடல்கருத்திலெண்ணு
துவர்படமதித்தடாதபழிமொழியுரைக்கும்பாவந்
துவர்படுகுருதிவேலோய்சங்கமத்துரோகமென்பார். (அசு)

அறையுமிப்பாவமூன்றுமாற்றினோர்சாத்திரங்கண்
மறைமுதலியநூல்யாவுமனத்தினைத்தோதினுந்தேர்ந்
திறைமனந்தணவாயோகமெத்தனையியற்றினும்வாம்
பிறைதவழ்கானினூடாறிருதுவும்பிறங்கினாலும். (அஎ)

மலைகளினுறினுஞ்செந்தீநள்ளிடைமருவினுங்கா
லலைவறப்பருகினும்பாலலையெடுத்தெறியுநீணீர்
நிலைவறநிறப்பினும்பார்நெளியினுநெளியாவண்ணந்
தலைநிலத்துறநிறீஇத்தவம்பலவாற்றினாலும், (அஅ)

ஊர்தொறுமந்தணர்முனிவரர்க்கூட்டினுலுஞ்
சீர்மணிமண்டபங்கோபுரஞ்சினகரஞ்செய்தாலு
நீர்மலிவாவிதூவிநிறைமடநிமலர்க்கேற்ற
தேர்விடுப்பினுமப்பாவந்தீருமோதீராவேந்தே. (அக)

ஆதலிற்கும்பயோனியம்பிகாபதிபதத்தின்
மேதகுமாண்புபூண்டதொண்டரின்விழைவுமிக்க
மாதவமுனிவனென்றுமதிந்தவமதித்தாய்நீயப்
பாதகவெய்யசாபம்யாவரேமாற்றற்பாலார். (௯0)

வேறு.

குருவைவெள்விடைப்பாகனையன்பரைக்கும்பிடாதிகழ்ந்தோரைக், கருவியாற்குறைத்திடல்கொலையன்றதுகைவரல்வலியின்றேல், வெருவிவெந்நிரயம்புகச்சபித்தவர்மேவியமூதூரை, யொருவிவேறொருபுலத்திடையருந்தவமுஞற்றுதல்வழக்காமால். (௯க)

அறைகடற்கநெஞ்சமுண்டரியயனமரர்கடமைக்காத்துச், கறைபழுத்தகண்டன்றிருத்தொண்டரைக்கண்டெண்டிலர்போலக், குறையிழைத்தனையாற்குறுமுனிவரன்கொதித்தெழுந்தெழுந்தனன், மறைதரும்பிரமிட்டனைவிடுத்துனைவைதனன்வயவேந்தே. (௯உ)

மாயனான்முகன்முதலபுத்தேளிருமாதவநனியாற்றி
ஏயுமாறரிதாகிவந்தெய்தினரிப்பதிதனைவெற்பின்
றாயமாமுனிநிமித்தமாயெளிதில்வந்தெய்திநீதொழப்பெற்றாய்
மேயசெய்வினையிலருமேம்பவெரிம்மேதினிதனிலம்ம. (௧௩)

உரைக்குமாறெவனித்தலப்பெருமையையுரைக்குதுமறை
நான்கு, மிரைக்குமாதிமாபுரங்கருவூரெனவிவைகிடந்திடமே
ரு, வரைக்குநேர்புயமானவேலிறைவநின்வல்வினைப்பிழம்பெல்
லாங், கரைக்குமோர்மருந்துரைக்குதுமுட்கொளாயினியுளங்க
வலாமே. (௧௪)

தளஞ்செறிந்தசெந்தாமரைச்சதுமுகன்சராசரந்தரவேண்
டி, வளஞ்செறிந்தமாதவம்புரிந்தாங்கிலவள்ளல்பூசனையாற்றிக்,
களஞ்செறிந்தமங்கலந்திகழ் வாணியைக்கடிமணம்புரிஞான்றி,
னுளஞ்செறிந்தபேருவகை யோடளித்ததோரொண்புனற்றட
முண்டால். (௧௫)

பூத்தவுந்தியனைந்தருநீழலிற்பொலிபவன்புத்தேளிர்
மீத்திகழ்ந்தமாமுனிவரர்நனிதவர்விஞ்சையர்சிவயோக
ரார்த்ததெண்டிரையார்கலியுலகின்மேவந்தணர்முதலாயோ
ரேத்தியேத்திநின்றுடுதற்கு ரியவவ்விலஞ்சிதாணிறையோனே.

ஊசலொத்துழல்பிறப்பிறப்பெனுமவையொழிப்பதுபிற
ப்பெல்லாம், பாசவல்வினையாலெழும்பிணிகளைப்பறித்தெறிவ
துமூழ்கு, மாசைவைத்துளோர்முத்திவீடடைவதற்காயதுகமழ்
கொன்றை, வாசமொய்த்ததாரமலனதுருவமாய்வயங்குவதுய
ர்வேலோய். (௧௭)

சாற்றுமாங்கிலநாயகன்சேதிமந்தனக்குநீடென்பாலி
னேற்றுவிற்கணைமும்முறையெய்வுழியெய்துமாயிடைவெய்ய
மாற்றலார்நிணங்கமழ்ந்துயிர்பருகியமதுகைவேல்வயவேந்தே
கூற்றமன்னவெம்பிணிநனிதொலைந்திடக் குளிர்தடங்குடைந்
தாடி. (௧௮)

சீதவெண்ணெய்மால்வரையதனுத்தரத்திசையினன்முக
ன்குண்ட, மாதுபாகனாலயமிவைமூன்றையுமொருங்கைமாம
ணித்தேரூ, ராதவன்குணக்கெழும்பொழுதாதியாக்குடக்கினு
ள்ளடைகாறு, மேதமொன்றுறுவகையிருநான்குநாளிறைவனை
வலஞ்சூழ்ந்தே. (கூகூ)

வஞ்சியெம்மிறைமலரடியருச்சனைவழாமையினனியாற்றி [றி
லிஞ்சொன்மாமுனியிவெங்கொடுஞ்சாபமுமினிர்தெழிலுருவெய்
யஞ்சலார்திறையளப்பமாநிலம்புரந்தமலனார்மலர்த்தாளி
னுஞ்சுவாழ்குவையுண்மையீதுண்மையீதுரைத்த வாறியற்றெ
ன்றான். (க00)

இயற்றுகென்றமாமுனிவரன்பணிதலையேற்றிலஞ்சியினு
டிப், புயல்கிடந்தவப்பொருப்புமக்குண்டமுங்கோயிலும்பொலி
வெய்த, நயப்பினால்வலஞ்சூழ்ந்தனனாநிலைநாயகன்மலர்த்தா
ளில், வயக்களிற்றினான்வந்தனைபுரிந்தனன்வானவர்வியப்பெ
ய்த. (க0க)

நாலிரண்டுநாளியற்றலுமாநிலைநாயகனிளமென்றோட்
சேலிரண்டனவிழியுமைபாகமுஞ்செஞ்சடாடவிப்பொற்பு [ன்
நூலிரண்டினொடொன்றொளிர்மார்பமுநோக்கிய விழியொன்ற
மேலிரண்டுமாமழுவரதாபயமென்கையுமிளிர்வெய்த. (க0உ)

கொற்றவெள்விடைமிசையிலோராயிரங்கோடிசூரியரொன்
று, யுற்றபேரொளிமழுங்கவோரோங்கொளியாயுதித்தெழவொ
ன்னார்ச், செற்றவாட்பெருங்சூரிசிறனனுடற்பிணிதீர்ந்தெழிலு
ருவாய்ந்து, முற்றுநோக்கினனிருகணீரருவியின்மூழ்கிவீழ்ந்
தெழுந்தானால். (க0௩)

கண்டகண்களுமுகிழ்த்தசெங்கைகளுங்கனைகழற்றிருப்பாத
முண்டகங்களிற்செலுத்தியநெஞ்சமுமுழுவதுநெகிழாமே
கொண்டவேட்கையனாகிமெய்விதிர்த்தனன் குளறிவாய்குளிர்
கொன்றைப், பண்டரங்கன்முன்னாடினனாடினன்பாடினன்று
ஙிஙீ ந. (க0௪)

வேறு.

நீடியகரியமாலுநீண்டவெண்கணனுமுன்னங்
தேடியசிவனேபோற்றிசெழுமறைமிருதியெல்லாம்
பாடியபரனேபோற்றிபரிபுரமொலிப்பமன்று
ளாடியவமுதேபோற்றியாங்கிலநாதாபோற்றி. (கoரு)

கரணமேகடந்துநின்றகடவுளேபோற்றிநாகா
பரணனேபோற்றியைந்துபதமெனநின்றாய்போற்றி
பிரணவவொளியேபோற்றிபிஞ்ஞகாபோற்றிபேணு
ரரணமூன்றடுபுன்மூரலாங்கிலநாதாபோற்றி. (கoசு)

மன்னிராசதகுணத்திலயனெனவகுத்தாய்போற்றி
யுன்னுசாத்துவிதத்தாழியோனெனவளித்தாய்போற்றி
முன்னுதாமதத்திலாதிமூர்த்தியாய்முடித்தாய்போற்றி
யன்னிலைகடந்தாய்போற்றியாங்கிலநாதாபோற்றி. (கoஎ)

பண்ணியதெல்லாம்வெய்யபாதகம்பாவிநெஞ்சி
லெண்ணியதெல்லாம்பொல்லாவஞ்சகமல்லாலென்ன
புண்ணியஞ்செய்தேனுயேன்பொழியருள்சுரந்தபோர்வேற்
கண்ணியோடெதிர்ந்துகாட்சியளித்தனைகருணைவாழ்வே. ()

இத்துதிபெருகவேத்துமிறைவனைநோக்கியீசன்
கொத்திலகியதார்வேந்தேகுரவனதுவளகத்தி
னத்திலகியநீராடிநமையும்வந்தனைபுரிந்த
வத்திறமையினுற்சாபமகன்றனையன்பின்மிக்கோய். (கoசு)

கேட்குதிகருதுமின்னும்வரமெனக்கிளத்தலோடும்
பூட்கைமால்யானைவேந்தன்போற்றிநின்றடியேனுய்ய
வாட்கொளுமமுதேயுன்றனடியருக்கடியர்செய்ய
தாட்கமலங்களுள்ளந்தரித்திடவளித்தியென்றான். (ககo)

அவ்வரமகிழ்வினல்கியருள்கொடுத்தயன்மாலுள்ளம்
வவ்வியவிலிங்கந்தன்னின்மறைந்தனன்மறையுணின்றோன்
றெவ்வடுவேலினுனுந்திருவளர்கருவூரீச
னெவ்வமில்பூசைநின்றளாற்றியாண்டிருந்தபின்னர். (கக்க)

கொடிநெடுங்கொடிஞ்சியந்தேர்கொலைமதக்களிறுபாய்மா
வடுபடைத்தலைவருற்றாரமைச்சர்வந்தெதிரிறைஞ்சக்
கடிபொழிற்புயல்கண்டாலுங்களிமயில்கவலக்காமர்
குடியிடைமடவாராடுந்தொன்னகர்விசாலைபுக்கான். (௧௧௨)

புகுந்தவாலுளைமடங்கலாதனம்பொலியமேவி
முகுந்தனுமெனக்குயிற்றுமுழுமணிமகுடஞ்சூடித்
தகுந்தனிக்கவிகைவட்டச்சசியெனநிழற்றவெற்பின்
மிகுந்திரைவேலைஞாலஞ்செய்தொழின்மிளிரவோச்சி. (௧௧௩)

அந்தணர்பசுவிரப்போரதிதியரமலனன்பர்
தந்தமக்குதவிவேடந்தவளவெண்டிருநீறாடி
வந்தனைநாளுநாளும்வளம்பெறவளஞ்செலுத்தி
யிந்திரதருவினோங்கிவெறுத்திடநீப்பவெண்ணி. (௧௧௪)

மூசளிமுரல்பூங்கொன்றைமுகிழெருக்கணியும்வஞ்சி
யீசனைப்பூசையாற்றும்பேற்றினாலீன்றதோன்ற
லாசைசூழுலகங்காப்பவணிமணிமகுடஞ்சூட்டிக்
காசினிமதிவல்லோர்பாற்கையடைகொடுத்தபின்னர். (௧௧௫)

திருக்கிளர்கருவூரெய்தித்திகழ்தவமுஞற்றியன்னோ
யுருக்கிளர்கருவூர்தன்னிலுதித்திடாதரவுவெள்ளை
யெருக்கிளமதிதாழ்சென்னியெம்பிரானும்பர்காணு
மருக்கிளர்தளச்சரோசமலர்ப்பதமருவலுற்றான். (௧௧௬)

கொண்டலையனையசெங்கைக்கோபிதாரத்வசன்றான்
புண்டரிகத்தோன்வாவிகுடைந்தரன்பூசைமுற்றித்
தண்டமிழ்முனிவனிட்டசாபமதொழிந்தவாறு
கண்டனன்யானுமன்றுகாலவமுனிவர்கோவே. (௧௧௭)

விரிந்ததொல்வேள்வியாற்றும்விரிஞ்சனதுவளகத்திற்
பரிந்துநீராடிவஞ்சிப்பசுபதிநாதற்போற்றிப்
பிரிந்திடற்குளம்வாராமேபெட்பொடுந்தவங்களாற்றி
யிருந்தனன்றிவசமூன்றுண்டிருந்திடாமுனிவருண்டோ. ()

இச்சரிதையினையேட்டிலெழுதினோர்படித்தோர்கேட்டோ
ரச்சமிலரசனுதினாதனையகத்திலன்பு
வைச்சுமுன்றுதித்தபாட்டைவழுவறக்கற்றோர்நாளு
நச்சரவணிந்தோன்முத்திவீட்டினைநணுகிவாழ்வார். (௧௧௯)

மலரயன்றேடுமிலஞ்சிமானவேலரசன்மூழ்கிச்
சலமுறுபாவநீங்கிமுத்தியைச்சார்ந்தவாறு
பலனுறவுரைத்தாம்சோரனொருத்தனேபரமன்சாத்துங்
கலனவைகவர்வான்புக்குப்பெற்றவைகழறுகின்றாம். (௧௨0)

கோபிதாரத்துவசன்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆ சருக்கம் ௧௪-ற்குதிருவிருத்தம்-ருகூ0.

---

## விபண்டகச்சருக்கம்.

பரசுதரர்கருவூரர்வேளைக்காய்ந்தார்பஃறலைராவணன்வலி தாளுகிரிற்கண்டா, ரிரவிகூரெயிறுகுத்தார்மதியைத்தேய்த்தா ரொரிகையறுத்தார்கூற்றையுதைத்தார்காலா, னரகரியைச்சரப வுருவெடுத்துமாய்த்தார்நான்முகன்சென்னியைக்கொய்துகபா லமேற்று, ரரணமூன்றினையுமிழநகையால்வென்றாரானுலுமரு ளியுமன்பரமே. (௧)

வேறு.

அண்டரியசண்டனவனன்றியடுபோரி
லெண்டருவிபண்டகனெனும்பெயரினுனு
முண்டொருசமன்படியிலென்றிடவுலாவிக்
கண்டபொருள்கொண்டுயிர்கவர்ந்துதிரிசோரன். (௨)

செஞ்சுடுசரஞ்சிலைசெறிந்தகரனீடும்
வஞ்சகநிறைந்தகொடுநெஞ்சகனுள்வாடி
யஞ்சினர்சரண்புகவடைந்தவர்களேனும்
வெஞ்சினமுதிர்ந்துயிர்விழுங்குகொலைவேடன். (௩)

பிறந்தவர்கடங்களினடம்பழிபிறங்கச்
சிறந்தவணிருந்தவதர்சென்றவர்களங்க
மிறந்தவருநன்பொருளிழந்தவருமன்றி
மறந்துமுயிருய்ந்தவர்களில்லர்சிலர்மன்றே. (௪)

நெடுங்கலிநிலங்கொளநிரந்தரம்விரைந்தங்
கடுங்களவினெண்பொருள்கவர்ந்துநனிதங்கும்
விடுஞ்சடரினன்றிசைவிலங்கவழல்பொங்குங்
கொடுஞ்சுரநடுங்கிடுமவன்கொடுமைகண்டே. (௫)

மானுடர்களாயபசுமாயவலிதாய
வூனுடலைநூறிவிழிசீறியுளம்வீறி
மேவனிலெழுநாடரெனும்வேடர்குலநீடுங்
கானினிடைசேருமொருகாருழுவைநேர்வான். (௬)

கோச்சுரபியாவிகொளல்கோட்டியகன்னெஞ்சான்
பூச்சுரியலாரையுயிர்கோக்கவுளமெஞ்சா
னச்சிரமம்வேவமனைதீக்கொழுவவஞ்சான்
மாச்சலதியோவியெரிகாட்டின்வருநஞ்சான் (௭)

வீட்டினிறையூடுதிரிவித்தைபலகற்றே
னோட்டநடையால்விசைமருத்துவினையொத்தோன்
வாட்படைகளேவிலகவைத்தவதகத்தோன்
கோட்களவிலேபுரிகுருத்துவமிகுத்தோன். (௮)

நீடுவரையூர்புறவனீணகர்முன்னீரூர்
நாடுவயல்சூழ்மருதநானிலமுமோடி
மாடுதுகில்பூண்முதலவாயபொருள்வாரி
யோடுலவைவேகமெனவோரிரவின்மீள்வான். (௯)

செப்பரியசிற்சிலதலத்திடைதிளைக்கு
மப்பொருளளப்பிலவெடுத்துடனழிப்ப
னிப்பரிசினைத்தவிரெனப்பிறர்விலக்கின்
வெப்புறவிழித்தவரைவெட்டியெறிதுட்டன். (௰)

வேறு.

சுற்றிகாற்படையினுற்சூட்சியாற்சூழ்ந்துகைப்
பற்றினார்நேத்திரம்பார்த்திடப்பாறுவான்
மற்றையார்செய்வதென்வன்கொலைக்கஞ்சிமுன்
பெற்றதாய்தந்தையார்பேசவாய்கூசுவார். (௧௧)

தென்றிசைக்கோமகன்றிண்கையிற்றங்குறும்
வென்றிவெம்பாசமேவீக்கினல்வீக்குறுந்
துன்றுமக்கூற்றுவன்சூலமேயாவியைக்
கொன்றவனுக்கையைக்குத்தினுற்குத்துறும். (௧௨)

பாரின்மற்றேவரேபற்றுவார்குத்துவார்
சோரருட்சோரவேசோர்வுகொள்சோர்வினு
ரோழற்காயகீரற்றவெம்பாலைசற்
றீரமுண்டெனினுநெஞ்சீரமில்லாதவன். (௧௩)

கண்களின்றுழியுண்காயமுன்றூட்டுவ
னெண்கணைவாக்கிடியேற்றினைக்காட்டுவ
னுண்குமூனுந்தியாமுயர்புறங்காட்டின
னெண்குபோற்பங்கிமெய்யீட்டியவேட்டுவன். (௧௪)

மோகமேமூலமாய்மொய்கொள்வஞ்சங்கொடுஞ்
சாகையாய்ச்சோர்வெலாந்தாம்பணைக்கொம்பராய்
வேகமேபூவலிக்காய்கொலைவெங்கனி
யாகமாபாவநீடாருவேயாயினன். (௧௫)

எக்குலத்தாயினுமெத்தொழில்பூண்டுளா
ரக்குலத்தார்கள்போலத்தொழிலாற்றிடத்
தக்ககோலங்களிற்சார்ந்துசார்ந்தேயவர்
மிக்கவாம்பொருளெலாம்வேறுகொண்டேகுவான். (௧௬)

வேறு.

செற்றம்பாற்றியகுரவற்சேர்ந்தடியார்போலொழுகி
யுற்றன்பாற்றீக்கையும்பெற்றெனதுபொருளுடலாவி
மற்றன்பாற்கொண்மெனநீர்வார்ப்பவர்போல்வார்த்தங்க
ணற்றம்பார்த்தவர்கள்பொருளுடலாவியவைகொள்வான். (௧௭)

அண்ணலார் திரவியமோரணுவளவுகவரமன
மெண்ணினோர்நரகினிடைப்புகுவரெனப்பிறர்தம்
முண்ணிலாவிடவுரைத்தாலயத்துரியார்போன்றுநுதற்
கண்ணினன்பொருள்கவர்ந்தகள்வனையாரளவிவோர். (கஅ)

அங்கணன்சீரடியவர்பாலணுகியுங்களடிபணிவோர்
தங்களடிமலர்பணியுந்தமியன்யானெனச்சாற்றி
யிங்கினியுய்ந்தேனெனத்தாழ்ந்திறைஞ்சிநுகர்சேடமெல்லா
நுங்கியவர்பொருள்கவர்ந்தகள்வனையார்நுவலுவார். (கக)

இவ்வியல்புபிறழாமேயிருநிலனீடியிருழப்ப
வவ்வியநெஞ்சினனாகியவனுறையுநாட்கருவூர்ச்
செவ்வியநாடகநவிலுஞ்சிவபெருமான்பதசேர்வை
வவ்வியமார்கழித்திருவாதிரைவிழவுமருவியதால். (உ௦)

அணிவிழாத்தொழுதுகதியடைவானந்தணரையர்
வணிகர்சூத்திரர்முதலமற்றையயாவரும்பகுவாய்ப்
பணியின்மேற்கிடந்தபுவிதருங்கருவூர்ப்பதியினுளந்
தணிவிலாமையினடந்தார்சகரர்கொடுங்கடல்போல. (உக)

செருமிநிரைநிரைதொக்குச்சேர்ந்ததரின்வருவோரை
மருவுதிரெங்கெனவினவியானும்வருகுவலென்றே
பெருவினையொன்றுயவுருப்பிறங்குவிபண்டகனுமுட
னொருவருளமறியாமேயுறுங்களவுகொளவேண்டி. (உஉ)

சென்னியின்பின்முழ்குடுமிசேர்த்திமுந்நூலுரநாற்றி
வன்னிவளர்ப்பவரணியுமணியிழைத்தகுழைதாழ்த்தி
யன்னெறிவெண்டுசுமருங்கசைத்துத்தரீகம்வரை
துன்னுபுயத்தோட்கலந்துதுலங்கவெயில்லங்குவித்து. (உங)

வெண்டிருநீற்றொளிநுதலின்மிசையிசையவசையிறிரி
புண்டரமேவரப்புனைந்துபுயமருமங்கரமாதி
கொண்டவெணெந்துரமிடறுகுவவுதோட்சிரஞ்செவிகைக்
கண்டிகைபல்விதத்தணிந்துகரமிசைப்புத்தகமேந்தி. (உச)

மெய்வேடமெனப்பலரும்விரும்பவரும்பொருள்கவரப்
பொய்வேடம்புனைந்துமலர்ப்பூங்கணைதாங்கியகருப்புக்
கைவேடனுடல்கடிந்தகண்ணுதலோன்கருவூரி
லுய்வேடத்தவரிடையவ்வொருவேடன்மருவினான். (௨௫)

மருவுமணிமாளிகையுஞ்சூளிகையுமாடமுநீ
டெருவருமுன்றிலுமனையுந்தெற்றியுமுற்றொருங்குறைவோ
ரருகணைந்துமவர்கணினைவாராய்ந்துமவ்விரவிற்
பொருள்கவர்தற்கிடமின்றிப்புந்தியிலொன்றினைநினைந்தான்.()

தாமநறுங்கொன்றையினான்றனைப்போற்றத்தரணியுள்ளோர்
பூமருவுமண்டபத்திற்புகுதுவார்புகுநெருக்கின்
மாமணியினாலிழைத்தவரதனணியாபரணம்
யாமெளிதிற்கொளலாமெனக்கோவிலெய்தினான். (௨௭)

வேறு.

வாணனார்குடமுழவொலிவானொலிமறைப்ப
நாணவார்கடலெழுமொலிவளையொலிநரல
நீணிலத்திடைப்பல்லியநிரைநிரைதுவைப்ப
வீணைவிஞ்சையர்நரம்பிசைவரவிரலுளற. (௨௮)

இத்தலத்தருமறையவரிமையவரொழிந்தோர்
பத்தர்மொய்த்தரகரவெனப்பன்முறைபோற்றிக்
கைத்தலஞ்சிரமுகிட்புறக்கண்கணீரருவி
தத்திடும்படிப்பார்மிசைதாழ்ந்தெழுந்திறைஞ்ச. (௨௯)

மூக்குறும்பெறிந்தைம்புலனடக்கிமூச்சவித்து
மிக்குறுந்தவமிழைக்குநரருள்வெளமூழ்கி
மைக்குறும்பனமலவிருணமித்தமாமுனிவர்
நெக்குநெக்குருகிப்புடைநெடுங்கணீருகுப்ப. (௩௦)

எழுதவம்புரியிருடியரெண்வகைவசுக்கள்
வழுவில்கிம்புருடாதியர்மருத்துவரிருவர்
தழுவுசாரணருரகர்கோசரர்சித்தரியக்கர்
பழுதிலாரணமறையவர்யாவரும்பரவ. (௩௧)

அடுக்கிவைத்தபேரண்டங்களவைதமக்காணி
கொடுத்துவைத்தன்னிலைபெறுகுரைகடற்புடவி
நடுத்திகழ்ந்தபொன்னசலத்தைவலன்கொடுநடவு
மடுத்தபேரொளிச்சூரியரளப்பிலர்வணங்க. (௩௨)

அண்ணலார்திருவுருவிலோருருவியைந்தண்டத்
தெண்ணிலாதபுத்தேளிருக்கின்னமுதளிக்கும்
வெண்ணிலாமதிக்கடவுளும்வேள்விகட்குரிய
தண்ணிலாவெரிக்கடவுளுஞ்சரணெனத்தாழ.. (௩௩)

குண்டுகட்பொறிப்படர்மருப்புறுகலைக்குறுந்தாட்
டிண்டிறற்கருமேதியின்வெரிநிடைத்திகழுந்
தண்டமுத்தலைச்சூலமுந்தரித்தகைச்சண்டன்
பண்டுதைத்தபூங்கமலமென்பதமுறைபணிய. (௩௪)

தென்றிசைக்குடபாலுறைநிருதிசேவிப்பத்
துன்றலைச்சுறவிரலையூர்தலைவருந்துதிப்பப்
பொன்றலைப்புறுமளகைவச்சிரவணன்போற்றக்
கன்றுழைக்கையீசானனுங்கண்டுகண்களிப்ப. (௩௫)

பாய்திரைக்கடற்பயோததிவயிறலைத்தெழுந்த
தூயதெள்ளமுதாசனர்சுடர்முடித்தொகையின்
சேய்மணித்திரளுருஞ்சிவீழ்தரச்சென்னிதாழா
வாய்பிழிச்செழுமலர்பொழிந்தஞ்சலித்திறைஞ்ச. (௩௬)

செங்கண்மாயவன்கைமலர்சென்னியின்முகிழ்ப்பப்
பங்கயன்சதுமாமறைப்பனுவலேத்தெடுப்ப
வெங்கணுண்மருப்புடுகளிறூர்விசும்பிறைவன்
கொங்கிவர்ந்தபைந்தாருவின்கொழுமலரிறைப்ப. (௩௭)

இடர்கடிர்தரமுன்றிலின்வெள்ளிடையின்றிப்
படரும்வானவர்மேனியிற்பசும்புணீரொழுக
விடல்குழைந்தவெம்பிறைமுடியொருவனதருவக்
கடவுணர்த்தியெம்மடிகள்கைப்பிரம்பொலிகறங்க. (௩௮)

நாடிநாரணனுன்முகனுதியோர்பதமுங்
கோடிகோடியண்டங்களுங்குடங்கையினடக்கி
யாடியாடிமன்றுடியையமலனேயேத்திப்
பாடியம்மனையாடியப்பூதங்கள்பணிய. (௩௯)

உடனிருந்தவியுண்ணவேட்டவருயிருலப்ப
விடலருந்தவத்தாற்றியவேள்வியிற்றக்க
னடலவிந்தொருமுடிபெறவொருமுடியறுத்த
தடறுவாட்படைவீரபத்திரன்புடைதயங்க. (௪0)

படுமதங்கவிழருவிபோலிருகவுட்பாயு
மடுபெருங்களியானையூரையனுந் துதிப்ப
மடிசெவிக்கடுங்குரற்சுருள்வால்புனலுமிழ்
முடுவல்வெம்பரிவடுகனுமுடுகிவந்திறைஞ்ச. (௪௧)

குழுமிவண்டினங்கூட்டுணநறவுகொப்பளிக்குஞ்
செழுமலர்த்தொடைச்சேட்டிளங்கொன்றைசூழ்வேணி
மழுவலத்தருண்மாணிடத்தோருழைவைத்த
முழுவெண்ணீற்றெளிபழுத்தமெய்யுருத்திரர்மொய்ப்ப.

இழைதயங்குரக்குடவயிற்றிளம்பிறைமௌலிப்
புழைநெடுங்கைவெண்புகர்முகத்தொருபெருங்கோட்டுத்
தழைதருஞ்செவியிச்சையாதியதழங்கருவி
மழைமதஞ்சொரிகளிற்றொருபான்மகிழ்வெய்த. (௪௩)

இருபெருந்துணைவியர்மனங்கவர்ந்தபேரழகுங்
கருணையங்கடலலைபெறிகண்களீராறும்
பொருவிகந்தவேன்முதலியபடைகளும்பொலியு
மொருசிகண்டியூர்முருகவேளொருபுடையுலவ. (௪௪)

சிவபரம்பரைதிரிபுரைதிகழ்தனுகரண
புவனபோகங்கடாங்குகாரணிபுலன்போக்குந்
தவமிருந்தவருளமலர்த்தவசில்வீற்றிருக்கு
முவமையொன்றிலாவுமையவளமைவுறவொருபால். ()

வந்துருத்திரகண்ணங்கடாம்வளர்த்திருமருங்கு
மிந்துவேணியினதியலையெறிவதுபோலச்
சந்தமால்வரைப்பிறந்துபைந்தமிழொடுபழகி
மந்தமாருதமுலாவரக்கவரிகாலசைப்ப. (௪௬)

கிற்றிருந்தவெண்டிங்களிற்கெழுசுவையமுத
முற்றிருந்தவேணியிற்பகீரதியுவட்டெடுப்ப
நோற்றிருந்தவெண்மதிக்கலைமூன்றெனநுதலி
னீற்றிருந்திரிபுண்டரநிலவுகால்விரிப்ப. (௪௭)

அங்கியென்றொருவிழியிருள்பருகிடவலரிப்
புங்கவன்வலன்விழியெனப்பொலிதரநிலவுத்
திங்களென்றொருவிழியிடன்றிகழ்தரச்செழும்பொன்
றங்குகுண்டலந்தோடிவைகன்னங்கடாழ. (௪௮)

உழுவலன்பினுலவையுட்புகுந்துமீண்டலவ
விழையுமாதவரிருந்தவாவெனத்துண்டமிளிர
வெழுதருஞ்சதுவேதமுமாகமமனைத்து
முழுதுமோதுசெம்பவளவாய்ப்புன்னகைமுகிழ்ப்ப. (௪௯)

மறுத்தவிர்ந்தவிரொளிதிகழ்சுவைமதிவதனம்
பொறுத்தபேரெழிறங்கமான்முதலபுங்கவர்பால்
வெறுத்தழன்றுயிர்பருகவேலையினடுவெழுந்து
கறுத்திருண்டவெங்காளமுங்கண்டமுங்கவின. (௫0)

அண்டநீள்சுவர்ப்புறங்களினுடகச்சிகரி
திண்டிறற்கிரிநான்கெனத்திரள்புயமுரிஞ்சத்
தண்டரும்புரிநூலும்வெண்டரளமாலிகையும்
வண்டலம்புதார்க்கடுக்கையும்மார்பமும்வயங்க. (௫௧)

வடவையிற்கொழுந்தெழுசிகைக்கொழுந்தழல்வனப்பு
முடல்சுருங்கியதமருகப்பறையுமொண்கரமு
மிடர்கெடத்தனிவீசலைத்தலமுமேரிருந்த
தடமலர்க்கரவபயமுந்தனித்தனிவயங்க. (௫௨)

மனம்விழைழுங்தொளிருதரபந்தனநணிவனப்புஞ்
சினவுடற்பொலிபுலியதளாடையுந்திருநீர்க்
கனைகடற்கடுவிருந்தபறகட்செவிக்கச்சும்
புனைமருங்குமாடகத்தெழுதொலியலும்பொலிய. (ருக)

குஞ்சிதத்துடனெடுத்தபொற்றாமரைக்குனிப்பும்
வெஞ்சமம்புரிமுயலகன்வெரிநுரநெளிப்பச்
செஞ்சவேதிலத்தூன்றுபொற்பாதமுந்திகழ
வஞ்சிலம்பிடைச்சில்லரிமறையொலியார்ப்ப. (ருச)

உலகெலாம்படைத்தளித்தழித்துடன்றிரோபவித்தே
யலகிலாரல்வழியனுக்கிரகிக்குமைந்தொழிலு
நிலவுநீடுதத்துவம்புணர்ந்தகன்றுநின்மலமா
யிலகுபேரளியிமைப்புறநிலைத்தவெம்பெருமான். (ருரு)

கண்டுளோர்பவங்காணுறுதனுதினங்குனிக்கும்
விண்டொடுங்குடுமிப்பொதுமண்டபமீதி
னண்டர்நாயகனணியிழைகவருவானணைந்து
தொண்டர்சூழ்நெருக்கிற்றுயரெய்திபச்சோரன். (ருகூ)

பெயரவோரிடனின்றிவெவ்விழித்துணைபிதுங்கி
யயருநெஞ்சனாய்நிலத்தில்வீழ்ந்தழுங்கிமெய்சோர்ந்து
மயரறத்தொழுபவர்பதமிதிப்புறமாழ்கிச்
சயமொழிந்துநெட்டுயிர்ப்புவீங்குறக்கிடந்தனனால். (ருஎ)

கிடந்தவன்றனைக்கிட்டிநின்றார்சளிகாணு
மடந்தைபாகனைத்தொழவந்திம்மறையவனந்தோ
வடர்ந்தபேர்நெருக்குழியகப்பட்டயர்ந்தனனென்
றுடன்கொணர்ந்துவாயிலிற்செலுங்காலுயிருலந்தான். ()

வேறு.

ஆவிபோனபின்னரினரியநுண்ணிடைமடத்
தூவியன்னமென்னடைத்தூங்கருமால்வரைத்
தேவிபாகனேவலிற்றிகழ்சிவகணங்கடா
மேவினாரதன்முன்னர்விபண்டகனுயிர்கொள்வான். ()

கூற்றுவன்றனைவலித்குழமிக்கொள்சினக்கொடுங்
காற்றுவந்ததோவெனக்கடிதின்வந்தனுவவர்
சீற்றமுமிழ்ந்துகட்சிவப்புமாறிவீறுபோ
யாற்றலின்றிவெள்கிமீண்டந்தகற்குரைப்பவே. (சுo)

அந்தகன்றுளங்கிநெஞ்சமஞ்சிமாகவற்சியுற்
றெந்தையன்பனுவதற்கேதுவேதென்றெண்ணுறச்
சந்ததமவன்வினைசலிப்பறவெழுதிய
கந்தமாமலர்க்கரக்கணக்கரும்மயக்குற. (சுக)

தீட்டியகணக்கெலாஞ்சிதைந்துசெல்லரிப்பவே
கூட்டியபடைக்கலங்கள்யாவுங்கூர்மழுங்கவே
வாட்டிவாட்டியாவியையவிர்ந்துசூழ்ந்திடவென
வீட்டிவைத்தவெங்குழியெரிநிரயம்பாழ்பட. (சுஉ)

ஆண்மைவேந்தனைந்தவெம்மண்ணலார்கணங்கடாங்
கூண்டுவெங்கொலைபுரிக்கொடுஞ்சிலைக்கிராதனைத்
தீண்டரியசோதிரூபஞ்சேர்த்திமாமணியினுற்
காண்டகவிளைத்தபொற்கதிர்விமானத்தேற்றியே (சுந)

வேறு.

ஆடகந்திகழணிநகரிமையவரணுகித்
தோடகஞ்செறிகற்பகநறுமலர்தூவிப்
பாடகஞ்செறிபதமலர்விஞ்சையர்மகளிர்
மாடகம்பொலிமகரயாழ்வரிசையினிசைப்ப. (சுச)

சுரர்மனங்கவர்சுரிகுழற்பணைமுலைத்தொடித்தோட்
சரமடர்த்துபைங்குழைமுகந்தடவிநஞ்சூறு
முரவுவாள்விழித்திலோத்தமையுருப்பசிமுதல
வரமடந்தையர்நடஞ்சதிவிதிமுறையாற்ற. (சுரு)

வரைபொருந்தடவிளமுலைவரையரமாதர்
விரைமலர்க்கரஞ்சேப்புறச்சாமரைவீசக்
கரைபொருங்கடலொலிகொலோகார்ப்புயலசனி
யரவமேகொலோவெனமுரசந்தரத்தார்ப்ப. (சுசு)

துயிலுமாயனுந் தூயநான்முகவனுந் துதிக்குங்
கயிலையங்கிரிச்சிகரியிற்கலந் திமகிரிவாழ்
குயில்பிருக்தொருபுடைகளிப்புறவருள்கொழிக்கு
மயின்மழுப்படையண்ணல்பா லுய்த்திறைஞ்சினரால். ()

சுருதிசேர்கருவூரிலாருயிர் துறந்தோனைக்
கருணைநாயகன்விழிக்கடைசாத்திநங்கணங்கட்
கொருபெருந்திருத்தலைமைசார்ந்துறைகுதியென்று
வருளின்னிதற்கையமின்றுண்மையாமறிநீ. (௬௯)

புண்ணியப்பொடிமேனியன் புனைகலன்கவர்வா
னெண்ணிவந்துயிர் துறந்தவன்பேறிதுவென்றான்
மண்ணிலத்திதைப்போலொருதலமிலைவணங்க
நண்ணினோர்பெறும்பேற்றினையாவரேநவில்வார். (௬௧)

சோரன்முத்திபெற்றுய்ந்தவிச்சரிதையைத்துணிந்து
பாரினிற்படித்தோரிதுகேட்டுளோர்பரமன்
சாருமக்கயிலாயமெய்துவர்சதுமறையோய்
சேருவாய்கருவூரினிசெய்தவப்பயனால். (௭0)

நீதவப்பயனுடையையாலிதுநிகழ்த்தினம்யாஞ்
சீதநன்புனற்றீர்த்தயாத்திரையின்மேற்செல்கே
மாதவத்தினோயென்றுதேவத்துதியகன்றான்
வேதமாமுனிவிடைகொண்டுமேவினனிருக்கை. (௭௧)

அறவன்வாய்மைகாலவன்றெரிந்தாதிமாபுரத்தி
னுறவணைந்தொருதனிமுதற்பொருளினையொருங்கே
மறைபயின்றருச்சனைபுரிந்துய்ந்துமண்ணினன்றற்
றுறவிர்காளெனச்சொற்றனன்சூதமாமுனிவன். (௭௨)

விபண்டகச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம்-௧௫-இ, திருவிருத்தம்-௪௬௨.

# நியமச்சருக்கம்.



வரியிதழிமௌலிவஞ்சிநாதர்தாயன்வாள்கொடுதன்மிட றுபோழ்ந்திடவிலக்கார், கரியவன்செங்கண்ணிடந்துசாத்தக் கண்டார்கண்ணப்பன்விழிசூலப்பழியென்றெண்ணார், தெரி வையர்நா சியுங்குழலுமரியப்பார்த்தார்சிறுத்தொண்டன்சிறும ழலைக்குதலைச்செவ்வா, யரியமகவினையரியவிருந்தாளானாரா லுமடியார்க்குநல்லர்தாமே. (க)

வேறு.

முயறவத்தினர்முகமுனிமீளவுநோக்கித்
தயவுகந்துமாமுனிவிர்காடமனியப்பொதுவி
னியமுழக்கெழநடநவில்பசுபதீச்சுரன்ரு
ணியமமுற்றிறைஞ்சுநர்விதிநிகழ்த்துதுங்கேண்மின். (உ)

எல்லுதிப்பதன்முன்னரைங்கடிகையென்றெழுந்து
சொல்லலுற்றவத்தொழின்முறைசுசிவரமுற்றிப்
பல்லின்மாசெறிந்தலர்மிசைப்பண்ணவன்றீர்த்த
நல்லெழிற்பொலியாம்பிரநதியிவைபடியின். (௩)

அரையின்மேற்றுணைத்துகில்புனைந்தமலநீர்துளங்காத்
திரைவுறுதுகையாற்குடைந்திமிழ்திரைபுரட்டுங்
கரையினெய்திநீர்நனைதருங்கலைகள்வேறகற்றிச்
சிரமுதற்புலர்துகில்கொடுதிகழ்வுறப்புலர்த்தி. (ச)

புலர்ந்ததூசிரண்டரைமிசைப்பொலிதரப்புனைந்து
நிலந்தயங்குமாறொளிவரநெருங்கிருளிரிய
வலர்ந்தசெங்கதிராதவனணைவதன்முன்னர்க்
கலந்துநித்தியமெய்த்தவக்கடன்புரிகாலை. (௫)

சிற்பரம்பரன்விளம்பியசிவாகமப்படியி
னற்பொடுந்திகழ்கோமயமாசறக்கொணர்ந்து
தற்பரன்றிருமனுக்கொடுசோல்புறவமைந்த
கற்பமுன்றெனக்கழறியவிபூதிகளாதல். (சு)

அடுப்பினுட்டிகழ்சாம்பரையங்கையாற்பிசைந்து
வடித்துமற்றெருதசும்புழிவடிவுறப்பெய்து
தொடுத்திசைத்தபஞ்சப்பிரமத்தொடர்மனுக்க
ளெடுத்திசைத்தமைத்திலங்கியவெண்பொடியாதல். (எ)

வேறு.

இந்திரனயன்மாலேனையர்யாருமேத்தகல்லெரியழலோம்பு, மந்தணர்விரசாமந்திரத்தமைத்தவங்கிகுண்டத்துநீறுதல், சந்திரசேகரன்றன்றிருமடைப்பள்ளிதனில் விளைதிருவெண்ணீறுதல், விந்தைசேராதிபுரத்திடைப்பிரமகுண்டத்துவிளைந்தநீறுதல். (அ)

பூசுரர்மனையிலங்கிகுண்டத்திற்பூத்தநீறுகுதன்ஞான,தேசிகர்மடத்துவேள்விகளாற்றுஞ்சிறந்தகுண்டத்துநீறுதல், பாசவல்வினைவேர்பறித்துநாதாந்தப்படரொளிப்பரப்பினையகத்துளாசறநோக்குஞ்சைவசித்தாந்தரவரிடத்திருந்தநீறுதல். (கூ)

எவ்வணமேனுஞ்சிவபரம்பரமனெழில்வளர்சந்நிதிவிளங்கு, மவ்வணவெண்ணீறுத்தமோத்தமமதாதல்பூதலத்தனுவளவு, கைவணவிரற்கோடெடுப்புழித்தவறிவீழினுங்கதமெழிநரகி, னுய்வணமின்றியருந்தவரேனுமுளைக்குவருண்மையென்றுணர்ந்து. (கo)

. மனனிடையச்சமுறத்திடப்பேணிமதிப்புடனெடுத்துமாமறையோர், புனைகவுத்தூளமரையருந்தியின் மேற்புனைகதொல்வணிகர்பட்டம்போ, ணினைவுறவணிகட்பின்னவர்மூன்றங்குலிவரநீறணிந்திடுக, வினையவென்றரனாகமம்பகர்வழியினண்ணிவெண்ணீறுமெய்பூசி. (கக)

செய்வனகடன்களாற்றுதன்முற்றிச்சிரஞ்செவிகளனுரந்திணிதோட், கைவரவமலன்விழிமணிகவினக்கடவுடன்றியானசிந்தையரா, யுய்வகைகோயிற்கேகுழிசீரோசாதியவுதயவெல்லுமிழும், வெய்யிலாற்சுசியென்றுணர்ந்துதாடப்பிமிதிப்பினுமுளங்கவலாமே. (கஉ)

அனுகிவான்குடுமிக்கோபுரமசலலிங்க மென்றலர்கடுமி றைஞ்சி, நணுகியட்டாங்கமைந்தலான்முக்காணுனிலந்தோய் வுறத்தாழ்ந்து, மணிகிளர்வாயிற்படிமிதியாமைமருவியாங்கத திறன்வணங்கித், திணிமதிலசலலிங்கநீடுவசமார்திருமண்டப ஞ்சிறந்த. (கச)

ஒகரநீடுலலிங்கமங்கணன்ரேய்தீர்த்தநிர்மாலியமுதல
பகர்பசுவிடபம்பூசுரர்குரவர்படர்தவமுனிவரர்முதலோர்
புகரறுநீழலடிமிதியாமேபொருவில்சேதிமவகம்பிடிமை [து.
மகளிரைப் பரிசாரகரையீன்றெடுத்தமாதர்தந்தையரெனமதித்
அடையிலைபருகன்மயிர்வகுந்திடுதலரிவையருடன்களித் தாட,லுடைநெகிழ்த்திடுதலுடுத்தலுட்கவரவுடலின்மாசுகுத்தி டலூரிஞ்சல், குடைதனக்கிடுதறிலநெய்தேய்த்திடுதல்குழீஇப் பிணங்கிடல்சரிந்திடல்கண்,படைகொளலுகிர்குழ்ந்திடலிவை முதலபற்பலகுற்றமும்பாற்றி. (கரு)

புன்முதலியபுன்மலாதியகிடப்பினெடுத்தவைபுறனிடை ப்போக்கித்,தன்மையினலகிட்டாசறமெழுக்குத்தழைதறப்பன் மறைதெளியா, வன்மொழியினரைப்படிற்றொழுக்கினரைக்கா ண்பினுமுகங்கவிழ்ந்தகன்று, நன்மைநான்மறையாகமநவிலொ ழுங்கினவையுளயாவையுநீக்கி. (கசு)

ஒன்றிரண்டளவேவலஞ்செயிற்றீதென்றுணர்ந்துமூன்று தியவியன்ற, நன்றுறக்கோயில்வலன்வரின்முதுகுஞரியோதி பின்மிசைத்தாலந், துன்றியதயிலஞ்சுமந்துமண்மேற்போம்ப டியடிமேலடிதோயச், சென்றுசூழ்வலம்வந்திறைதிருமுன்றி னமுன்புபோய்ச்சென்னிதாழ்ந்தெழுந்தே. (கஎ)

அந்துகிலொதுக்கியொருங்கியுள்ளச்சமரும்பிடவெகுளி யேயாதி, வந்தமாகுற்றங்காண்டமைபகர்ந்துவடிவுடைநாயகியு டன்கா, ருந்துமாமிடறன்சந்நிதானத்தினெதிருறுதொருபு டைசார்ந்து, மூந்துறவிரைஞ்சிலெத்துணையேனுமியல்பொரு ண்முன்னரினமைத்தே. (கஅ)

அமைப்பதொன்றிலதேலாலயமணுகியகங்குழைந்தென்புநெக்குருகிச், சிமிழ்ப்புறுபாசத்தொடர்பினையொருவிச்சிலிர்ப்புறமயிருடல்விதிர்ப்ப, விமைப்புறமஞற்றியொருங்குறநோக்கிபிருகண்ணீரருவியினொழுக்கித், தமக்கெனவருமோர்செயலுமற்றங்கண்பரவசச்சலதியிற்றாழ்ந்தே. (௧௯)

குழறிவாய்குடைந்தம்பட்டடிக்கடிகூத்தாடியும்விம்மிதம்பெருகி, விழைபழம்பொருளேபொருள்விளைவியோமவியாபிமந்திரவுருவாய, கழிபொருந்நூலருக்குமபஞ்சாக்கரவகண்டிதபசுபதியே, யிழகமைஞானனந்தநாடகனேயருவுருவாயவற்புதனே. (௨0)

அணுவினுக்கணுவேயணுவினுக்குணர்வேயணுக்களிற்கலந்தகன்றருளி, னுணுகியபொருளேநுணுகுணர்வுடையோர்நூல்களிற்கிடந்தொளிர்பயனே, நணுகுதற்கரியவெளியினுளொளியேஞாலநீர்தீவளிவெளியா, யெனுமவையாகிநிறைவியாபகமாயிலங்கியபசுபதிச்சுரனே. (௨௧)

எனத்துதிபலவுமெடுத்தெடுத்தோதியேத்தியஞ்சலித்திருவிளைகண், மனத்துதியாமைவணங்கிவெண்ணீறுவழங்கிடின்வாங்கிமால்விடையோன், முணர்த்தறியாமையோருழிவைகிமுறைதரித்திறையடிக்கமலந், தினைத்துணைபிரியினழுங்கிமுன்பிரியாச்செங்கரமுகிழ்ப்பொடுபோழ்ந்து. (௨௨)

தாதைதாடடிந்ததண்டியைப்போற்றிச்சந்நிதிவிளங்குமுன்றிலினவாய்ப், பூதலத்துடலம்படவிழுந்தெழுந்துபுடையிருந்திறைவிழிமணியி, லாதரம்பெருகிமுகன்முகனந்தமக்கமாயிடமணியமைத்த, வேதமினூறைம்பானிருபான்மேலெட்டுநான்கேழிவையேற்றி. (௨௩)

காயகம்வேறுதனித்தனியமைத்தநறுந்தொடையவைகளினொன்றை, மேயமென்கையிற்சேர்த்தியாங்கொருவர்விழிபடிறசெபபலன்குன்றித், தேயுமென்றுணர்ந்துமானதமந்தமுறையெனச்செப்பியவாற்று, லாயவங்குலிமூன்றடைவினங்குட்டமமைத்துமூலங்கொடுசெபித்தே. (௨௪)

சீர்மலிமணியிற்குயிற்றுபொற்கோயிலிடைப்பிரதெக்கி
ணம்புரிந்து, பார்மிசைவீழ்நாட்படாமையிவ்வாறுபரவினோர்ப
ணிவரைபயந்த, வார்புனைதரளவடங்கிடந்திமைக்கும்வளரிள
வனமுலைவனிதை, யோர்புடைதரித்தோனிருபதாம்புயத்திலு
லப்பறவந்துறைகுவரால். (உரு)

ஆரன்ஞாயிறுசுங்கவன்றிகழ்வாரமட்டமிதுவாதசியோணம்
பூரணைமதியெற் புகுந்தினமதற்கு முதற்றினம்புகல்வெதீபாத
ஞ், சேருநாண்மாதமுதற்றினமாதித்திதிக்கதிர்தோற்றியகா
லைச், சார்வறப்பதினெண்கடிகையாதியநாட்டளினூல்சாற்
றியவாற்றால். (உசு)

புலரியினெழுந்துபுதியநீர்படிந்துபுண்ணியவெண்பொடி
சாற்றி, மலிசெழுமலர்பெய்கூடையோர்கரனும்வருபுனற்றசு
ம்பொருகரனும், பலனுறவேந்திப்பதிதர்சண்டாளர்பரமனைப்
பழித்தவர்க்கண்டா, லலரியைநோக்கியெர்தெழுத்துன்னிய
ணிவெண்ணீற்றுளிநுதலணிந்தே. (உஎ)

நந்தனவனத்திலணுகிமென்கமலநான்முகன்றரணனமல,
னுந்துமாதவர்மாமுனிவரர்வலாரியும்பருமொருங்குவீற்றிருக்
கும், பைந்துழாயடியினறும்புனல்பெய்துபரவிமுக்கால்வலஞ்
சூழ்ந்து, முந்துறத்தமியேன்மலர்கொயுங்காறுமகலுவீரெனக்
கரமுகிழ்த்தே. (உஅ)

தேசவிர்கொத்தின்றலைகளைக்கொய்யிற்செங்கண்மால்செ
ழுமுடிகொய்யு, மாசுறுபாவமொருபொழுதறினுந்தீநரகணுகு
மென்றறிந்து, பாசிலையொவ்வொன்றாய்வுறக்கொய்துபணிமல
ர்நாட்கதிரிணைசேர், மாசறுமிலையோடவைமுறைகொய்துவாய்
த்தபைங்கூடையிற்பெய்து. (உகூ)

அருமறைக்கிழவன்முதலியர்தமையீண்டெழுந்தருளுகவெ
னவேண்டி, யிருகரமுகிழ்த்தாகமமுறையாவுங்கூவிளையெம்பி
ரானுருவ, மருமலரிலைகாய்மாமரத்தொடுவேரதன்மணமுதலிய
வனைத்து, திருமலற்குவப்பென்றறையுமென்றுன்னிவில்லுவங்
மூன்மிதியாமே. (௩௦)

ஒருபுடைமருவியிறைஞ்சியொன்றிரண்டுநான்குறுகிளைக ளையொருவிச், செருமுமுள்ளிரிற்பல்பொறிப்புலியாவர்திண்ப ணைமுறிந்திடினிரய, மருவுவரிலையிற்பழுதளவேனும்பழுதல நாகரவண்ணே, கிருமியின்கூடுபழுதெனவகற்றியிலையைமுக்கி ளையொடுங்கொய்து. (௩௧)

பெய்துகூடையினுட்சினகரம் போகிப்பிறங்கவோர்சாரி டைவைகி, யையுறலொழியமீளவுமாய்ந்தாய்ந்தரியதண்புனலி டையலைசி,மையறுமுளத்தராகிவெற்பீன்றவடிவுடைநாயகியெ னவாழ், தையலோர்பாகற்களித்துளோர்சாருபத் திணைச்சார் குவர்திண்ணம். (௩௨)

அன்புசேர்கன்னிமதிவருபூரட்டாதிபூரணையில்வைகறையி லின்புசேராதிநாயகன்முன்னரெய்துமாம்பிரவதிருடைந்து [த துன்பறுகெந்தத்துவாரவாரணமாமனுக்கொடுகோமயத்தோய்ந் நன்புனறலையிற்றெளித்துமீளவுமாம்பிரவதிநதியினுட்படிந்து.

வடிவுடைமங்கைபங்கனைத்தொன்னூல்வழியின்முக்கால் வலஞ்சூழ்ந்து, படிமிசைவீழ்ந்துவணங்கிநின்றிறைஞ்சிப்பரவி நாடகம்பயில்சரணக், கடிமலர்த்தேனையிதயவண்டுண்டுகளிப்பு டனுறைதரவிடுத்த, முடிவிலோர்பிரதெக்கணம்புரிகுவர்தாமு த்திவீடடைகுவருண்மை. (௩௪)

தொழுகுலத்தவனைக்கோவினைப்பரியைத்தோகையைச் சூன்முதியவளைப், பழிபடக்குரைத்தபாதகமவைமாபாதகம திந்தறியாமே, யிழிவுறவிழைத்தபாதகமுப்பாதகமிவைகோடி யுற்பவத்தி, லொழிவறச்செயினும்பசுபதீச்சுரன்றாளுகளதாம ரைகளையுன்னி. (௩௫)

அந்தஞான்றதனிலடியனேன்றெல்லைவினைகளையறுத்தி டுகென்று, முந்துறமலர்தூய்வணங்கினக்கணத்தின்முடிந்திடு முடிந்திடுமென்னு, வெந்தைதொல்வேதவியாதமாமுனிவனெ மக்கருளியதுமக்குரைத்தாம், பந்தவாணவந்தீர்முனிவிர்காளந் தோபரவிலீர்பசுபதிப்பொருளை. (௩௬)

பருவமொன்றலதுதிங்களொன்றேனும்பக்கமொன்றைந் துனொன்றேனு, மொருதினமேனும்வனமலிநறும்பூட்பத்திரமெ னுமிவையொன்ற, னிருமலற்போற்றிநறுங்கனிமூலமுதலநை வேத்தியமுதவி, மருவுசெஞ்சாலிவிதைகையிற்கொண்டுவெயங் கிடவருக்கியம்வழங்கின். (௩௭)

தமக்கெனவுதவும்புதல்வரைப்பெறுவர்தனையருள்ளவர்பெ ருந்திருவுஞ், சுமக்கருந்தனமும்படைப்பர்தெவ்வேந்தர்வலியி னுற்றேற்றபார்நிருப, ரிமைப்பினுனிலமும்புரப்புர்வெம்பிணி யர்பிணிகடீர்ந்தினிதுவீற்றிருப்ப, ரமைப்புநல்குரவர்வறுமை தீர்ந்தவனியளித்திடுமரையராகுவரால். (௩௮)

வஞ்சுளேசற்குப்பாயசந்தூயவமுதெனவாய்ப்புடனளித் து, விஞ்சியபசுவினிழுதுவினுதல்விளங்குமெட்டியிலமாகுதல் வார்த், தஞ்சிழைநூலினிறைதிருமுன்னரணிவிளக்கேற்றியஞ் சலித்தோ, ரெஞ்சலின்முத்தியடைகுவருண்மையென்றருளி னனெமதாசான். (௩௯)

கமலமெல்லிழையாற்கபிலைநெய்பெய்துகடிமலர்ப்பூம்பொ ழிற்கருவூ,ரமலர்முன்னரினோர்திருவிளக்கேற்றுமவர்கள்சங்கா ரமுள்ளளவும், விமலனுறுறையுஞ்சிவபுரிமேவிமீண்டுபாரிடை ப்பிறவாமே, தமலமுமொருவிச்சிவனருண்ஞானந்தழைப்பு றமுத்தராகுவரால். (௪௰)

ஐப்பசிமேடமதிமுதற்றினஞ்சங்கிராந்தியின்மகம்வெதி பாதம், வைப்புறுமத்தோதயமகாவுதயமதிகதிர்மண்டலம்புகுநா ள், செப்பிவையொன்றிலேவகையமிர்தந்திகழுமைவகையகவ் வியத்தோ, டொப்பின்மாலேதுசம்பீரமென்கனிச்சாறேங்குசு த்தோதகமுதலா. (௪௧)

கருணையங்கடவுக்கிவையபிடேகமாட்டினோர்கவலுறுசி னறதீர்ந், திருள்கெடவிமைக்கும்பருதிவாணவன்சூழ்ந்தெண் டிசைமுகங்களுங்குளிர்ப்ப, வொருதனிக்கவிகைநிழற்றிநீரா டையுலகளித்தும்பரேத்தெடுப்பத், தருநிழலரசுபொலிவுறத்தி ருத்திச்சசிமுலைப்போகமேதுய்ப்பார். (௪௨)

சித்திரைத்திங்களடுத்தபூரணையிற்றிலநறுந்தைலமாமலகவித்தகம்வெண்மாவரிசிகறற்காப்புவெண்டயிர்பானவநீதம்,வைத்துருக்கியநெய்கௌவியமைந்துவகையமுதடைபொதி கன்னன், மொய்த்தபால்சுத்தோதகங்குளிரிளநீர்முதலியமுன்னர்நூல்வழியால். (௪௩)

வேதமந்திரங்கொண்டிறைவனுக்காட்டிவிரைகமழ்சந்தனத்தேய்வை, பாதநீள்வேணிமுழுவதுஞ்சாத்திப்பணிமலரிலஞ்சிசண்பகத்தின், ருதிணர்கரவீரத்துணர்மணமூர்தடங்கொணீலோற்பல்முகிழ்த்த, போதிலையலங்கலாயலங்கரித்தோர்புராரிபொற்பதமலர்புகுவார். (௪௪)

ஆரழல்புரையுமவிர்சடைப்பெருமாணுநிலைநாயகன்முன்னர்க், காரகிற்றுகளுஞ்சந்தனத்துகளுங்கலந்தகுங்குலுக்குமஞ்சானெய்,யேருறுதூபங்கமழ்தரப்பணித்தோர்யாவராயினுஞ்சிவபுரியிற், சேருவரொருநூறுயிரங்கோடிதிகழ்தருகற்பகாலந்தான். (௪௫)

பன்னியாம்பகர்வதென்னினிமுனிவீர்பசுபதிப்பரஞ்சுடர்முன்னர், மின்னிவர்கபிலைநெய்கொடுமூன்றுவிளக்கிடும்பலத்தினைவிளம்ப, முன்னிநான்முகவனாரணனமரர்முதல்வர்வாய்திறந்திடாரிமயக், கன்னியோர்பாகமன்னுபூங்கயிலைக்கடவுள்வாய்மலர்ந்திடல்வேண்டும். (௪௬)

மார்கழியடுத்தபூரணைத்திருவாதிரைதனில்வெள்ளிடிமலினெய், சார்வுறுகுளத்தோட்டவைசம்பாத்தண்டுலஞ்சருக்கரைநறுநெய், சீர்கொளச்சமைத்தவோதனஞ்சிவனுக்களித்தவர்தேவர்வாழ்வருட, மோரறுபதினாயிரஞ்சிவலோகத்துறைந்தினிதுறைகுவருண்மை. (௪௭)

ஒருமதிபக்கமொன்றுதான்றிவசமொன்றிரண்டொன்றுதானமலன், குருமணிக்கோயிற்றிருவலகிட்டுக்கோமயங்கொடுமெழுக்கிட்டோ, ராருளுடனொருவற்கொடுபுரிவித்தோரவிர்கிலாக்கதிருமிழ்கடவுட், பருதியங்கடவுளிவருளகாறும்பரசிவனுலகில்வீற்றிருப்பார். (௪௮)

நாடிநாடோறும்புரிதலின்றேனுநவிலுமேழ்தினத்தொரு ஞான்று, தேடிமுன்னிருவரலம்வரவுருவிச்செழுந்தழற்பிழம் பெனநின்றோ, னீடியசிகரத்தமணியக்கோயினியமமாச்சூழ்வல ன்வந்தோர், கோடியுற்பவத்திலிழைத்தவெம்பாவமக்கணந்த னிற்குலைந்தோடும். (௪௯)

சோதியாயொளிருமிலிங்கமோரைந்துதனித்தனிசூழ்வல ன்புரிந்து, பேதியாதெல்லாவிலிங்கமுமொன்றுயொருபிரதெக் கணம்புரியின், மேதினிவலன்சூழ்பலத்தினையடைவர்கடனி றுத்திடவிதியிலர்பா, லோதியபாவமின்னணம்புரியிறெழிந் திடுமுண்மையென்றுணர்வீர். (௫0)

துகிற்கொடிகுடைபொற்றூசுகோசிகம்வெண்டுகிறுவரா டைதூபஞ்சீர், மிகுத்ததீபம்பாத்திரங்குடங்கலசமெரிமணித் தளிகைகீள்விளக்கு, முகிழ்த்தகண்ணுடிகெண்டிகைசெம்புவட் டைகபடிக்கமொய்மலர்க, டொகுத்திடுதட்டுவிசிறிசாமரைவா கனஞ்சுவல்கொடிபடர்முரசு. (௫க)

மண்டபஞ்சிகரங்கோபுரம்புரிசைமணிமுடித்தேர்முதலா ய, வெண்கலஞ்சுற்பம்வெள்ளிபொன்னிவையின்மிளிர்வரவிய ற்றுவித்தளித்தோர், வண்கபிலையின்பாற்பசுவிடைவிடுத்தோர் வடிவுமைமகிணன்முன்றிலின்வாய்ப், பண்கனிந்தொழுகுமொ ழிநடநவிலும்பாவையர்தமைக்கொணர்ந்தளித்தோர். (௫௨)

நிறைசுடர்கவினிநறுமணியிமைத்தபூணணியாதிநீண்மௌ லி, யிறைதருவுருவமெழில்பெறச்சாத்தியேத்தினோர்பூத்திகழ் தோட்ட, நறைகமழ்நீலோற்பலமலர்கமலநறுமலரோடைபூஞ் சோலை, சிறைபுனற்பழனமுதலியபலவுமமலனுக்கெனத்திகழ் வித்தோர். (௫௩)

சங்குபங்கயநீணிதிபொழியளகைத்தலைமைபூண்டடைந்தரு ளழற், புங்கவனரசுதிருத்திநான்முகவன்புரமடைந்தவன்றெழி லாற்றிச், செங்கண்மால்பதத்திலிருந்துலகளித்துச்செழித்தபி ன்கொழித்தெறிகருணை, யங்கணனுலகையடைந்துசாமீபம்பரி த்துருவெடுத்தடிசேர்வார். (௫௪)

ஒருவன்யாதேனுமணுவளவாதிபுரந்திகழமலனுக்குதவி, னிருதயத்தேதுவிழைந்தனனதுவந்தெய்திநீடிருவொமேம்பொல்வன், மருவுருத்திரன்பேர்வயங்கபிடேகம்வடிவுடைவாமனுக்காட்டிற், கருணைசேர்நாட்டமூன்றுடையகத்கடவுடன்பதத்தில்வீற்றிருப்பார். (௫௫)

அருமறைமுனிவீரின்னமொன்றுரைக்கேமந்தணமதுமிளிரீயம், வருமதிதனிலாதிரைத்தினத்திரவுவள்ளலைமூலமந்திரங்கொண், டொருமையினபிடேகித்தலங்காரவுமைதனக்கீசனநறுநீர், பரிவுடனூட்டின்முத்தியீதுண்மையென்றனன்பராசரன்றனயன். (௫௬)

ஆதவனுதிக்குமேல்வையிற்போற்றினற்றைநாள்வரைதிணைத்தாற்றும், பாதகமொழியுநண்பகன்மலர்தூய்ப்பரவிவீழ்ந்திறைஞ்சிடினெடுத்த, வேதவெம்பிறந்தைசிதைந்திடுமாலைப்போதுதானெம்மையாளுடைய, நாதனைவணங்கினெழுபவந்தொலைந்துநாற்பொருணிலைநனிசேரும். (௫௭)

காலைவாயெழுந்துநறும்புனலாடிக்கவினுருநிறையநீறணிந்து, சோலைவாய்ச்சுரும்பராய்பிழிமாந்தச்சூழுமுன்றூய்மலர்கொய்து, சாலைவாய்மருவிமரபுடனுய்ந்துதண்ணறும்பிணையலாப்பிணித்து, மேலைவாயமரர்தொழுஞ்சினகரத்தின்மேவியாலயவலமிட்டே. (௫௮)

மெழுகிமுன்றனிப்பொற்றசும்பினீராட்டிமென்றுடைபுனைந்தமுதேற்றித், தொழுதுகூத்தாடியேத்தியிவ்வாறுசருதிநாயகன்றனையொருநாண், முழுவதுமின்றேற்காலமூன்றேனுமுற்றுகவின்றெனிலொருகால், வழுவறப்புரியினெறிபுரைமேனிவானவனுலகில்வாழ்குவரால். (௫௯)

சூதமாநதியில்வைகறையெய்திச்சுசிவரவைந்தெழுத்துன்னி, யோதநீரொலியிற்பல்லியந்துவைப்பித்தொருகுடமஞ்சனங்கொணர்வித், தாதரம்பெருகவாநிலைநாதற்காட்டுவித்தோர்புவியனைத்துஞ், சீதநீள்குடையினிழற்றிவானுலகிற்றிருவொடுமரசுவீற்றிருப்பார். (௬0)

ஒருமலரொருபத்திரமொருபலநீர்மூலமுள்ளுணர்ந்தரற் கீந்தோ, ரருளுடன்கோடி புண்ணியபலத்தையடைந்துடல் கோடியாகித்தர், பெருகொளிநிறைந்துகோடிசந்திரசீதளமுள விமானத்திற்பிறங்கி, யிருவர்காண்பரியவொருவனைக்கண்டாங் கேற்றசாரூபமெய்துவரால். (௬௧)

தூயவண்டுகிலால்வடித்துமென்புனலைச்சுடர்மணித்தசும் பினுட்பெய்தாங், காயசெண்பகமென்முகையிலவங்கமமுதுற ழ்கருப்புரமேல, மேயசெங்கழுநீர்கோட்டமோடமைத்தமிளிர் புனலொருபலமாட்டிற், பாயொளிமுத்தியடைவரென்பதலா லதன்பயன்யாவரேபகர்வார். (௬௨)

புண்ணியந்தழைத்தசித்திரைத்திங்கட்பொருந்தியபூருவ பக்க, நண்ணுபூரணையிற்சித்திரையடுத்தநாளினுன்முகவொரு மறையோன், பண்ணியதீர்த்தமாதலாம்பிரமாநதியினுருதன் முறைபடிந்து, வண்ணநீள்கடத்திற்றண்ணறும்புனலைவடித்தெ டுத்துக்கொணர்ந்தன்பால். (௬௩)

மடலவிழ்கொன்றைப்பசுபதிநாதன்மதிமுடிக்கயிலைநாயக ன்சீ,ரடல்விடைக்கோடீச்சுரன்றிகழ்சோழேச்சுரன்வஞ்சுளே சனுக்காட்டித், தொடையல்பன்மலர்களின்றெனிலொருபூவா யினும்வேணியிற்சூட்டிற், பெடையனநடைவெண்கமலமான்ம ருவும்பிரமனுதியர்தொழவுறைவார். (௬௪)

வெய்யசூர்ப்பகைவன்வேதியன்றீர்த்தமிளிருமாம்பிரநதி யாடி, யையனையெழுகாற்சூழ்வலம்புரிந்தனடிக்கடிவயப்பரியா கஞ், செய்தபுண்ணியங்கடினைப்புறக்கோடிமேற்செலுஞ்செ னனமும்பவத்திற், கைதவம்யாவுந்தொலைந்துமைபாகன்கமல மென்பதத்தினையடைவார். (௬௫)

அரநிசிதனிலாநிலையிறையாதிலிங்கங்களனைத்துடன்றெ ன்னூ, லுரைநவநீதகிரியினைமுக்கால்வலன்வரின்ஞென்றனிற்ப வமும், விரவுபாதகமுந்தீர்தருமொன்றின்முத்தியீடெய்துமற் றொன்றிற், பரவியபலன்யாதெனத்தெரியாதப்பரமனேபகுத் துரைசெய்யும். (௬௬)

குய்யமொன்றுரைக்கேமா திநாயகனுக்கொருபலங்குளிர் புனலாட்டி, வைகிரவரையாமத்தொருவில்வத்துளபமாலையி னிழைத்தணிந்தோர், தையலோர்பாகன்பதத்தினைச்சேர்வர்ச த்தியஞ்சத்தியமதனுக், கையுறவிலைமுக்காலுமீதுண்மையருட் குரவனுமருளினனால். ௬௭)

மயர்வறநோற்றோருளத்தில்வீற்றிருக்கும்வஞ்சிநாயகன்ற னைவாய்ப்ப, நியமமுற்றிறைஞ்சினோர்பெறும்பேற்றைநிகழ்த் தினநிறைதருகேள்வி, யுயர்தவத்துறையிற்படிந்தழலோம்புமு னிவிர்காளெனவுரைத்தனன், லயனனவியாதனிடத்தினிற்பு ராணமனைத்தையுமுணர்ந்தமாமுனிவன். (௬௮)

நியமச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் க௬-இ, திருவிருத்தம்-எ௯0.

---

# தலமகிமைச்சருக்கம்.

முக்கொடுங்குலிப்படையின்மேற்றுளபமுதிர்பசும்புயல் கிடந்ததுவுங்,கைக்கமலத்திற்கபாலமாய்வேதங்கழறுவாய்ச்சிர மிருந்ததுவுஞ், சக்குவாற்கண்டுந்தொக்கறிவிலர்போற்றமிழ்வ ளர்வஞ்சியெம்மடிகட்,கொக்கவோதுவரோதாதுணர்வோர்க்கா ளாகுவமுயர்கதியுறவே. (௧)

வேறு.

அறைந்தருதன்முகநோக்கியறவோர்மீளவருள்செய்வார்
நிறைந்தகேள்விமுனிவரனேநினைவினீங்கிவழிபடுவோர்
பிறந்தைதீரவருள்வழங்கும்பிறைதாள்செஞ்சடிலத்த [ல்.
னுறைந்தகருவூர்த்தலப்பெருமையுரைத்தியென்னவுரைப்பானு

முற்றநோற்றாரழலோம்பிமுழுதுமுணர்மாமறைமுனிவீர்
செற்றம்பாற்றுங்கருவூரின்பெருமைசெப்புகெனச்சிறந்து
சொற்றவாற்றுனுங்களைப்போல்யாரேசைவத்துறைபடிந்தார்
கற்றகுரவன்றருளியவாறுரைக்கேமென்றுகழறுவான். (௩)

கயிலைவரைமந்தரமதுரைகாசிகாஞ்சிபிரயாகை
நயிமிசாரணியஞ்சேதுநதிசூழ்வஞ்சுளாரணியஞ் [ன்
செயிர்தீர்தருமொன்பதுதலனுஞ்சென்றுகாணிற் சிவபெருமா
பயில்வார்முத்திவீட்டின்பநுகர்வார்நுகரார்பலபோகம். (௯)

பகர்ந்தபதியொன்பதனுள்வஞ்சிப்பதியிலணுகிப்பசுபதி
யை, யுகந்தொன்பதுநாளிறைஞ்சிடின்மற்றொழிந்தபதிகளெட்
டினும்போய், முகந்துகொளுமேலாயபலன்முழுதுமெய்துமிது
வுண்மை, யகந்தைபேசினுமல்லேமாசானறைந்தபடியாமால். ()

அலங்கல்புனையுமாநிலையெம்மடிகளுறையுமதனுனு
நிலங்களேழுமளந்ததிருநெடுமாலிருகண்மலர்துயின்று
துலங்கிநிறைதலானுமறைச்சுருதிகருதுங்கருவூரை
யிலங்கிவளர்பாற்கரபுரமென்றிசைப்பர் தொன்னூலியலோரே.

விண்மங்கலஞ்செய்பருப்பதமாரணியம்விரிநீர்நதிதீர்த்தம் [ன்
பண்மங்கலஞ்செய்மொழிமடவார் பயிலும்புரநான்முகவொருவ
கண்மங்கலஞ்செய்விமானமிவையாறுமேவிக்கவின்பெறலாற்
சண்மங்கலக்கேத்திரமெனவேசாற்றுங்கருப்பபுரிதனையே. ()

ஐங்குரோசமத்தலத்துமணல்களனைத்துஞ்சிவலிங்கந்
துங்கமிகுமான்குளப்படியினளவுநீருஞ்சுரநதிநீர்
தங்குமாக்களாயினபேர்தாமெல்லாருந்தவமுனிவர்
கொங்குசெறிபைந்தாருவெல்லாங்குளிர்கற்பகமாமரமென்பார்

எய்திவிளையாடுவதியாவும்யாகாதிகளையியற்றுதல்சீர்
செய்துநுகருவனபசுவற்கமுதுசிறப்பினளித்திடுதல்
வைகிநனிகண்படைகூரல்சமாதிநிலையின்வழிநிற்றல்
பைதலொழியப்புகல்வார்த்தைவேதாகமங்கள்பயின்றோதல். ()

சிறக்கவளரத்தலந்தனைக்கண்டிறைஞ்சினோர்தீவினைதீர்வர்
பிறக்குமவர்தாம்பிறவாதபெருமானுருவம்பெற்றிடுவ
ரிறக்குமவர்தாமிறவாதவிறைவன்பாதமெய்திடுவர்
சிறக்கநோற்றமுனிவீரந்நீர்மையாரேநிகழ்த்துவார். (௧௦)

முன்னைப்பவத்திலரியதவமுற்றிமுழுதுமொருங்குணர்ந்த, பின்னைச்சிவனையருச்சித்தபெற்றியோர் யாரெனிற்பிறைசேர், பொன்னொத்தொளிர்செஞ்சடைமௌலிப்புத்தேளுறையும் புகழ்க்கருவூர், தன்னிற்பிரியாததின்வைகிவாழும்பெரியதவத்தோரே. (கக)

அந்தத்தலத்திலடைந்துசிவாகமங்களறைந்தவழியலரால், வந்தித்தரனையேத்துநர்க்கேதேனும்வழங்கியங்கணன்பாற், சிந்தைக்கிசைந்தபணிவிடையிற் சிறந்தோர்பெறும் பேற்றினைமுனிவீ, ரெந்தப்படியென்றுரைப்பதுரகேசற்கேனுமுரைக்கரிதால். (கஉ)

திங்களொன்றோர்திதியொருநாளொருபோதேனுந்தீயவினை பொங்குமதிபாதகனேனும்பொருந்திவாளாவிருந்தாவி யங்கணிறப்பினமலவுருவமைவற்றரியசிவபுரியின் வெங்கணுழையதளுடையோனடியாரோடும்விரவுவனால். ()

வேளினுவிநகர்விழியோற்பணிதுமனுகியெனமிளிர்பைந் தோளினுரைப்புணர்துமெனத்தோலாவரசர்தோற்றுடைய வாளினுற்போர்புரிதுமெனவயிறுவளர்த்துமெனக்கணப்போ தாளுநாதன்கருவூரையடைந்தோர்கருவையடையாரே. (கச)

காரெள்ளரிசிகரங்கொடுதென்புலத்தோர்க்கேற்றகடனாற்றி யோரந்தணனுக்கடிசிலொருபொழுதப்பதியினூட்டுவித்தோ ராரவேறுபதிகளிற்போயருமாமறையந்தணர்கோடி பேர்கட்கடிசிலூட்டுவித்தபலனைமுழுதும்பெறுகுவரால். (கரு)

அடிசிலிடுதற்கிடமின்றேலையம்புகுந்துவந்துமொரு, பிடிசோறளிப்பிற்றென்புலத்தோர்பிறங்குவிமானந்தனிலேறிக், கடிமாமலர்ப்பூங்கற்பகஞ்சூழ்சுவர்க்கம் புகுவர் கடிதிலென்றே, யொடிவில்கேள்வி யெமதாசானுரைத்தா னெம்மாலுரைக்கெளிதோ. (கசு)

மாரிமறுத்தாருயிர்பயிரும்வாடிவருந்துங்காலத்தி
லீரைம்பானந்தணர்க்கொணர்ந்திரெட்டுத்தினமாம்பிரவதியி
னீரிறைடப்பணிப்பித்தாநிலைநாயகன்சந்நிதிதன்னிற்
பாரிலிரவியுதயமுதற்பதினைங்கடிகைவருங்காறும். (கஎ)

ஓதவரியசெபமனைத்துமோதியுஞற்றுவித்தப்பாற்
சீதநறியசருக்கரையிற்றிகழ்பாயசமுந்தெவிட்டவளித்
தாதிநாதற்கபிடேகம்பூசைபுரிவித்தந்தணருக்
கேதமறமாநிதிமாரியிறைக்கின்மாரியிறைத்திடுமால். (கஅ)

இவ்வாறவ்வூர்ப்பெருமையறிந்தியற்றுவித்தவிறல்வேந்த
னெவ்வாவரசர்திறையளப்பவொருகோலோச்சியுலகாண்டு
மைவாகனன்கற்பகநீழன்மருவியுளபோகந்துய்த்துப்
பைவாளுரககங்கணத்தெம்பகவனுலகம்புகுவானால். (க௯)

ஆசாரங்கள்வழுவாமையாற்றிரோகமணுகினும்பொய், பேசாதில்லாருடன்வைகும்பெற்றியோர்க்குப்பிறழ்தென்றல், வீசாநிற்கும் பொழிற்றுடைவைவிளையுள் கொடுத்தோர்வெங்களிற்றின், றாசானுறையுங்கைலாயச்சுரும்பிலணைவர்சுகோதயராய்.

கூறுமறையோர்வேதியன்பாற்குளிர்வெண்டிங்களரவுகங்கை
யாறுபுனையாநிலைநாதன்முன்போராளின்காதளவு
மாறிலாமேவிளைபுலனீர்வார்த்தோர்மருவார்நிணம்பூசும்
பாறுதொடுவேற்படைநிருபராகியுலகம்பரிப்பாரால். (உக)

உள்ளமுகந்துபுனிற்றிளங்கன்றுடன்பாற்சுரபியுதவினோர்,வெள்ளைவிடையோற்கெனமூரிவிடையொன்றினைமுத்திரைபொறித்தோர், வள்ளமுலைக்கன்னிகையையலங்கரித்துமறைவல்லோர்க்களித்தோர், பிள்ளையிளவெண்பிறைமௌலிமுத்திவீட்டடைப்பெறுகுவரால். (உஉ)

விடிமீனெழுதல்போலொளிரும்வெள்ளியிரவிவைகறையிற்
படிமீதெழுதல்போலொளிரும்பசும்பொன்முதலலோகங்கள்
கொடிமாமதில்சூழ்கருவூரிற்கொடுத்துத்தானநணிகொடுத்தோ
கடிமாமலரோனுறையுலகிற்கற்பகாலம்வீற்றிருப்பார்.

வேறு.

சிவத்திருப்பணிசெய்வோர்பாற்சிவபரம்பரனைநெஞ்சிற்
றவங்லைப்புறநினைந்துதமனியங்கொடுத்துளோர்தாம்
பவமெழுபவ்வமேபெடமடலவிழ்பூங்கூந்தற்
குவவிளமுலைபங்கனைன்முத்தியிற்கூடுவாரால். (உச)

சிலைகளிஞதல்செங்கற்றிரளிஞகுதல்சிறந்த
நிலைசெய்தாபரத்திஞதனிமலனன்புடையோர்வைக
மலைவறமடங்கள்கோலிவழங்கிஞேர்சிவலோகத்தி
லிலகியகற்பநூறுயிரங்கோடியிருந்துவாழ்வர். (உரு)

மலரவனறியாவேணிவானவனன்பர்பாலோர்
திலமளவுதவின்மேருச்சிவனுறநல்குமேலாம்
பலனுறும்பிறவியெல்லாம்பற்றறுமுத்திசேரு
நலனுறுமெனிலவ்வூரின்பெருமையார்நவிலற்பாலார். (உசு)

கச்சிளமுலையாராடல்கவினியகருவூர்தன்னி
லெச்சினைப்புடன்வந்துற்றோர்யாவரேயெனினுமன்போ
டெச்சியினாட்டுவித்தோருடெதியிரவியங்கி
முச்சுடர்விழியிஞன்றன்முத்திவீடடைவர்திண்ணம். (உஎ)

யாதொருதவத்தின்மிக்கோர்க்கெய்தியபிணிகடீர்த்தோ
ரோதருநூறுகோடியுகமுருத்திரலோகத்தின்
மாதவர்போற்றருத்ரவடிவமேயெடுத்துமன்னி
மேதகவாழ்வரென்றல்யாவரேவிளம்பற்பாலார். (உஅ)

வேறு.

தண்ணீர்ப்பந்தனந்தவனந்தடநீர்ப்பொதும்பர்பூவோடை, யுண்ணீர்க்கூவல்பொதியின்மடமொடுக்கம் வேள்விபுரியுறையுட், டெண்ணீர்ப் பழனமாதியிவைசெய்தோர் செய்வித்தோரிவர்தாம், விண்ணீர்மதியம்புனைவேணிவிமலனுருவமேவுவரால். (உகூ)

ஒருநாளுறையுமுறையுளொன்றுகொடுத்தோனடையும் பொன்னுலக, மொருமாகரகநீரளித்தோனுளத்துணிநைந்தபொருளுறுவ, ஞெருதீபங்கேட்குநர்க்குதவிஞென்மெஞ்ஞானவொளிபெறுவ, ஞெருகோவணத்துக்குகமயுதகோடிருத்ரபதத்துறைவன். (௩௰)

உழுவையதட்கம்பளமளித்தோனுறையுரோமமனைத்தினுக்கும்
வழுவிலாமேதனித்தனிபொன்வழங்கும்பலத்தைமருவிமென்
பழுதிலொருபாத்திரமளித்தோன்பன்னூண்மற்றைப்பலபதிக
முழுவியன்னசத்திரஞ்செய்பலத்தைமுழுதுஞ்சார்குவனால். ()

யோகபட்டமுபவீதமுதவினோனையிரமிரட்டி
வாகுதிகழ்தூசளித்தபலன்மருவுமவண்பாதுகையீந்தோன்
வேகமுறுமாயிரம்புரவிவிலைழவினல்கும்பலனடைவ
னேகமுறுகண்டிகையொன்றையளித்தோனமலனுருவடைவன்

தெளிநீர்பெய்யுங்கமண்டலங்கள்சிவனன்பினர்கடமக்களிப்பி
னொளிநீர்க்கூவனறியமலரோடைகாணும்பலனுளவாங்
குளிர்நீழலினேரொடுக்கமுளங்குழைந்தோர்துறவிக்கெனநல்கி
னளிசூழ்கொன்றையமலனுக்காலயங்களாற்றும்பலனடைவன்

ஏட்டியொருபுத்தகமளித்தோன்சிவலோகத்திற்சதகோடி
காட்டும்யுகங்கள்வீற்றிருப்பன்காமாதிகளைமுருக்கியருள்
பூட்டுமுளத்தன்பினர்க்கமுதோர்போதினளித்தோன்புரிசடை..
காட்டிநளிநீரமுதுகிவேதித்தபலத்தையடைகுவனால். [யோற்

வேறு.

திரண்மறைமுனிவர்போற்றுந்தெக்கணமூர்த்திமுன்னர்ப்
பிரணவமுதலவைத்துப்பிறங்குமைக்தெழுச்சைதையோர்கா
லரணெழச்செபித்தோர்காசியணிநகரணைந்துகோடி
நரமுறைசெபித்தவந்தப்பலத்தினைச்சார்வர்திண்ணம். (கூரு)

அத்திருநகரின்ஞானவருட்குருபரனைநண்ணிப்
பத்திசெய்தொருநான்காயதீக்கையும்பரிவுகூரச்
சுத்தியிற்செய்துகொண்டோன்சுகோதயனுகிநித்த
முத்தியையடைவனுண்மைமொழிந்தனமுதியநூலால். (கூசு)

வெண்பொடிமேனிஞானியொருவன்வெள்விடையோனெற்றிக்
கண்படுமணிகளாலைந்தெழுத்தையுங்கருத்திலுன்னிப் [க்
பண்புறச்செபித்தவந்தப்பலத்திலோர்மணிப்பலத்தை
யெண்படுகண்ணினர்க்குமிசைக்கரிதிசைப்பார்யாரே. (கூஎ)

சுடரொளிகளினும்பொன்னுற்சுதைநிலவுமிழுந்தூய்மை
படைத்தொளிரிரசிதத்தாற்படரொளியிலிங்கஞ்செய்து
மடற்கொழுமலராற்பூசையாற்றினோர்மலிநீர்வைப்பில்
விடற்கருந்திருவினெய்திவிமலனதடியிற்சேர்வார். (கூஅ)

வேறு.

கோடிகோடிமாகிதியங்கொளும்பொற்குடங்கடமிற்பெய்து
நாடிவேறுதலன்களிற்போய்நல்கும்பெரியபலன்மன்றி
லாடிஞென்றன்கருலூரையனுகியனுமாத்திரமளிப்பி
னீடிவளரப்பலன்யாவுநிரப்புமெனில்யார்நிகழ்த்துவார். (கூகூ)

நன்னருடனீர்படிந்தாதிநாதற்போற்றியனுலைஞ்பெற்றுச்
சென்னிசெறிநீண்மயிர்களைந்துமீளச்செழுநீர்குண்டந்துநிலந்
துன்னிநிறைதர்ப்பணமளிக்கிற்சுடரோரிருவருளைகாறு
மன்னியுறைவர்பிதுருலகின்வளமாய்மரபின்மாய்ந்தோரே. ()

வேறு.

அலைவறுசிராத்தமொன்றவ்வாதிமாபுரியிஞற்றி
னிலைபெறுசிராத்தநூறுகயைதனிலளித்தனேரு
மலைவறுதந்தையன்னைமனைவிதம்வழிநூற்றெட்டுத்
தலைமுறைசிவலோகத்திற்சார்குவர்தவத்திலேமிக்கீர். (சக)

குறுநிலவேந்தர்வெய்யகோன்முறைகாட்டிவாட்டித்
தெறுகலியுலகில்யாவுந்திளைத்திடவருமோர்கால
மறுபதமுரல்பூங்கொன்றையணியுமாநிலநாதன்றன்
சிறுமதிமுடியினீர்வாய்ச்சிதலைகளருமன்றே. (சஉ)

நண்ணியஞானத்தாதலன்றியஞ்ஞானத்தாதல்
பண்ணியபாவம்யாவும்பாட்டளிமுரலுங்கொன்றைக்
கண்ணியனுறைகருப்பபுரியினைக்காணவுள்ளத்
தெண்ணியங்கெழுந்தவட்டையேகுழித்தீருமன்றே. (சங)

இங்கியான்பலகாற்பன்னிநுமக்கினியிசைக்குமாறென்
னங்கணனருளின்மூழ்கியரியமாதவங்களாற்றும்
பொங்குமாமறைவியாதன்புகரறப்புகன்றன்ஞானந்
தங்குமாமுனிவீர்சாலமந்தனஞ்சாற்றக்கேண்மின். (சச)

அந்தளிர்மேனிபாகனுநிலோதற்கன்பாற்
கொந்தவிழ்நரந்தங்கோரோசனை நறுங்குங்குமப்பூ
வந்ததண்பனிநீராட்டிப்பாளிதமருவச்சேர்த்திச்
சந்தனக்குழம்புசாத்துங்காலையிற்போற்றுந்தக்கோர். (சரு)

வாரியலினைமென்கொங்கைவடிவுடைமங்கைபாகன்
போரியநிருதற்காய்ந்தபுள்ளுயர்த்துந்திபூத்த
மூரிவெள்விடையூர்ந்தாழிமுழக்கெனமுரசமார்ப்ப
வேரியந்தெருவம்போதும்விழவுகண்டிறைஞ்சுமிக்கோர்.(சசு)

மங்குல்கண்படுக்குமிஞ்சிவளர்கருவூரின்மேலாம்
பங்குனியுத்திரத்திற்பசுபதிநாதன்றன்னைத்
திங்களின்மறுவைவானந்திகழ்துகிற்கொடியான்மாற்றும்
பொங்கொளிமணிப்பொற்றேரிற்புகரறப்போற்றினோர்தாம்.()

எத்துணைப்புரவிமேதயாகமுள்ளனவியற்றி
யெத்துணைமாதவங்களாற்றினுமிரிதல்செய்யா
வெத்துணைப்பிறவிபாரிலெடுப்பனவெடுக்குந்தோறு
மெத்துணைவெய்யபாவமிழைப்பனவிழைத்தவெல்லாம். (சஅ)

ஒன்றுமின்றெனவொழிந்துஞானம்வந்துதிப்பத்தோன்றி
வென்றிவேலரசராகிமேதினிபுரந்தபின்னர்
மின்றவழ்வேணியண்ணல்விரைமலர்ப்பாதஞ்சேர்வ
ரின்றிதுசத்தியஞ்சத்தியநுமக்கியம்பினேமால். (சகூ)

வேறு.

மூவாதெதிர்மாதவத்திரொருகுய்யமின்னுமொழிதுமிகு
மாவலுடனுட்கொளுமையமிலையாமறைந்தவாய்மையன்று
தேவர்பெருமான்சிவாலயங்கடெரியவெனக்குச்செப்பியநாட்
பாவமில்லைகருவூருக்கென்றான்பராசரன்றனயன். (ருo)

வேறு.

மற்றொருகவற்சியின்றிவள்ளலாநிலோதன்சீர்
சொற்றநூற்கேட்கப்பெற்றீர்துகளறயாமுஞ்சொல்லப்
பெற்றனமாதலாலெப்பிறப்பினும்பெரியோர்ச்சேர
முற்றநோன்பாற்றல்வேண்டுமுத்தியைமுன்னினோரே. (ருக)

இச்சரித்திரத்தைமுற்றும்யாவரேகேட்போர்கேட்கு
மச்சபையுறவோர்முன்னராற்றியவெய்யபாவ
மொய்ச்சுடர்படரிற்பாற்தண்முடிமிசைக்கிடந்தபாரின்
மைச்செறியிருளார்கானின்மருவுமிந்தனம்போன்மாயும். ()

புனிற்றிளந்திங்கள்வேணிப்புங்கவன்புராணந்தன்னி [த்
னுனித்தொருபொருளையாய்ந்தோனென்மையாவானுளெய்தி
தனித்தனிவிழைந்தபோகந்தரைமிசையிசைந்துசெந்தேன்
கனித்துவழ் மொழிவாய்பாகன்கைலைமால்வரையைச்சார்வன்.

ஆதிலைநாதன்முன்னராம்பிரவதிதிரத்தின்
வானிவர்வெண்ணெய்வெற்பின்வளர்கருவூரினுதல்
பானிலவியலிந்நூலைப்படித்துளோர்கேட்டுளோர்தாந்
தேனிதழியினன்வாழுஞ்சிவபுரஞ்சேர்வர்திண்ணம். (௫௪)

திங்களொன்றிதனையெந்தைசினகரத்திருந்துசாற்றி
லங்கிதுகேட்பிற்செய்யாளனுகுமாதவப்பேறெய்தும்
பொங்குவெண்குட்டங்குன்மம்புகர்படுபிணிகள்யாவுந்
தங்குருவுளத்திலுற்றபாவமுந்தணிக்குமன்றே. (௫௫)

மின்புரைவேணிவெள்ளைவிடையவன்பூசையாற்றித்
தன்பரிவுடன்றாய்தந்தைக்கிடுசிராத்தங்கடம்மி
லன்புமீதுரவிந்நூல்படித்திடினளவிலாத
தென்புலத்தவர்தாமுத்திவீட்டினைச்சேர்வர்திண்ணம். (௫௬)

கடிப்பதுமங்களாவிகமழ்கருவூர்ப்புராணம்
படிப்பவர்கேட்போர்கேட்டபடியுளஞ்சிந்திப்போர்பா
லடிப்பதுமங்கள்சேப்பவாடகச்சபைக்குணின்று
நடிப்பவன்கருணைசெய்யுமெனிலெவர்நவிலற்பாலார். (௫எ)

தொல்புராணங்கடம்மைப்படிறெனச்சொற்றபுல்லன்
மல்வளன்றொலைந்துநோயின்வருந்திவாய்கிருமிகொட்டக்
கொல்சினக்கூற்றுவன்முக்குடுமிவெஞ்சூலங்கொண்டு
பல்வகைத்தண்டஞ்செய்யப்படுவனீணிரயமூழ்கி. (௫அ)

புனைந்துரைத்தில்லதொன்றைப்புராணமென்றவைமதிச்ச
வனைந்துரைசெய்தோன்வெய்யமறலிவெந்நிரயம்வாட்ட
வினைந்திமொதலாலேயுள்ளதையியல்பிற்றென்று
நினைந்துளோரன்றியாரேநீணெறிநிலையினின்றார். (௫௯)

யாதொருசிவபுராணம்படிப்பவனெமதாசானென்
றாதனமுதவித்தூயராயகமயலுறுமே
மாதொருபாகன்றன்னையுன்னிவாழ்ந்துருகிக்கேட்போர்
தீதறுகுணத்தராகிச்சிவபதஞ்சேர்வர்திண்ணம். (௬0)

இப்புராணதனைமுற்றும்யாரெடுத்திசைக்கற்பாலார்
மெய்ப்பொருளுணர்வியாதன்விளம்பினன்குய்யமென்னு
முப்பொருளுணருஞானமுனிவிர்நீரதனுன்முன்னி
யப்பெருமையினையாமுமறிந்தவாறுரைசெய்தேமால். (௬க)

யோகுறுமுனிவீர்நீவிரொலிகடலமுதிற்றோய்ந்த
பாகுறுமொழியோர்பாகற்பரவுதிர்கருவூர்தன்னி
லேகுதிர்யாமுந்தீர்த்தயாத்திரைகளினியன்று
போகுதுமெனக்கைகூப்பிப்போற்றினன்போற்றலோடும். ()

சூதமாமுனிவன்றன்னைமுனிவருந்தொழுதியார்க்கும்
போதகனன்றேயென்னப்புகன்றனர்விடைகொண்டாதி
நாதனைப்பரவிநாளுநைமிசாரணியத்துற்று
மாதவமிழைத்துஞானவாரிதிபடிந்துவாழ்ந்தார். (௬௩)

தலமகிமைச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆக சருக்கம் கஎ - இ, திருவிருத்தம்-எகூ௩.

---

# கருவூர்த்தலச்சிறப்புச்சருக்கம்.

கஞ்சனென்னுதிபுரங்கரபுரம்பாற்கரப்புரம்வீரசோழபுரம், வஞ்சுளாரணியம்வஞ்சிதாயூர்சண்மங்கலக்கேத்திரங்கருவூர், விஞ்சுறுகருப்பபுரிமுதனமம் விளங்குதொல்பதியில்வீற்றிருக்குஞ், செஞ்சுடர்ப் பொருளினிருபதமேலைத்தேவர் பொன்முடிக்கணிகலனே. (௧)

வேறு.

பூவிருந்தகிலங்கள்யாவையும்பூத்தநான்முகவேதனும்
மாவிருந்தபொன்மார்பனும்புசழ்வாழ்ந்திருந்தபதாம்புயன்
பாவிருந்தசொன்மூவர்போற்றும்பசுபதிப்பெருமானெனுந்
தேவிருந்தருடங்கிவாழ்கருவூர்ச்சிறப்புரைசெய்குவாம். (௨)

ஆதமாகதிசூழ்கிடந்தசுரும்பிரங்கியபொங்கருஞ்
சீதவார்பொழில்சூழ்கிடந்துதிகழ்ந்ததண்பழனங்களுந்
தாதலம்பிசைசூழ்கிடந்துதரங்கம்வீசுதடங்களும்
போதினோடைகள்சூழ்கிடந்தபொனிஞ்சியும்பலவிஞ்சுமால்.()

சேய்த்துயர்ந்தபொதும்பரிற்சிலமந்திநின்றுசெவ்வாழையின்
மீத்திரும்பிவிழுந்துமென்கனிவாரிக்கொண்டுவிரைவன
வாய்த்திரும்பொருள்வைத்திருந்துவழங்குநெஞ்சிலராய்முகஞ்
சாய்த்திருந்தவரைத்தடிந்துதனங்கவர்ந்தவர்போலுமால். (௪)

போதுறும்பசுந்தண்டலைச்செழும்பொங்கரின்னுயர்கொம்பரி
கோதறுங்கனிவேட்டுவாவற்குழாங்களொன்றுகிடப்பன [ன்
வோதருங்கழைக்கூத்தருண்பொருட்டாகவோங்குநெடுங்கழை
மீதுதந்தலைகீழுறக்கிடந்தாடல்போலவியப்புறும். (௫)

சேயதீம்பழுக்காயயின்றுசெறிந்தபூகநனைத்தலை
யேயமர்ந்திருப்பவண்டினமாடியேழிசைபாடுதல்
காயெரிச்சிகைசுற்றநீள்புகைக்காமர்வேதிகையின்மிசைத்
தூயமாதவனொருவன்வைகுபசுருதிபாடுதல்பொருவுமால். (௬)

மாங்கனிக்கொழுந்தேறலுந்தண்வருக்கைமென்கனித்தேறலுந்
தூங்குசெங்கனித்தாற்றினங்கள்சுமந்துவாங்குபைம்பூகதத்
தோங்குசீளிலைவீழ்ந்துமற்றதனடியினேருறவொழுகுதல்
வாங்குதிண்டிறற்சாபக்கோட்டினிற்பூட்டுநாரியைமானுமால்.

பாசிலைக்கருங்கோடுதாங்குபராரைநீள்சுரபுன்னையின், வாசம்வீசியகேசரந்திகழ்வள்ளிதழ்ப்பொதிவெண்முகை, யாசைவைத்துமுடிந்தவெண்கிழியொக்குமம்முகைவாய்விடல், மூசுவண்டிசையோர்க்கரும்பொருண்முற்றுநல்குதலொக்குமால். (அ)

பேதைமார்சிலபேசலுஞ்சிலபேட்டிளங்கிளிபேசுவ
கோதைமார்சிலகூவலுஞ்சிலகோகிலம்புடைகூவுவ
மாதரார்சிலராடலுஞ்சிலமஞ்ஞையின்கணமாடுவ
வாதலாலுயரிழிபகன்றிருதிணையுமொன்றெனவிணையுமால். ()

வேறு.

சோலையினறுஞ்செந்தாதுதுதைந்துமென்சுரும்பரந்தி
மாலையின்வரலும்பேட்டுவண்டுகண்டெமக்குமாறாய்ச்
சாலவேறயலிற்சேர்ந்துசார்ந்ததென்றூடியோடி
யேலமென்கமலவீட்டினிதழ்க்கதவடைக்குமன்றே. (க0)

மாவிரவகன்காவைகிவைகறையெழுந்துசென்னற்
பூவிதழ்க்கதவுதாழ்க்கொண்டுறைபெடையூடல்போக்க
வோவறவாயில்போகியுடன்படவோதியொன்றாய்
மேவிநன்னறவமாந்திவிரவுவவாவிதோறும். (கக)

முள்ளரைப்பசுந்தாட்செய்யமுகமலர்கமலமோர்பால்
வள்ளவாயொத்தவெண்டோடலர்வனவனசமோர்பால்
வெள்ளிடையின்றியாவிமிளிர்வனவிரைசெய்கோலப்
பள்ளியொன்றினின்மால்வேதன்றுணைவியர்பயிறல்போலும்.

கூனல்வெண்முதுகின்முள்வாய்க்குடவளைத்தடத்தினூடு
கானவர்குழலாராடும்போதுபங்கயவரும்பும்
பானன்மெல்லரும்புமேனியுரிஞ்சுதல்பருவம்பார்த்து
வேனில்வேடனுவிற்கோலும்விசிகங்களவைபோலும். (கரு)

இருநிதிமுளரிகாவிலிடையறமலர்ந்துதிரத்
தொருதலையுயர்பூஞ்சோலையிருமருங்குமிழ்தேன்பாய
மருவியவாவிசெங்கண்மாயவன்மருமந்தாழ்ந்த
பருவடம்பிணித்தசெம்பொற்பன்மணியாரம்போலும். (கச)

தோலடிச்செங்காற்செய்யசூட்டுவெள்ளெகினப்பேடை
சேலுகள்கழனியின்கட்சேவலூடிச்செந்தேன்
காலும்வாரிசத்திற்பாகந்தெரிதரக்கரத்தல்செக்கர்
மேலைவாய்விசும்பிற்றோன்றும்வெண்மதிக்குழவிபோலும். ()

அரும்பவிழ்குவளைமேதிகுதட்டிமேய்ந்தார்த்தெழுந்த
சுரும்பிசைசெறித்துநீண்டதுணைச்செவியாரமாந்தி
விரும்பலுஞ்சுரந்துதீம்பாலுமிழும்வெள்ளருவிவெள்ளங்
கரும்புசூழ்பழனமெங்குங்கடலின்வெண்டிரைகள்வீசும். ()

மாலைதாழ்சென்னிமள்ளர்மயிடவன்பாலுங்கன்ன
லாலைதாழ்பாலுந்தேங்கலணைகோலிமருதவேலிச்
சோலைதாழ்பதியில்வைகுஞ்சுடர்மணிக்குலிசன்பாதங்
காலைதாழ்ந்தெழுந்துமேழித்திருவொடுங்கழனிசார்வார். (கஎ)

வேன்முறைகாட்டும்வேந்தர்விதிமுறைகாட்டுஞ்செய்ய
கோன்முறைகாட்டுமாறுகொழுமுறைகாட்டுநாஞ்சிற்
கான்முறைகாட்டிநீடுங்கரைமுறைகாட்டுஞ்செய்யிற்
சான்முறைகாட்டிமள்ளர்தம்முறைகாட்டுவாரால். (கஅ)

செழுமலர்க்குலையின்பாங்கர்ச்செறியடைபொதியுங்கன்னன்
முழுமணிநிலவுகாலுங்கழனியின்முயன்றேர்சேர்த்திக்
கொழுநுதிநிலனிற்றாழக்குடவளைமுதுகுசாய
வுழுநர்தம்பதங்கள்சாலினூறுநெய்தல்கமலநாறும். (கக)

அரம்பையின்முகத்துங்கன்னலகன்பணைக்கண்ணுங்கோத்து
நிரம்பியகமுகின்பாளைநெற்றியின்பட்டஞ்சேர்செய்
பரம்பினுநுகங்கள்பூட்டும்பகட்டினும்படைவாண்மீதும்
வரம்பினுங்களமர்தோளுமார்பினும்பாய்வவாளை. (உ0)

கழைக்கரும்பொடித்துமள்ளர்கருநிறக்கவரிமெய்யி
னுழைப்புடைத்தலுந்தெறித்தவொண்மணிவெரிக்கோடாறுந்
தழைப்புறக்கிடத்தல்விண்ணார்தடமுகடுறைகமஞ்சூன்
மழைக்கணம்பூத்ததாராகணங்கடாம்வயங்கல்போலும். (உக)

வரிவளைத்தரளமிப்பிவாய்வெடித்துமிழுமார
மெரிநிறக்கமலமீன்றநித்திலமிக்குழுத்தஞ்
சொரிதருசாலிமுத்தந்தோகையர்நகுவெண்முத்தம்
விரிநிலாக்கதிர்பரப்புமென்பழனங்களெங்கும். (உஉ)

வெள்வளைமுழக்கங்கால்வாய்விரிபுனலிரட்டுநாஞ்சி
லுள்வளைந்துழுநரோச்சுமேரொலியுண்டாட்டாகக்
கள்வளத்துண்டுதேக்குங்கடைசியர்குரவையார்ப்புப்
புள்வளையோதைவிம்மிப்புணரிவாய்பொத்துமன்றே. (உங)

அந்தளிரீன்றமேனியாற்றுக்காலாட்டியார்தாஞ்
செந்துவர்வெளுப்பநீலஞ்சேப்பவள்ளத்துவாங்கி
மந்திரநுகர்ந்துநாற்றுமுடியினைவகுத்துநாட்செய்
திந்திரத்தெய்வமேத்திக்குரவைக்கூத்திசைப்பரெங்கும். (உச)

மருங்குறமுலைகள்விம்மநடுந்தொழின்மடவார்வாசக்
கருங்குழல்கவியமீதுகவின்முகங்கவினநிற்ற
னெருங்கியகமஞ்சூன்மேகநிழலின்கீழ்நிலவுக்கற்றை
யொருங்கெழமலர்ந்துதோன்றுமொண்மதியுறழுமாதோ. ()

உருமயிலனையசாயலுழத்தியர்நடுமவ்வெல்லைத்
திருமுகமலரின்மேற்செஞ்சேலினந்துள்ளிவீழ்த
லிருமதர்விழிகடங்களினமெனலனுகியன்மை
வெருவுறநோக்கிநாணிமீளுதல்போலுமாதோ. (உசு)

புயல்கிடந்தனையபைங்கூந்தற்புணர்முலைக்கடைசிமார்க
ணயனமள்ளவந்தோயத்துட்டெரிதராறுசெய்யும்
வயலிடைக்கணமர்மட்டுவெறிமனக்களிப்பிற்சென்று
கயலெனப்பிடிப்பார்கையிலுறுமையிற்கவன்றுநிற்பார் (உஎ)

விரும்பியவிளையர்காமவிடாய்கெடப்பருகல்வேண்டி
யிரும்பழனங்கடோறுநாறுசெய்யிலவச்செவ்வாய்க்
கரும்பைவெல்லினியசொல்லார்கருங்குழற்காவுட்பச்சைக்
குரும்பையென்றணுகிக்கொங்கைக்குவடுகண்டயர்ந்துநிற்பார்.

பிறந்தலையாமைமெய்ம்மையாளுமெம்பெருமான்வைகுஞ்
சிறந்தலைநீர்சூழ்வஞ்சிசெழிப்புறத்தெவ்வைவென்ற
பறந்தலைநிருபர்செங்கோலோச்சவேழ்பாருமெண்ணான்
கறந்தலையெய்தப்பைங்கூழெடுப்பனதலைகளம்மா. (உகூ)

முதிறுமுக்குறும்புமோட்டிமுயறவத்தினருளத்திற்
கதியருடங்கித்தேசுகாட்டல்போற்கழைகள்கட்டு
நதிவளஞ்சுரப்பமெல்லென்மெல்லெனநாளினுளிற்
பொதிகருவிருந்தீன்றன்னோர்போலடிநோக்காநிற்கும். (௩0)

ஞானவாளீரவுள்ளநாளெனுஞ்செயல்போய்முன்னை
யூனவேரற்றுமற்றோர்பெயர்மரீஇயுறங்குவார்போல்
வானநீள்குலைசாய்செந்நெற்கதிரெலாமள்ளர்கையிற்
கூனல்வாடுமிப்பமாயோன்பெயர்நிறீஇக்கொடுகிடக்கும். (௩க)

கம்பளரரியின்குப்பைமுறைமுறைகவர்ந்துகொண்மூ
வம்பரமுகடுகாணுமளவிடுபெரும்போர்யாவுஞ்
சம்புவினருளாற்றேனுசராசரம்வகுத்தஞான்று
வம்பவிழ்சோலையவ்வூருதித்தமால்வரைகள்போலும். (௩உ)

வைகளைவினைஞர்கூலிவண்டரளத்திற்போக்கிச்
செய்யசெஞ்சாலிகோலிப்பண்டியிற்சேர்த்துச்செல்வா
ரைவகைப்பங்கினெண்ணான்கறம்பலவழாதுசெய்வார்
துய்யவாம்புகழ்மாயாதசுடர்நிலாவுதிப்பவாழ்வார். (௩௩)

வேறு.

மஞ்சுவான்மிசை
பிஞ்சியின்முடி
விஞ்சுமென்கொடிப்
புஞ்சம்பூப்பன. (௩௪)

அதிரறப்புயன்
முதுகுமுட்டிய
மதிமறைப்பன
கதலிகைக்கொடி. (௩௫)

மாடமர்டெலா
மாடரம்பையர்
மேடைமீதுகா
ரோடுமோடுமே (௩௬)

வீணைவிஞ்சையர்
யாணர்யாழிசைப்
பாணர்பைந்தமிழ்
வாணர்மாடெலாம். (௩௭)

மந்தமாருத
முந்துமுன்றில்வாய்ப்
பந்துபாவைமா
ரந்திலாடுவார். (௩௮)

வேறு.

நீலமால்வரைநெற்றியிற்
சாலமாமுகிற்கம்பலை
போலநீள்கரிப்புஞ்சமே
கூலவீதியிற்குளிறுவ. (௩௯)

ஏரிணங்குமில்வாயினுந்
தேரிணங்கியூர்தெருவமும்
பூரணம்பொலிபொற்குடந்
தோரணம்பலசூழுமால். (௪௦)

ஒன்றுகண்களினூற்றுவார்
துன்றுமும்முரசத்தொகை
மன்றலார்பொலன்மாளிகை
முன்றிறோறுமுழங்குவ. (௪௧)

தண்ணமாமதிச்சாளரத்
துண்ணுழைந்தவொண்மாமதி
பெண்ணினார்முகப்பெற்றிகண்
டெண்ணியுள்ளுடைந்தேகுமால். (௪௨)

வேறு.

மதிதவழ்வேணிபன்பதந்தில்வந்தனை
விதிமுறையாற்றுநர்வேதவோதையுங்
கதிர்மணியசைத்திடுங்கலிப்புங்கார்முகி
லதிர்தருங்கடலுடனார்த்தல்போலுமால். (௪௩)

நீறுமொய்த்தொளிவளர்நிமலன்வைகிய
கூறுதற்கரியபொற்கோயிற்கோபுரம்
பேறுபெற்றவர்பரகதியிற்பெட்புட
னேறுதற்கியற்றுகண்ணேணிபோலுமால். (௪௪)

கொண்டல்வான்றோரணங்குழைந்தசைந்திட
டொண்டரெம்பசுபதிச்சுடரைப்போற்றிநீண்
மண்டணிவெண்ணிலாக்கதியின்மன்னின
ரண்டரும்வருதிரென்றழைத்தல்போலுமால். (௪௫)

வளமலிஞெள்ளலின் மணிப்பொற்றேர்பல
கிளர்வனவடிவுடைக்கிள்ளைபங்கனை
யுளமகிழ்வுடன்ெறழுப்போந்துலாவரு
மளவறுநெடுமுடியசலம்போலுமால். (சசு)

வேறு.

பூவாலருநான்மறைப்பூசுரர்போற்றியேத்தல்
பாவாகமமாமுனிவோர்கள்பயின்றுதேர்தன்
மூவாறுபுராணவிரித்தொகைமுற்றுமூவர்
தேவாரமுநீடுதபோதனர்செப்பல்சாலும். (சஎ)

யோகாதிகள்வெவ்வழலோம்பவுயிர்த்ததூம
மேகாடவியூடுநுழைந்துநுழைந்துமேலை
யாகாயமணந்துபொன்னண்டமுமண்டியப்பா
லேகாவுயருந்தவயோகரிருக்கைசாரும். (சஅ)

பாவங்களைவென்றவர்மற்றொருபற்றுமின்றி
மூவந்தனையாவகையோகின்முயன்றுளோரு
மேவந்தபொன்மாடமுகப்பிடைத்தீட்டிவேய்ந்த
வோவங்களும்வேறறவைகுமிருக்கையோங்கும். (சகூ)

கடவாரணமன்னர்செங்கோன்முறைகாட்டிநாளுந்
திடவாரணமுய்வரத்திங்கண்மும்மாரிபெய்யப்
படவாளரவல்குன்மடந்தையர்பாணலுண்கண்
கடமீனனகற்புமலிந்தவில்வாழ்க்கைமன்னும். (ருo)

வேறு.

ஆணிமுத்தனவிளநகைநகுமணியவிரிளமுலைமாதர், பாணிவீணைமென்னரம்புளரிசைகளும் பசுந்தமிழ்க்கடைப்பண்டைக், காணிவிஞ்சையரின்சொலின்பனுவலுங்கலந்திரைப்பனமிக்கால், வாணிபல்கலைபயிற்றியதொல்வளன்மலிசினகரமானும். (ருக)

காலைவாய்க்கதிரவன்கடனாற்றியெங்கடவுளாணிலைநாதன் பாலைவாய்த்தசொல்லுமைபதந்தொழுதறம்பரிந்துபிற்பகலெல்லா, நூலைவாய்த்துணர்நுண்ணியோருடன்சிலநூற்கடறினைத்தாடி, மாலைவாய்மனைக்கிழத்தியருடன்றிருவாழ்க்கையின்மகிழ்வாரால். (ருஉ)

நோற்குநோன்பின்மெய்நடங்குவதன்றிவேறொன்றினிது ங்காதார், நாற்பெரும்பொருட்பயப்பனயாவையுநான்மறைக்கிழவோர்தம், பாற்பயின்றுமுள்ளமைவுறுதருங்கலைப்பான்மையோர்பாற்கேள்வி, யேற்பதன்றிவேறொன்றினின்விழைந்துளமேற்குரரவணின்றால். (ருக)

சைவதேசிகருணர்த்தியமுறைமையேமுறையெனச்சார்ந்துள்ளோர், சைவசாத்திரமன்றிமற்றயவுளசாத்திரந்தரிப்பிலார், சைவமேசமயம்பிறசமயமுஞ்சமயமோவெனநிற்பார், சைவநாயகனுனிலைநாயகன்றனையலாற்றொழல்செய்யார். (ருச)

வேறு.

அளிமுசுதொங்கலருகுடிஞனுமசலத்தணங்கினொருபாலொளிதோயுமெந்தையருளன்பர்பாதமலர்சூடுமோகைமிகுவதெளிதாயிலங்குபணிகீரனைந்ததிகழ்செச்சைகொட்டிவரினுமெளிதாய்விளங்குதிருநீறுபூசமதுவேவிழைந்தனைவார். ()

பார்காணவேதமுழுதும்பயின்றுபரிமேதயாகமுழுது, மோர்கலமுற்றிமுடிவின்கணேன்புமுரவோர்மருங்குபுகழத், தேர்கேடிகோடிசெறியும்பல்கோடிதெருவந்திகழ்ந்துகடவும், வார்காதினம்பொனொளிர்குண்டலம்பெய்மறையோரனந்தருளரால். ()

சொல்வந்தரும்புகுதலைச்செவ்வாயர்தொடர்வந்தபேதைகளி, ரில்வந்தமுன்றிலிடைவந்தமுத்தினிடைவந்தசிற்றில்சிதையாச், செல்வந்திகழ்ந்ததெருவந்தொடர்ந்துசிறுதேருருட்டிவளரும், வில்வந்தசெங்கைவிறல்வந்தவேந்தர்மிளிர்வந்தமைந்தர்பலரால். (ருஎ)

கொலைகொண்டதிண்மைமதிகொண்டுதூய்மைகுடிகொண்டிரண்டுதிறனுந், தலைகொண்டஞானவொளிகொண்டபோதுசரிகொண்டசிந்தைசிவனுந், தொலைகொண்டகூற்றமெனமற்றையோர்க்குந்தொழில்கொண்டியற்றும்வணிகர், நிலைகொண்டளப்பினிதிகொண்டறத்தினெறிகொண்டுவாழ்நர்பலரால். ()

வேறு.

பூமகளுக்குரிய திருமதலையாயுதித்துப்புண்ணியமேயுரு
வாகநண்ணியருள்பெருகி, மாமறைகளுயிர்க்குமுயர்குலமுதல
பெயர்தாம்வந்துகொளக்குறைபடாப்பைங்கூழ்களியற்றி, யே
மமணிகுயிற்றியொளிவளர்மேழித்துவசமெண்டிசையுந்துவிசி
ரவலர்கலிகடமித்துத், தாமநறுங்குவளையணிந்துலகளித்துவே
ளாண்டலைவரெனநிலவியசீர்த்தமிழ்வேந்தர்பலரால். (௫௯)

இன்னபலவளன்களுமிப்பெற்றியருமுறையுமியல்பின
தாயிருபயனுந்தருவதாயிலையா, நன்னெடுங்கட்சுரர்சுராதிப
ன்மறைநான்முகவனரலைவாரிதிநடுவணுகவணைத்துயில்வோன்,
றுன்னிமாதிரக்கிழவர்முனிவரரஞ்சலித்துத் தூய்மலர்தூயரு
ச்சிப்பத்தொகுமிடனுய்நளினப், பொன்மலர்ப்பொகுட்டி
னடுவரசுவீற்றிருக்கும் பொற்கொடியற்புறுகருப்பபுரியெனுமூ
தாரில். (௬௰)

வேறு.

ஓங்கலுதவுமதர்நெடுங்கணொருமானிடத்திலொருமானைத்
தாங்கிமிளிரெம்பெருமானைத்தயங்குமானையகத்தானை
வீங்குமானையுரியானைவிழையுமன்பர்வழியொழுகிப்
பாங்குபெறமுன்பெறிபத்தரடைந்தபரிசுபகருவாம். (௬௧)

நகரச்சிறப்புச்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆகச்சருக்கம் ௧௮ - ஐ திருவிருத்தம்-௮௫௪.

---

# எறிபத்தச்சருக்கம்.

---

மாணிலையேமறையோனிலையேமகவானிலையேமுதலாம்
வாணிலையானவைதாநிலையாவெனமற்றவைசற்றுமெணார்
மேனிலைதேர்தருஞானியருள்ளம்விரும்புமரும்பொருடா
ஞானிலைமேவியபசுபதிநாயகரடியரடிப்பொடியே. (௧

## வேறு.

கன்னிக்கமுகின்மிடறொடியக்கயவாய்வாளைகுதிபாயும்
பொன்னிப்புனல்சூழுறையூரிற்புலவுவேற்கைப்புகழ்ச்சோழ
நன்னித்திலவெண்குடைநிழற்றியொருகோலோச்சிகானிலமுந்
தன்னுட்படுத்திவரிசையிற்கண்சாத்தியுலகத்தலையெடுப்ப. (உ)

சைவநிலைப்பத்திருநீறுதழைப்பவறங்கணணிநீடத் [ங்க
தெய்வவெழுத்தைந்துளந்தெளியச்செழுநான்மறையினெறிவழ
வையமிசைத்தெண்ணிலவுமுடிவரதர்பூசைவளஞ்சிறக்க
வெய்யசுடர்வேலரசர்திறையளக்கவெய்யோன்குலம்விளங்க.

கூனலிளவெண்பிறைமௌலிக்குழகனழகுதிகழவொளி
ஞானநடனநவிலுமணிநகுமாமணிமாளிகைத்தில்லைத்
தானமிளிர்தென்மணிமறுகுமுதலபணிகடலைப்பெய்த
வூனமறச்செய்தரியதவமுஞற்றியுலகமளிக்குநாள். (ச)

முடிசூடரசருணங்குமணிமுன்றிலுடையாருலவியசீர்க்
குடிசூழ்கொங்கர்க்குடபுலத்தோர் கொணருந் திறைகண்டிடல்
வேண்டிப், படிசூழணிகமமைச்சர்பரிசனமொய்கொளத்தம்ப
ழம்பதியாங், கடிசூழ்வாவிக்கருவூரினணைந்தார்முரசங்கலந்தா
ர்ப்ப. (ரு)

விழவுமறுகினிடைப்போந்துமிளிருந்திருவாணிலைக்கோயிற்
குழகற்பழிச்சிநறுமலர்தூஉயிறைஞ்சிக்குறுங்கண்வார்விசித்த
முழவுதுயிலாநிலவுமிழுமுன்றின்மணிமாளிகைவைகி
மழவெள்விடையோற்கேற்றதிருப்பணிகளாற்றிவருநாளில். ()

## வேறு.

வைத்தமூலமலத்தைமாயைமலத்தைவாவுகன்மத்தையே
கைத்துஞானநிலைத்துநீடுகருத்தர்மாவிரதத்தனார்
நித்தர்சோதிநிறத்தராதிநிருத்தர்நீலமிடற்றினார்
முத்தவாணகையத்தர்தாடொழுமுத்தனாரெறிபத்தனார். (எ)

விழிநுதற்சிவபணிவிடைக்கொருவினைவிளைத்திடுமெவரைமா
லொழியநற்றவமுறுதியிற்புரியுவமமற்றநலடியர்பா
லழிவழக்குரையிடரிழைத்தனமவமதித்திடுமெவரையே
பழிபடத்தரைமிசையடர்க்கவோர்பரசெடுத்தகைவிரதனார். ()

பாலொளித்திருநீறுபூசியபான்மையார்தவமேன்மையார்
மாலினுக்கரியாரையோதியவாய்மையார்மிகுதூய்மையார்
சீலமிக்கவர்மேவுபேரவைசேர்குவார்குறைதேர்குவா
ராலயப்பணியாவுமேபுரியாவலார்புரிகாவலார். (கூ)

வெள்ளைமால்விடையூர்தியாரருள்விஞ்சுசேதிமமெங்கணு
முள்ளமீதெழுகாதல்கூரவுவந்துசேவைபுரிந்தபின்
றுள்ளிவாளைகள்பாயும்வாவிகடென்றுநீர்வயல்வஞ்சியில்
வள்ளலானிலைநாதர்பாதம்வணங்கிவாயிடைவந்தனர். (க0)

உந்துபைந்தளிர்மேனிமான்வடிவுடையமங்கைமடந்தையை
முந்துதெண்டிரையாழிவாய்முதிர்விடநுகர்ந்தவரும்பர்மெய்
வெந்தவெண்பொடிநீறுபூசியவிமலர்செங்கணனெண்கண
னிந்திரன்றொழுமாதிநாதரையினிதிறைஞ்சியிருந்தனர். (கக)

வேறு.

இருந்துபசுந்துணர்க்கோதையிளநிலவுதருந்தரள
முருந்தநகையுமைபாகற்கேற்றபணிமுயன்றாற்றி
யருந்தவங்களியற்றுமரனடியரிடையூறகற்றிக்
கருந்துளவோன்றொழுங்கருவூர்க்கடிநகரினுறைகின்றார். (கஉ)

துய்யசிறுகுஞ்சிமுந்நூல்சுதைப்பொடிகண்டிகைபுனைந்த
வையர்மரபுளியுதித்தாரழலவனுக்கருத்தியுண்ணுஞ்
செய்யமறைத்தலைமையினார்சிவகாமியாண்டாரென்
றெய்துபெயரினர்கருவூரிறையவரேவலிற்றிளைப்பார். (கங)

மேதினியிலுளபொருளைவிளக்கவருங்கதிரெழுமுன்
சூதநதித்துறைபடிந்துதுறையிலுளகடன்முற்றித்
தாதிவர்நந்தனவனங்கடமிற்போகிவரியளிக
ளூதியிசைமுரன்றுநறவுண்ணவுறுவதன்முன்னர். (கச)

விரலுளரமுகையவிழ்ந்துவிரைகமழும்பருவத்துப்
பிரசமலர்கொய்துகொய்துபிணித்தபெருங்கூடைகளை
நிரைநிரைகைக்கொணர்ந்துபெய்துபெய்துநிரப்பியபின்னர்
முரணியதண்டினிற்சேர்த்திமுறைபிறழாதுளமுன்னி. (கரு)

எந்தையாராலயத்தினிடையிருப்புடைமருவிச்
சிந்தையானதுதெளியத்திரும்பவும்பன்மலரெல்லாம்
வந்ததொருபழுதெனப்பார்த்துணர்ந்துமனநாரினுடன்
முந்தமுந்தவகிர்ந்தகரநார்கொடுபின்முறைபிணியா. (௧௬)

படராழிசூழ்கிடந்தபார்விசும்புமகிழ்ந்துபுறந்
திடராழிகுளித்துடலமிளைப்பதல்லாலிருவரினுந்
தொடராதபரஞ்சுடரைத்தொடராகத்தொடருதற்குத்
தொடராகவணிந்துபவந்தொடராதபடியளிப்பார். (௧௭)

அஞ்சிறைவண்டிமிர்தெரியலளித்திடுபத்தினத்தொருநாள்
நெஞ்சலறமுன்பெனத்தாமெடுத்தமலர்பெய்கூடை
விஞ்சியதண்டுடன்சேர்த்திமிளிர்கோயிற்புகவிரைவிற்
செஞ்சுடர்மாமணியிமைக்குந்திருமறுகினணைவுற்றார். (௧௮)

அணுகினர்மற்றந்நாளிலகிலர்புரிமாநவமி
நணுகலுமத்தூருறைவோர்க்குமணித்தூணெனத்திரண்ட
திணிதருதோட்புகழ்ச்சோழர்திருவுள்ளமகிழ்தூங்கக்
குணில்படுமோமுரசமெழுங்குளிறுமுகிலெனத்துவைத்தே. (௧௯)

தாறுமலிகதலிசெழுங்கமுகுதனித்தனிநிறுவி
நாறுமலர்த்தொடைநாற்றிநாட்டிநறுங்கனிவிசும்பி
ஞூறுதொடுகதலிகைநீடனமாடநிரைவகுத்துச்
சேறுதருகளபமெள்ளறிகழ்நகரஞ்சிறப்பித்தார். (௨௦)

கலினவாம்புரவியும்வெங்கலுழிமதஞ்சொரிகளிறு
மொலிகொளாழியங்கொடிஞ்சியுயரியபொற்கொடித்தேரும்
பொலிவுசால்புறயாவும்பொற்பித்தமடவாரும்
வலிசெய்தோளிளைஞருமாமறுகினுலாவரல்புரிந்தார். (௨௧)

வேறு.

நட்டமிட்டகளினப்பதத்தர்பணிநற்றவத்துடணியற்றலின், மட்
டறப்புகழ்விளக்குகொற்றவர்வரிப்புலிக்கொடியுயர்த்தவ, ரொ
ட்டலர்ச்சருவியக்களத்தெதிருடற்றிவெற்றிகொளுமைக்கரிப்
பட்டவர்த்தனமெனச்சொலப்பெயர்பரப்பியிப்புவிநிரப்புமால்

உறைமுகிற்பிழியநெடுமுகட்டின்மிசையொருபனைக்கா லெடுப்பது, கறையடிப்புடவிநெளியவைப்பதெழுகடன்மதக்கு ழிநிறைப்பது,சிறுவிழிக்குளெரியழலமைப்பதுலவையையிணை ச்செவிசெறிப்பது, பிறைமருப்பிணைகொடுகுலக்குவடுபிதிர் தரக்கடிதிடிப்பது. (உ௩)

குளிறுமப்பொருளினசனியொப்பதடுகொலைசெயிற்சமனி கப்பது, பிளிறுமத்தமதகரிகளைச்சிறியபிடியெனத்திரியவிட் டது, தளிமதத்தில்விழுமளியகற்றவுயர்தருவுழித்தழைமுறிப் பது, மிளிர்முடிக்கனகவரைபெயர்த்தடல்செய்கதையெனச்சு லவுமிக்கது. (உ௪)

இதனைநீடுபுகழ்வளவனாருளினிலகுபாகர்திருமுகபடாம், வைதளரீதுமுதுகிடையின்பருமமணிகளானவிருபுடையின் மா, றுதல்றேடைநறுமணிசெய்பூணிறைகணுதிகொள்கோ டுகளினடைவிலே,பதியுமாறுதவிநெடியமேனிமிசைபரவுகோ லமுறைவிரவியே. (உ௫)

தனைவிடுத்திருவர்மிசையுறப்புடைகடரவில்வீரர்பலர்சூழ் வர,வளைமுழக்கமுழவொலிபெருக்கமழைமங்குல்போலவருபே ரியக், துளையுடைக்கருவியிசைமுரற்றமலர்துன்றுசோதிமணி வீதியுள், ளளவறுக்கவரிதரிதெனப்பவனியடையலார்வெருவ நடவியே. (உ௬)

வேறு.

திரைபொருகரைமாநதிப்புனலாடிச்சிறுவிழிப்பெரியகோ ட்டொருத்தல், குரைபுனலாடிமதசலதியினுட்குளித்துளங்க ளித்தெதிர்பரிக்கோல், விரைவின்முற்கொணர்ந்துவளைந்தவரய லின்மிகுந்தவர்கவன்றுளம்வெருக்கொண், டிரிதரத்தோட்டிநி மிரமேற்பாகர்கைமிகுந்தெரிவிழிசீறி. (உஎ)

பிணித்தமைக்கரும்பொற்றளையிறநூறிப்பிறையெயிற்றிடி குரற்சண்டன், பணித்தலைக்கிடந்தபார்மிசைப்படரும்பான்மை போற்பதம்பெயர்த்தொளிரு, மணித்தகடிழைத்தபசும்பொன் மாளிகைமாமறுகின்மாருதமெனவிரைவி, னணிச்சிவகாமியா ர்வருந்தெருவத்தணைந்தபின்றொடர்ந்தவர்ப்பற்று. (உஅ)

தோளின்மேற்பொறுத்ததண்டொடுமெருவித்தூங்குபூங்கு-
டைகள்சிதைய, நீள்பெரும்புழைக்கைகொடுபெறித்ததறிநிலனி
டைக்கொலைமதக்களிறு, தூளெழச்சிதறியகறலுநோக்கித்தொ
ண்டருந்தண்டுகொண்டடர்ப்பான், கோளுளம்பதைப்பச்சேற
லுஞ்சேணிற்போயதுகோபவெங்கால்போல். (௨௯)

சேட்படக்கண்டதொண்டர்பின்றொடருஞ்செயலிலராய்
விழுந்தயர்ந்து, தூட்படமலர்க்கைமண்பகப்புடைத்துத்துளங்
கினரொடுங்கிமெய்துளங்கி, வேட்படவிழித்தகணலுமிழ்நுதற்
கண்விமலருக்கேற்றுமென்மலரைக், கோட்படகட்டிபமோசிந்து
மென்றுளைந்துகொதித்துளமழுங்குவார்புழுங்கி. (௩௦)

வேறு.

முருகுசெறிதண்பொழிற்கருவூர்முதல்வமுரிக்கடனஞ்சம்
பருகுமொருவநினக்கடியேன்கொணர்ந்துவருமப்பனிமலரைப்
பெருகுகளிப்பினுடனென்னைப்பிடித்துநெடுங்கையாற்பற்றித்
திருகுசினவெங்களியானைசிதறிச்சேறறிருவுளமே. (௩௧)

பால்கொண்டெழுந்தபனிமொழிபங்காளதமியேனின்பத்
த்தின், மேல்கொண்டெழுந்தவிழைவினொடுசாத்தவெடுத்தவி
ரைமலரைக், கால்கொண்டெழுந்துவருமுகில்போற்கடிதினெ
ய்திக்கடாங்கவிழ்த்து, மால்கொண்டெழுந்துவரும்யானைசிந்
தியேகல்வழக்காமே. (௩௨)

அந்தோநினதாட்கேற்றவெனவெடுத்தமலரையகற்றியிடர்
தந்தோர்யானையித்தெருவத்தணைந்துபோயிற்றிதுகிடப்ப
விந்தோடரவுபுனைவேணியடியர்க்கிடுக்கணுறுங்கொலென
வந்தோர்வழங்குமாற்றமதற்கியாதுபுகலமறையோனே. (௩௩)

இன்றுபூசையிழந்தனன்மற்றிதனுக்கிடையூறிழைத்தபெருங்
குன்றுபோலவருங்களிற்றைக்கொன்றுவீழ்த்திலேனுமிலேன்
றுன்றுமாவிதரித்துடலஞ்சுமந்துமிருந்தேனருந்தவர்பாற்
சென்றுதிகழாநிலையமுதேசிவனேசிவதாவென்பாரால். (௩௪)

இனையமாற்றமெடுத்திருகணருவிசொரியவிறைவனுரு
வனையராயசிவகாமியாண்டார்புலம்புமுறையிடு
புனையுநீற்றரெறிபத்தர்செவியினூடுபொருகளிற்றைத்
துனைவினடநீர்வருதிரெனவிளிக்குந்தூதரெனப்புகுந்த. (௩௫)

செவியினூடுபுகுதலுமத்தெருவினூறுமென்சாயன்மயிற்
குவிமென்முலைபங்கினரடியார்க்கியாதுகுறையுற்றதுவென்று
நவியமேந்திக்கொதிகொதித்துநடந்துநணுகித்துணிதவிர்த்திர்[ன
தவிர்த்திர்முனிவீர்நுமக்கிடையூறிழைத்துளோரைச்சாற்றுமெ

ஐயவிடையான்புடைவருமாணிலையெம்மடிகட்கெனக்கொய்த
கையின்மலரைக்கூடையொடுங்கவிழ்த்துச்சிதறிக்கழைசுளித்
வையநெளியவொருபெரியகளிறுமறுகின்வாரொருவிப் [து
பெய்யுமுதுகூற்புயல்பாரிற்பெயர்தல்போலப்பெயர்ந்ததுவே. ()

விளம்புமாற்றமதுகேளாவெகுளிபெருகிவிரிகடல்வாய்க், க
ளங்கவிடமுண்டவற்குதவுங்கடிமென்மலரையடியருளந், துள
ங்கவீழ்த்துமிபமோவென்றழன்று தொடர்ந்துதுணைவரைபோ
ற், கிளர்ந்தபுயற்கிம்புரிக்கோட்டுக்கிரிபோம்விரைவைக்கண்
ணுற்றார். (௩௮)

போவதெங்கேயெனக்கூடிப்பொருவெங்கணிச்சிப்படையொடு
ம்போய்த்,தாவலும்பாவடியானைத்தருமந்தனைச்சாய்த்திடவெதி
ரும், பாவம்போலவாய்ப்பவதையணுகிப்பனைக்கைதுணித்தலு
முள், ளாவியழியவசனியெனவலறிவீழ்ந்ததுகளிறு. (௩௯)

உருமோடெழிலிவிழுவதெனவலறிவீழுமொருத்தலின்மேன்
மருவுமிருவர்மூவர்புடைவருவோரிவரைவரையுமுயிர்
துருவிநவியம்வீசியுயிர்தொலைத்தாரயலிற்றொலையாதார்
வெருவியிரியவெறிபத்தர்வெகுளிதணியாதவணின்றார். (௪௦)

சாலவகந்தைமிகினயன்மான்முதலினோரைத்தடிந்தவர்தா
மேலவுறையப்பதஞ்சனைவேறியற்றுமமலனடியவற்கு
ஞாலமளிக்குமொருநிருபனருளினடக்கும்பாகரையுந்
தூலமதவெங்களிற்றினையுந்தொலைத்தலதுமற்றரிதாமே. (௪௧)

அண்டர்பெருமான் றனதுபணிவிடைகளகற்றுமாசகற்றி
பண்டையருளானந்தநியுதவும்பரமகுரவனுக்குத்
தொண்டுபுரிசங்கமந்தனக்கோரிடையூறதுசூழ்வரிற்சூழுந்
தண்டமிழைப்பவொருசிறிதுஞ்சலியாரமலனடியாரே. (சஉ)

இருப்பிணிழைத்தபிறைவாயினவியமெறியவுயிர்விடுத்த
வருப்பமுறுகட்பாகரன்றியொழிந்தோடினரிற்சிலர்போகிப்
பொருப்புமலிதோட்புகழ்ச்சோழர்கோயில்வாயிற்புறக்காவல்
விருப்பமுறுநர்தமக்கன்றுவிளைந்தவாறுவிளம்பினார். (சங)

வேறு.

வாயிலாளர்வளர்புகழ்ச்சோழர்பொற்
கோயில்போகிக்குறுகலர்ச்செற்றுநெய்
தோயும்வேற்கைச்சுடர்முடிக்கொற்றவர்
சேயமாமலர்ச்சேவடிபோற்றியே. (சச)

அறைகழற்பகைவேந்தரில்லாமையி
னுறைகழித்தறியாவொளியொண்கைவே
லிறைவநின்னரசுய்த்திகலார்த்தெறுங்
கறையடிப்பிறைக்கோட்டுக்கடகரி. (சரு)

பட்டவர்த்தனம்பட்டதுநீர்த்துறை
விட்டபாகரும்வீடினர்வீட்டிய
வொட்டலார்சிலர்யார்கொலுணர்ந்தில
மட்டறுமலர்த்தாதகிமார்பனே. (சசு)

என்றமாற்றமிருசெவிச்சேறலு
மொன்றுமுள்ளத்திலோர்ந்துணர்ந்தாரிலர்
கன்றிநெஞ்சங்கனன்றறியாதன
நின்றிழிந்துநிறைமணிவாயிலின். (சஎ)

செல்லலும்பணியிற்றிளைந்தோங்குபோர்
மல்லலம்புயவாதுவர்வாம்பரி
யொல்லையிற்கொணர்ந்துய்த்தலுங்கொற்றவ
ரெல்லெனப்பரிமீதினிவர்ந்தனர். (சஅ)

தொடருமாமதித்தேர்ச்சித் துணைவருந்
தடறும்வாட்படைத்தானையும்யானையுங்
கடவுந்தேருங்கலினப்புரவியு
முடனெருங்கியொருங்குறப்போதவே. (சகூ)

களிறும்பாகரும்வீந்தகளத்திடை
யொளிரும்வேற்படைக்கொற்றவருற்றனர்
குளிறுதானைக்குறுகலர்க்கண்டிலார்
வெளிறுநீற்றொருமெய்யரைக்கண்டனர். (ருo)

காண்டலுங்கறைக்கண்டர்தந்தொண்டனா
பூண்டநந்தொழின்முற்றுவரேயலா
ரீண்டெனத்தெரிந்துள்ளத்திடையிடைக்
கூண்டபாகரைக்கூவினர்கூறுவார், (ருக)

இக்கணத்திதுசெய்தவரெவ்வுழிப்
புக்கொளித்தனரோபுகல்வீரெனப்
பக்கமுற்றவப்பாகர்பரசுகைத்
தொக்கத்தொண்டரிவரெனச்சொல்லினார். (ருஉ)

எம்பிரானடித்தொண்டரொன்றன்றியுள்
வெம்பியூறுவிளைப்பவரன்றெனத்
தம்படைத்திரளைத்தலைசாயவிட்
டம்பொனீள்பரிவிட்டிழிந்தாரரோ. (ருங)

மின்னிவர்ந்தொளிர்வேணியரன்பர்பா
லின்னிலத்திடையூறொழித்தற்கினித்
தன்னிகர்த்தவரில்லவர்தாள்களிற்
சென்னியைச்சென்னிமன்னவன்சேர்த்தியே. (ருச)

வேறு

இவ்வுழிநிகழ்ந்ததின்னணமெனச்சற்றறிந்திலனெய்திய
வினைய;மவ்வுழியொன்றுகொண்டிவாறணைந்தேனப்பிழைபொ
றுத்தருளுதிர்நீர், கைவரைக்களிறும்பாகருமீண்டுகளிமயக்குள
ங்கொ[illegible]ரிந்த,வவ்வியமதற்கின்றிளைத்தவித்தண்டமமையுமோ
வெனத்தொழுதிரந்தார். (ருரு)

இரந்தறவருந்துங்குரிசிலை நோக்கியியலெறிபத்தனுருலகம் புரந்தவேல்வளவனானைக்கோயிற்புனிதற்குச்சாத்துந்தண்மலரை, யரந்தைமீக்கொடுமொழ்குறச்சிவகாமியார்கரத்திருந்ததை யறியாப், பரந்தநீணிலத்திற்சிதறிடக்களிற்றின்பனைநெடுங்கரமிறத்துணித்தாம். (௫௬)

மருக்கிளர்மலரைக்கொலைமதக்களிறுமண்ணிடைச்சிதறிடக்காணூஉச், செருக்குளத்தினராய்விரவுபாகரையுஞ்செகுத்தனமெனப்பிறைக்கொழுந்தோ, டெருக்கணிசடிலரன்பரெமடிகளிவரெறிபத்தரென்றுணர்ந்து, பருக்குமாதரவினச்சமுள்ளுறுத்தப்பணிந்தனர்பெரும்புகழ்வளவர். (௫௭)

சினவிடைப்பாகனடியரையிழைத்ததீமையிப்பரிசினுற்றீரா, வினையவித்திறமைக்குரியன்யானன்றேயெனையுமிக்களத்திடைக்கோறல், பனவநல்வழக்கீதவெதற்குனதுபரசுதிப்பியப்படைபடுதற், கனையமாதவஞ்செய்தேனிலேனிதனலடுதியென்றங்கைவாட்கொடுத்தார். (௫௮)

மன்னவருடைவாளளித்தலுந்தொண்டர்மலர்விழியருவிநீர்சொரிய, விற்கிலையிவனேதுணிந்தனனல்லால்யாவர்மற்றிதுதுணிந்தனரென், றுன்னியப்படைவாங்கினமிலையேற்றன்னுயிர்துறந்திடுமிவனென்னு, வன்னதுகைக்கொண்டனரதுபோழ்தினபயனுருவகைமீதூர. (௫௯)

தீருதற்கரியதீவினைதீரத்தீமையேனுருயிர்தீரச், சாருதற்கரியதவத்தினரென்கைத்தடறுவாள்வாங்கினரிவர்போல், யாருதவினரென்றுளமகிழ்தாங்குமேல்லையிலியலெறிபத்தர், பாருலகளிக்கும்பரிதிதொல்குலத்திற்பார்த்திபன்பான்மையென்பகர்கேன். (௬௦)

ஓடைமால்யானைபாகராருயிரையொழிக்கவுமுளஞ்சலியாமே, யாடல்வாணல்கியெனையுமிக்களத்திலடுமெனவறைந்தவன்முன்னர், வீடுவலெனத்தம்மிடறுபோழ்படவாட்பூட்டியீருதலும்வேல்வேந்தர்,வாடியுள்வெருவியோடியப்படைக்கைவலியினிற்றடக்கையாற்பற்று. (௬௧)

பிடித்தகைவளவர்விடாமையினவியம்பிடித்தகைத்தொண்டர்தங்கரத்தால், விடுக்கவும்விடாமையாலிவர்புரியும்வேலையில்விண்மிசைவாணி, யடுத்தெழுந்தெவருங்கேட்பநீர்புரியுமன்புலகறிந்திடவேண்டிக், கடுத்திகழ்கண்டரருளினிவ்வாறின்றுயதென்றேகழறினதால். (கூஉ)

மீதுவாக்கெழலுங்களிறெழுந்ததுமுன்விளிந்தபாகருமெழுந்தனரப், போதெறிபத்தர்வளவர்தாள்வீழ்ந்துபோற்றினர்போற்றலுமதன்முன், றுதகித்தொடையாரவரடிக்கமலந்தாழ்ந்தனர்வாழ்ந்திருவருந்தம்,மாதரம்பெருகுநிலனிடையமரரலர்மழைமுறைமுறைபெய்தார். (கூ௩)

வானெழுமொலியையிருவருமெழுந்துவணங்கமாமதிபுனைவேணித், தேனிதழியினாருளினாற்கருணைதிகழ்சிவகாமியாரகையிற், கானிவர்மலர்மென்கூடையின்முன்போற்கமழ்தரநிறைதலுங்காணு, வானிலைநாதர்திருவுளமெனத்தம்மகமுகமலர்ந்தனரால். (கூச)

நிற்றலுநிறைசீர்நேரியர்முன்னர்நீணிலத்துயிரனைத்தெழுந்த, கொற்றவெங்களிற்றைப்பாகரூர்ந்துய்ப்பக்குழைத்தெறிபத்தரொன்றுரைச், செற்றமால்யானைப்பிடரின்மேற்செல்கவெனும்பணிசென்னிமேற்பரித்து, மற்றவர்ப்பரசிப்பட்டவர்த்தனமேன்மன்னவர்கோயின்மன்னினரால். (கூரு)

கூடைபெய்மலரைக்கொண்டருள்கொழிக்குங்குணச்சிவகாமியார்புலித்தோ,லாடையர்பணியிற்றிருண்டரைப்பரவியகன்றனர்மகிழ்ந்தெறிபத்த,ரோடைமால்யானையுரிவையரடியர்க்குறுமிடையூறுதீர்த்துலகில், வாடைசூழ்கைலைமலைவிடைத்துவசர்கணங்களுக்கதிபராய்மகிழ்ந்தார். (கூகூ)

புண்ணியச்சாந்தம்புனையுமாமுனிவர்புகழெறிபத்தரார்கமசூழ், மண்ணிடையடியர்க்குற்றிடத்துதவிவளர்திருக்கைலைப்போகிக், கண்ணுதற்பெருமான்கணங்களிற்றலைமையாயதுகழறினமிப்பா, லுண்ணிகழ்ஞானந்திகழ்புகழ்ச்சோழருயர்கதியடைந்தவாறுரைப்பாம். (கூஎ)

ஏறிபத்தச்சருக்கம் முற்றுப்பெற்றது.

ஆகச்சருக்கம் ககூ திருவிருத்தம் கூஉக.

---

# புகழ்ச்சோழச்சருக்கம்.

வேற்றுமலரம்பிறைமுடியும்படிகாய்விழியம்பிறைமுடியுந்
தோற்றும்வரியகருஆருஞ்சுடர்ப்பூஞ்சோலைக்கருஆரும்
போற்றும்பீதாம்பரவிடையுமுடையோன்புலவர்பாவிடையு
மேற்றுமிணைத்தாண்மலர்ப்போதுமிருக்குமுளப்போதெப்போ

வேறு. [தும்

மூரிவார்சிலைமுருக்கிமீனினடன்முரணடக்கியெரிகக்கு
வெம்,போரின்வீறியபொறிப்புலிக்கொடிபொறித்துமேருவினி
றுத்துதண், ணாரின்வேரிநறுமாலைமார்பர்புகழபயர்தாமரசிய
ற்றிடு, மேரினீடுமணிமண்டபப்பெருமையாவரேமொழியலா
வதே. (௨)

பானிலாமதியிடுவளிவிளங்கியபளிங்கரிந்தொளிர்தகட்
டிறு, ஞானுணங்கியகைவினைஞர்நூன்முறைநுணித்தியற்றுபீ
டிகையின்மேல், வானிமிர்ந்துறவிழைத்தவாயிரமொடாயிரம்
மருவுதூணிறீஇ, மேனிரைத்துமரகதமணித்தரளம்விரவுபோ
திகையமைத்தரோ. (௩)

பொங்குநள்ளிருளைநக்குசெங்கதிர்கள்பூத்தசெம்மணிசெய்
யுத்திரந், தங்குநீடுமரகதவசும்பொழுகுதமணியத்திடுநொடிழை
த்துவான், மங்குலின்னொளிவயங்குநீலநிரைவைத்துமொய்த்
தயாளிப்படைத், திங்களின்னகடுருஞ்சுபன்மணிசெய்சேகர
ம்பலதிளைத்தரோ. (௪)

காமர்வண்டுவிளையாடிமூசியகடஞ்சுளித்தெறியும்வாரணந், தா
மரின்னொளிர்விலாழிசிந்திவுளிதாழ்தடக்கையுயர்யாளிநீ, போ
முயிர்த்தொழுகுகவிழ்தலைக்கதலிசெய்யகாய்ப்பசியபூகத,மேம
முட்கனிவருக்கையோவமொடிமைத்தணிடையமைத்தரோ

அள்ளலந்திரையுகந்தவாரிதியினகடுளைந்ததருமிப்பியின், வெ
ள்ளிவெண்டரள மாலிகைத்தொகைநிரைத்து நாற்றிமதர்வேல்
விழி, வள்ளைவார்குழைமெனறுமலர்ச்சுரியல்வாணகைப்பலரு
மவல்குலார், கிள்ளையொண்புறவுகோகிலம்பசியகேகயம்பலவி
யற்றியே. (௫)

ஆயிரங்கதிரலர்ந்தசெம்பரிதியவிரொளிச்சுடர்மழுங்கவே,
பாயொளிக்கதிர்பரப்பிவிண்முகடெரிஞ்சுடரான் முறைபடைத்த
தோர், தூயமண்டபமிசைச்செழுங்கவரிதுயல்வரப்புடையினை
யலவர், மீயுறும்பொதியவளிமுகந்துவிடும்விசிறிபிச்சமிவை
யசைதர. (எ)

மனுவினூன்முறைவழங்குகேள்விதிகழ்மந்திரக்கிழவர்
சூழ்தரப், பனிமலர்ச்சிகழிவாகைசூடியபதாகினித்தலைவர்மா
டுறப், புனிதவேதியர்களாசிமாரிகள்பொழிந்துவந்தருகுமொய்
த்திடக், கனியுமன்பினொடுசிவபுராணமிவைகழறுவோரெதிரி
னவைகவே. (அ)

நவமணிக்குலைபசும்பொனிட்டமணிநன்கலைமத்துமிளிர்
கோசிகங், கவனவாம்புரவிபாவடிப்பருமயானைமொய்த்தொளி
ர்வளங்களு, மவனியின்கணளவிலசுமந்துமுறைதிறையளந்
துமணிமுன்றில்வா, யிவர்பொன்மாமவுலிபுனையும்வேலரசரெ
திர்புகுந்தடியிறைஞ்சவே. (௯)

வேறு.

படங்கொள்கட்செவிக்கரையணப்பாந்தள்மாமுடியிற்
கிடந்தபூதலந்தமதடிப்படுத்திவிண்கெழுமி
யிடங்கொள்வெண்மதிக்கவிகையெண்டிசைகளுங்கவிப்ப
மடங்கலாதனத்தினிதுவீற்றிருந்தனர்வளவர். (௧௦)

இருந்தநேரியர்க்கிறையவர்குடபுலத்தரசர்
திருந்திடுந்திறையிடுந்தொறுமிடுந்தொறுஞ்சிறந்து
பொருந்துமோகையராயவரவர்க்கருள்புரிந்து
வருந்தமாற்றலருறைபதியரணங்கண்மாய்த்து. (௧௧)

நிறைமதித்தொழிலமைச்சரைநேரியர்நோக்கித்
திறைகொணர்ந்தனர்வாதுவாழ்தெம்முனைவேந்த
ருறையுநீடரணங்களுமுளவெனிலோர்ந்திங்
கறைதிரென்றலுமமைச்சரிற்றலைமையோரறைவார். (௧௨)

செங்கண்வாளரியேயெனத்தெவ்வுகெடர்வே
லெங்கணுயகதிறைகொணர்ந்திவணுறுதிகலி
வெங்கண்யானையும்வரைகளுமிடையுமோரரணத்
தங்கணெய்தினனதிகனென்றறையுமோரரையன். (கங)

எனவுரைத்தலுமிருநிலத்தெம்மெதிர்பொருதற்
கனலெனத்தெறுமணிகழுமரணமுமுளவோ
கனைகடற்பொருபடையொடுங்கதுமெனப்போகி
வினையமுற்றிநீர்வருதிரென்றனர்விறல்வேந்தர். (கச)

பொன்னிகாவலர்பணிதலைக்கொடுபுறம்போந்து
சொன்னிகழ்ந்தவாறெழுகியதூதுவர்க்கூவி
மின்னிவர்ந்தவெம்படைத்தொழின்மள்ளரைவிரைவி
னிந்நிலைக்கணேகொணர்மினென்றேவினரமைச்சர். (கரு)

வேறு.

தூதுவர்விளிப்பவெய்யபதாகினிதுவைத்தெழுந்த
மாதிரம்பொறுத்தசூழிமதகரிசெவியடைப்பப்
பூதலம்பரித்தவெங்கட்பொறிவரிப்பகுவாய்ப்பாந்தட்
பாதலத்தலம்வந்துள்ளம்பதைத்துடலுழக்கமன்றே. (கசு)

கழைமுகஞ்சுளித்துச்சீறிக்கட்கனல்வடவைதாங்கி
மழைமதக்கலுழிசிந்திவடவரைபிதிரப்பாயும் [த்
புழைநெடுந்தடக்கைகால்வாய்ப்புகர்முகப்பிறைவெண்கோட்டு
தழைசெவிப்பருமயானைதனைவிடுத்தளவில்போத. (கஎ)

கருவிவாய்குதட்டிக்காலும்விலாழிநீர்கால்வாய்கொள்ள
வருவரைபிதிர்ச்செந்தூட்டிசையதரடைப்பக்கூந்தல்
விரிகதிர்க்கலினப்பாய்மாவெண்ணிலவிரைமென்கோதைத்
தெரிவையர்விழியிற்றாவிச்சிந்தையிற்செல்லமாதோ. (கஅ)

வச்சிரத்தடக்கைவாளார்வரையுறழ்குவவுத்தோளா
ரச்சமிலுளத்தார்தம்மையடைந்தவர்க்கன்புபூப்பார்
நச்சுவாளெயிற்றுப்பாந்தட்சீற்றத்தார்நணுகலார்த
முச்சிதோய்தாளின்வீரக்கழலினருருமையொப்பார். (கக)

தேன்படுசிறைவண்டார்க்குஞ்சிகழிகைதிகழுங்குஞ்சிக்
கான்படுவாகைசூடுங்காட்சியர்கணக்கில்வீர
ரூன்படுதிகிரிதண்டுகேப்பணமுலக்கைநாஞ்சில்
வான்படுசூலம்வெள்வேல்வாளிகார்முகங்கொண்டேக. (உ0)

கதம்கைமுருகுநாறுங்கற்பகமுயிர்த்தமென்போ
துதிர்தரசிமிர்ந்துவிண்ணத்தலவவெஞ்சீற்றத்துப்பி
னதிர்கழன்மள்ளரொள்வாளொன்றொடொன்றுருஞ்சியாசைக்
கதமுறமுள்ளரித்தேவைக்காட்டமுன்பராகஞ்செல்ல. (உக)

தவநெறிவழுவாவாய்மைத்தலைமைசாலமைச்சர்யாருங்
கவளமால்யானைவெய்யகவனவாம்புரவிமேற்கொண்
டுவவுவெண்மதியம்வெவ்வேறுற்றெனவிப்பிவாய்விண்
டவிர்மணிக்கவிகைவானினிரைநிரையழகுசெய்ய. (உஉ)

குடவளையலறியேங்கக்குணில்படுமுரசமார்ப்பத்
துடிமுழவதிரப்பம்பைதொண்டகந்துவைப்பவானம்
வெடிபடமூரிதக்கைகொக்கரைவிம்மக்கொண்மூ
விடியெனக்காட்டிவெய்யபேரியமியங்கச்சென்றார். (உங)

எண்ணருநகரும்யாறுமெரியதர்வனமுநீங்கிக்
கண்ணகன்ஞாலங்காக்குங்காவலர்பணியிற்சென்று
ரண்ணருமெயில்கிடந்தவரணத்தையதிகனுள்ளந்
துண்ணெனவிருளைச்சூழ்ந்தசுடருமிழ்கதிர்போற்சூழ்ந்தார். ()

ஆர்த்தனரசனியிற்சென்றடர்ந்தனர்கூவியுள்ளம்
வேர்த்தனர்குழையமூரிவில்வளைத்தெரிவாயம்பு
தூர்த்தனரரணமெல்லாந்துளைபடத்தொடர்ந்திவ்வாறு
போர்த்தொழின்மள்ளராற்றும்போதின்மற்றதிகர்கோமுன். ()

பொருக்கெனவுழையர்போகிப்புரவலபொருவேற்கிள்ளிப்
பெருக்குதிண்டிறற்பதாதிபெரும்புறக்கடலின்மொய்ப்பச்
சருக்கமிலறிவின்றேர்ச்சித்துணையினர்துனைவினெய்திச்
செருக்களம்புகுந்திம்மூதூரரணமுற்செறித்துசேர்ந்தார். ()

பெருத்தனரெனுஞ்சொற்கூற்றஞ்செவிப்புகவதிகஞ்சிறிக்
கறுத்தனன்விழியிற்செந்தீக்காட்டினனமைச்சரோவத்
திருத்தனரென்பாலென்னவிதழ்மடித்தனிகவெள்ள
கிறுத்தனன்குவியவொன்றுய்ப்பறந்தலைமிர்ந்துசேர்ந்தான். ()

படைத்தொழிலணிவகுத்துப்பறந்தலைப்படர்ந்துநேர்ந்து
மிடைத்தனரிருவரும்பார்கெழுமெழுகடலுமொன்று
படைத்தெனவார்த்துப்பொங்கியொருவருக்கொருவர்தானை
கடைத்தலைபூழித்திமிற்கனன்றுருத்தெழுந்தமாதோ. (உஅ)

வரைபுரையருவிதாழுமதகரிநிரைத்துவாரித்
திரைபொருவியலாழித்தேர்தெறுவிழிபிவுளிதாண்டி
விரைதருமள்ளர்வெள்ளமெண்டிசாமுகமுமண்டி
விரைவுடனடவிவெய்யவெஞ்சமர்விளைத்தடர்ந்தார். (உகூ)

வேறு.

ஆளியெனப்போரேறியடர்த்தாரவில்லில்
வாளிதொடுத்தார்குளறைகுற்றார்வரையெல்லாந்
தூளிபடுத்தார்சோரிகுளித்தார்சுழல்பேழ்வாய்க்
கூளிகுணித்தேயாடமறப்போர்கொடுமிக்கார். (௩௦)

குந்தமெடுத்தார்குத்தினர்மெத்தக்கொலைவேழஞ்
சிந்தவடர்த்தார்சித்திரகாயமெனச்சீறிக்
கந்துகம்வீழக்கதமெரிவாளாற்றுணிகண்டார்
முந்துகழற்கால்பிந்தவடற்போர்முயலாதார். (௩க)

கப்பணமெங்குஞ்சிதறினர்கதைகொண்டிருண்டார்
துப்புறுவேலாற்காயமெலாமூழ்த்துளைகண்டார்
வெப்புறுகவியம்வீசியறுத்தார்சிரம்வீழ
விப்படியிற்போரிப்படியிலையென்றிடவேற்றார். (௩உ)

முசலமெடுத்தென்பொடியவடித்தார்முரட்போரில்
விசயநிறைத்தேறியபடைசாய்த்தார்வினைசெய்தார்
வசியிடுவாளாற்போழ்ந்தனர்கண்டகர்மார்பெல்லாம்
பொசிதருகுருதிப்புணரிவகுத்தார்புதிதாக. (௩௩)

எவரெதிரேற்றாரெவர்பொரவாற்றாதிடைதோற்றா
ரெவர்படையிட்டாரெவர்படைதொட்டாரெவர்பட்டா
ரெவருயிர்கொன்றாரெவரிரிஇன்றாரெவர்நின்றா
ரெவர்நணிசெற்றாரெவர்முரணுற்றாரெனவுற்றார். (௩௪)

வேறு.

கருமலையனமதகரிபரிவிழுவன
பிரியுயிர்செலமலிபிணவரைகுவிவன
திருகியதலையினசிலகடமிடுவன
குருதிகளலையெறிகுரைகடல்பொருவன. (௩௫)

எருவைகளொருசிறைதிரிவனவிரிவன
மருவியகழுதுகண்மகிழ்வனபுகழ்வன
கருகியகொடிபலகளணிடைமிடைவன
வெருவியநரிகளும்விரையுறவருவன. (௩௬)

வேறு.

இருகடற்றானைவெள்ளமின்னணமிகலுமேல்வைப்
பொருகரிவயமாவெய்யபோர்த்தொழில்வயவர்பொன்ற
வெரிநதுகொடுத்துச்சாய்ந்துவிறலிழந்தரணும்விட்டு
மருவினனதிகன்யாருமருவருஞ்சுரத்தின்மன்னே. (௩௭)

போய்வனத்துறைதலும்போரமைச்சரப்புரிசைசூழூர்
தீமடுத்தரணமுந்துளெழச்சினத்திடித்துவெற்றிக்
காய்சினக்களிறுமாவுங்காசுநீணிதியுங்கொவ்வை
வாய்மணிமுறுவன்மங்கைமாரையுங்கவர்ந்துகொண்டு. (௩௮)

செங்களத்தடையார்ச்செற்றுத்திருகுசெந்தலையினீட்ட
மங்கெழுகுவியவெல்லாமனவிலபொதியினேற்றித்
திங்கள்கண்படுக்குஞ்சோலைத்திகழ்கருவூரிஞரின்
கொங்கலர்தெரியலார்முன்கொணர்ந்தளித்திறைஞ்சினரால்.

வேறு.

இறைஞ்சிநிற்றலுமிகலடலரசரைமுருக்கி
மறஞ்செய்வீரர்கடலைசெறிபொதியின்வாய்விடுத்தாங்
கறஞ்செய்நேரியர்திருமுனர்க்குவிதரவளிப்பப்
புறஞ்செய்யாதலைநோக்கினர்நோக்குமப்போதின். (௪௦)

வேறு.

தருசென்னியவையினொருசடைத்தலைகாண்டலுமொன்ன
வருசென்னியமலரடியவர்சென்னியெனமாழ்கி
யொருசென்னிமரபுநலந்தலையெடுப்பவுடற்றினன்பேரர்
பொருசென்னியரிலெனில்யார்புகழ்புனைந்தார்பழிபூண. (சக)

ஒன்றுரைத்தெறலரசர்க்குலகவழக்கெனவுணர்வுற்
றிந்நாளத்திறனுற்றியிமயவரையிகலிவருங்
கைந்நாகவுரியரடியவராவிகடிந்துகளத்
தென்றுவிதரித்திருந்தேனெனவுள்ளம்பதைபதைப்பார். ()

விண்கணீர்சொரிதரல்போல்வேணிமுடிகாண்டோறுங்
கண்கணீர்சொரிவர்கரமுகிழ்ப்பர்கவலுவரேழு
மண்கொணீருவரியெதிர்வரினுமுளமலைவில்லா
வெண்கொணீர்மையராய்நின்றினைந்திதயத்திதுநினைந்தார். ()

மடைத்தலைவாளைகள்பாயும்வயற்கருவூர்வருமரன்முன்
கடைத்தலைவெவ்வழற்சிகையகனன்மூழ்கினுலொழிய
விடைத்தலைவரடித்தொண்டுவிரும்பியவன்புடையவர்தஞ்
சடைத்தலையையறுத்தபழிதவிருமோதவிராதே. (சச)

எனநுதலினுதலியவாறியன்மதிநூற்கடறினைக்கு
மனைவியரைக்கூஉயடியர்முடியறுத்தவரும்பழியைக்
கனலிடையென்னுடன்மறுத்துக்கழுவுகின்றேன்கவலாதென்
றனையனுக்குமுடிசூட்டித்தரணியளிப்பீரென்றார். (சரு)

என்றவாசகங்கேளாவியலமைச்சரெதிரிறைஞ்சி
நின்றுநேரியர்க்கிறையேநீதுணிந்ததுணிபந்தோ
சென்றகாலத்தரசரிழைத்தனரோதிருஞாலம்
பொன்றிடாதோமனுநூற்புகன்றவாபுரிகென்றார். (சசு)

அவ்வுரையைமனக்கொள்ளாரமைச்சர்களதிவுபிறழ்ந்
திவ்வுரைபேசத்தகுமோவெழுதருதொன்மறைவேதச்
செவ்வுரையரடியவரைச்செகுத்தபழிதீருமதற்
கொவ்வுரையோதாமையிஃதுரைக்குமோவொழிகென்று. ()

துண்டமதிமிலைச்சுமுடித்தோன்றறிருமுனர்த்தோண்டக்
குண்டமதிற்சிகைவரச்செங்கொழுங்கனலைவளர்ப்பித்து
வெண்டிருநீற்றொளிவழியமேனிமுழுவதும்பூசித்
தெண்டிரைநீர்மருங்குடுத்ததிசையெட்டுேம்புகழெட்ட. (சஅ)

துணிசடிலமுடியைநறுந்தூசுகொடுபொதிந்துசெழு
மணிதருபொற்பரிகலத்திலமைத்ததனைமௌலியின்மே
லணிபெறவைத்தாங்கிலையெம்மடிகளைச்சூழ்வலன்கொண்டு
தணிவிலெல்ழுவிதராவின்றபனவெரியினுட்குளித்தார். (சகூ)

சிகையெழுசெந்தழன்மூழ்கித்தேவரலர்மாரிபெயத்
தகைபெறுமந்தாரமுழவந்தயங்குமொலிமுழங்கியெழப்
பகையரணமெரியநகும்பசுபதிநாயகன்பாத
முகையவிழாயிரந்தோட்டுமுளரிமலர்நிழலடைந்தார். (ருo)

வேறு.

புகழ்வளர்பொன்னித்துறையினருறையூர்ப்புரவலர்புலிக்கொடியுயர்த்தி, மகிழ்வரவுலகம்புரந்தரன்கமலமலரடியணைந்தவாறுரைத்தாம், திகழ்வரவினிமாதவம்புரிகருவூர்த்தேவரானிலைத்திருக்கோயிற், பகவனதடியிலணைந்தவாறதனைப்பகருதுங்கிழ்வுறும்பரிவால். (ருக)

புகழ்ச்சோழச்சருக்கம்முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம் உoஇ திருவிருத்தம் கஎஉ.

---

## கருவூர்த்தேவர்கதிபெறுசருக்கம்.

---

தாவுமெரிபுரைமேனியலதுகாணுக்கண்ணுந்தனதுகீர்த்தி
மூவர்முதலியர்பாடலலதுமொழியாவாயுமுருகுதூற்றும்
பூவலர்தூஉய்ச்சிவபூசையலதுபுரியாக்கரமும்புலவர்போற்றுஞ்
சேவடியல்லாதுவணங்காமுடியுந்தந்தவனைச்சிந்தைசெய்வாம்.

வேறு.

ஒழிக்கும்புலத்தார்க்குறு துணையாயுணர்வுமுழு துமறைக்குமிருள், கழிக்குந்தனிமெய்ஞ்ஞானத்தின்மணியாய்க்கருப்புரிதன்னிற், சுழிக்குந்திரைத்தீம்புனற்குடபாற்சுடருஞ்சுடரோற்குகுத்துங்கித்தங், கொழிக்குஞ்சதுமாமறைக்கேள்விக்குலத்திலுதித்தாரொருசிததர். (உ)

தெள்ளத்தணர்தேர்மறைநெறியிற்றிவசந்தோறுஞ்சிறந்தருளின், வெள்ளக்கெழுமிக்குளிர்பருவமிளிர்ந்துமேலாங்கதிவிழைந்து, கள்ளந்தருபுன்சமயவிருளெறிந்துகலைகளுடன்கவினி, யுள்ளங்களங்கர்தவிரமிர்திஞெருவெண்டிங்களெனவளர்ந்தார். (௩)

உலகாயதமாதியசமயமுழுதுமொருங்கவுணர்ந்தோதி [வ
லகாரணமாகமம்பொதுவுஞ்சிறப்புமெனத்தேர்ந்தெழுமுனி
பலகாலிறைஞ்சுஞ்சிவசமயம்பரித்தானிலையார்பதிமேவி
விலகாதுறையுமிருமுப்பான்வேதமறையோர்தமின்மிக்கார்.

காவல்புரிமாதவ்வீடக்காமிகாதியாகமநூன்
மேவியொளிர்வைதிகசைவம்விளங்கவேதநிலைவீறப்
பாவநனிதீர்திருவிசைப்பாவுலகம்பரவப்படர்விசும்பிற்
றேவர்முனிவர்தொழுங்கருவூர்த்தேவரெனப்பேர்நிறுவினார். ()

இயமநியமாதியுமனுமாதியுமேற்புறவேற்றியநோன்பின்
சயமுஞானபோதகர்யாண்டுளரென்றெடுத்ததபனமுங்கா
மியமுமாயையவியமலவிருளுமிரியவிள்க்குசிவ
மயமுஞணருமுணர்வுதருங்குணனுமுளமாதவங்கெழுமி. (சு)

சித்தருளிற்பொய்ந்நெறியிற்றிரிந்துபிரிந்தூண்புரிந்துபணி
முத்தருழிப்போய்த்தவநதியின்மூழ்கிமுழைகானுழைவதிந்து
பித்தரடியர்ப்பரசுநெறிபிறங்கிப்பிறங்கையரங்கையருன்
மத்தரிவர்தாமெனச்சிவத்தின்வயத்தராய்நிலத்துறைவரா.()

எண்ணந்தரும்பல்சமயமும்போயிலையத்தாரெனினுமிமையோ
வெண்ணந்தின்னுங்காண்பரியவிமலன்சமயநிலைநிற்பார் [ரும்
வண்ணங்கரியகுழற்றிருவார்வளருங்களபமுலைப்போகர் [வார்
தண்ணம் புனலுஞ் சரோருகப்பாசடையும் பொருவத்தானுகர்

வேறு.

மும்மைமலத்தைமுருக்குகுணத்தின்முகிழ்த்தார்தஞ்
செம்மைதெரித்தகருத்தைமதிப்பொடுதேராதே
தம்மறிவுக்கொருமிப்பயனுற்றவர்தாந்தாமே
மம்மருளத்தினராயுரைவேறுமதிப்பாரால். (கூ)

வேதநெறித்தலைவிட்டுவிறற்கருவூர்த்தேவ
னேதமிழைத்தனன்வாமநிலைத்தனனென்னநீத்தே
யாதிமறைக்குலவாணர்பிதற்றினரயன்மாய
னோதருமுத்தருளத்தினையாவருரைப்பரே. (கo)

காமமடக்கொடியாரொடிருந்துகளித்தாலும்
வாமமுதற்பிறகுற்றமுறப்புவிவாழ்ந்தாலு
மாமையெனப்புலனைந்துமடக்கியகத்துள்ளே
தாமலமற்றறிவோடுதமைத்தெரிசிப்பாரே. (கக)

ஆரமணிக்குடைநீழலின்மேதினியாண்டாலும்
போருடையாருயிர்வவ்வுகொலைத்தொழில்பூண்டாலுந்
தாரியல்பூங்கமலாசனன்மால்வர்தாங்காணு
நேரியனுண்பொருளோடுதிளைப்பதுநீங்காரே. (கஉ)

வெந்தழலோனுழிமுளிசினையிந்தனம்வேவாவே
யுந்தலரிக்கதிரோன்வரினீடிமமோடாவே
வந்துநிலாக்கதிர்வானெழிலாரிருண்மாயாவே
சிந்தைதெளிந்தவர்பால்வினையாவனதீராவே. (கங)

மூன்றுமிவற்றினுணர்ந்திலைவேதமுணர்ந்தேயுங்
கன்றிவெகுண்டனர்கண்டனராங்கவர்கண்முன்னே
யின்றுவினோதவினைத்தொழிலாற்றுதுமென்றென்றே
பின்றவழுஞ்சடையானருளான்மழைபெய்வித்தார். (கச)

செங்கதிர்வெம்மைதணித்துநிழற்புவிசேர்வித்தா
ரங்கலரற்றுழிநன்புனலாற்றிலழைப்பித்தார்
சங்கரர்கோயிலடைத்தமணிக்கடைதானீங்கப்
பொங்குமிசைத்தமிழ்பாடினராடினர்பூசித்தார். (கரு)

ஆணிலையாரடியாரடிதாழ்வரருச்சிப்பார்
காணிலையாயகடிக்கணமோடுகளிப்பாரா
ஞணிலமுந்திரிவார்பிரிவார்குறணற்பூதம்
வானினெருங்குநிழற்குடைதாங்கவருப்பாரால். (கசு)

வரைகளுநாலிருதிசைகளுமேலையவானூடும்
விரவுவரோரிமையளவினுண்மேதினிமீள்வார்தற்
பரசிவயோகினர்தமையுணர்பான்மையர்படிமீதி
னுரவியராமிவர்பெருமையையார்பிறிதோர்வாரே. (கஎ

வீறுமுளப்பரிவார்சிலர்நன்னர்வினைத்தானுஞ்
சீறுசினத்தினராய்ச்சிலரின்னறிழைத்தானு
ம்றிலருந்தவரின்பிதுதுன்பிதுவென்றெண்ணார்
பேறுபெறும்படியாருயிருக்கருள்பெய்வாரால். (கஅ)

வேறு.

உற்றநற்றவப்பெற்றியாரிவ்வாறொழுகுநாட்சிவசினகரங் கடற், சுற்றுமண்டலங்கண்டிறைஞ்சுவான்றுணிவுகொண்டருளீயுமன்பரைப், பற்றிமுற்றுமான்பொருனையந்துறைப்பன்றிமால்வரையொன்றுகோயிலும், பெற்றகொங்கின்மீதுளதலன்களும்பீடுசேர்குடநாடும்போற்றியே. (க௯)

விஞ்சுகன்னடந்துளுவமாகதம்விசாலைகோசிகங்கோசலந்திக, முருந்தைசவந்திசாளக்கிராமமாளுவங்கரேசியாரியமராட்டரு, ளிஞ்சிசூழ்குருக்கேத்திரம்மிலாடம்மயோத்தியேமாங்கதம்பொழின், மஞ்சுசேர்கவுடதேசம்பல்லவம்மத்திமம்முதனுற்றதேயமும். (உ0)

நெடிமுழங்குகான்மிடைதடங்களுநீர்வறந்தவெம்பாலையுந்திறற், கடிமுழங்குகான்யாறுங்கூர்பரற்கடறுங்கல்லணைக்குகைகளுந்தடித், திடிமுழங்கிவீழடவியுந்திரிந்திகல்விலங்கினுடுறைவிலங்கெனும், படிமுழங்குகேசரிவிளங்குவெம்பழுவமும்புனலொழுகுகுன்றமும். (உக)

சென்றுசென்றருந்தவமுனுற்றியுந்தேவராலயம்பூவர்தூ
வியுந், துன்றுமாமுனித்தொகையினெய்தியுந்தூயநன்னதித்து
றைகளாடியுங், குன்றவில்லிகேதாரங்கங்கைசூழ்குலவுகாசிகா
ளத்திகாஞ்சியு, மின்றருந்திருவருணையும்பிறமேயகோயிலும்
போயிறைஞ்சியே. (௨௨)

புலிபதஞ்சலிபுரிதலன்றிருப்பொருவின்மாதவம்புரிதலன்
புனன், மலியுநாட்டிற்பிறதலன்களும்மன்னிமீனவன்கன்னி
நாடுறீஇப், பொலியுமாலவாய்ச்சேதுவும்முதற்புங்கவன்றல
மெங்குமேத்திநீ, ரொலிதருந்திரைப்பொருனையந்துறையோத
ருங்குருகூரைமேவினார். (௨௩)

வேறு.

அங்குறைபைந்துளபமுகிலடியார்பாற்கனவிடைச்சென்
றிங்கடைந்தார்சிவயோகரெனப்பாகவதர்குழுமித்
தங்களிலோர்க்கெதிர்ந்தவரைத்தாழ்தலுமுண்மகிழ்ந்திவ்வூர்
வெங்கண்ணுமலியுஞ்சுவர்க்கமேவுகவென்றருள்புரிந்து. (௨௪)

பனவர்திகழ்பதியதனையொருவிவரைபகவெறிந்த
சினவுவடிவேற்குழகன்செந்திலைவந்தனையாற்றிக்
கனைகடற்றென்குமரிமரீஇக்கன்னிகைதீர்த்தங்குடைந்து
சுனைவயற்சுசீந்திரமுந்தொழுதுபதிதொறுமிறைஞ்சி. (௨௫)

ஊழ்படுதெண்கடலெனமீடொலிபடுதாம்பிரபன்னி
சூழ்கரைகாதவமென்னத்தோன்றியபொற்சுடிகைமணி
பேழ்நிலைக்கோபுரங்காணூவிறைஞ்சியெம்பிரான்வைகி
வாழ்திருநெல்வேலியொருகுரோசமெனவலன்கொண்டே. ()

அத்தலனுத்தரமெய்தியவாசிமுகநோக்கிமலர்க்
கைத்தலனுச்சியின்முகிழ்ப்பக்கண்ணருவிசொரிந்தூரணிற்
றத்தியலைகொழித்தெறியத்தாழ்சடையார்சேவடியில்
வைத்தமனத்தினராகிவருதியெனவிளித்துநின்றார். (௨௭)

பூங்கமழ்தண்டலைநெருங்கும்பொருவில்கருவூர்த்தேவர்
பாங்கரினென்புருகநின்றுபரவசராய்விளித்திடலு
மாங்கணைந்தாரிலரெமையாளமலனடியார்பெருமை
யோங்குதிரைக்கடல்சுலவுமுலகமறிந்திடல்வேண்டி. (௨௮)

மருக்கமழ்கொன்றையன்விளிப்பவந்திலன்வந்தனையாற்றுந்
திருக்கிளரந்தணர்முதலதிருக்கூட்டஞ்செறிந்திலவாற்
சுருக்கமில்கேள்வியர்சுருங்கித்தொலைந்துவளன்கூன்பசுங்கா
யெருக்கெழுமீசனுமிலனிங்கெனச்சாபமிடுமேல்வை. (௨௧)

மழைத்தரளமணியிறைவர்கனவினடியவர்க்கெல்லா [ளீர்
மழைத்தன னெய்தின னிலையென்றருந்தவத்தோன்சபித்தன
தழைத்திடவம்மின்களெனச்சாற்றியருள்பொழிகுழைபாய்
மழைக்கணுமையொடுங்காட்சிவழங்கினார்மழவிடைமேல். ()

வேறு.

விடையேறிகரிதழிபாகவிமலனேபோற்றிமேலை
யும்பனேபோற்றியண்டருறுதுயர்தணிக்குமெண்ணகை
யம்பராபோற்றியாடலங்கம்பையாற்றில்வைகு
கம்பனேதிருநெல்வேலிநாதனேபோற்றிபோற்றி. (௩௧)

போற்றியென்றிசைப்பவண்ணல்புரிவரநல்கிவிண்மீ
தேற்றின்மேலிகலுமேல்வைபுரியுளார்யாருமென்னற்
றேற்றியகனவுதம்மிற்றுகளறத்தெரிந்துவேதஞ்
சாற்றியகருவூர்த்தேவர்தம்முழிச்சார்ந்துமொய்த்தார். (௩௨)

மொய்த்தவரெதிர்காலுச்சிமுகிழ்த்தகையினராய்நிற்ப
மெய்த்தவரன்றேயென்னற்கனவிடைவிமலர்சொற்ற
சித்தரன்றோவிம்மூதூர்திளைத்தமாதவந்தானன்றோ
வித்தினையிறைவற்போற்றவருகவென்றிசைக்குமேல்வை. (௩௩)

அத்தரமுழுவர்த்தேவரார்த்தெழப்பானுகம்ப
னத்தரவொலியுங்கேளாநடுக்குளத்தினராய்நாடி
யித்தரவணிந்தோர்சித்தரிடத்தெழுந்தருளிமீளச்
சித்தரவிடையிற்போகின்றாரெனத்தொழுதுநின்றார். (௩௪)

தொழுதுநின்றாரெல்லாருந்துணைவிளக்கெரிகட்பேழ்வாய்க்
கழுதுநின்றார்வெங்கானிற்குனிப்பவற்கருதிநெஞ்ச
மிழுதுநின்றாரவெய்யிற்குருகுமாறிரங்கிவிம்மி
யழுதுநின்றாரைக்காணாவதிசயித்தேத்தினார்கள். (௩௫)

ஏத்தநான்முகன்மால்போற்றுமீசர்சீருறுமன்றத்துக்
கூத்தனாருடன்போமின்களெனத்திருக்கூட்டம்யாவுந்
தீர்த்தநீயறைந்தசாபந்தீர்த்தியென்றிரப்பச்சித்தர்
பூத்தருண்முறுவலோடும்புகன்றனரிந்தமாற்றம். (௩௬)

செப்பருந்திருநெல்வேலிச்செல்வர்வீற்றிருப்பநோன்பி
னொப்பருமுனிவீர்நீவிரொருங்குறவிளங்கிவைக
விப்பதிக்கிடருமுண்டோவின்றியாமிசைத்தசாப
மப்பொழுதகன்றுபோயிற்றருளொடும்வாழ்மினென்றார். (௩௭)

என்றவர்க்கருள்வழங்கியகன்றிருகுரோசமென்னச்
சென்றனர்குடபாலாங்கோர்திப்பியலிங்கங்காணு
நின்றெதிர்தழுவிக்கொள்ளக்குழைந்ததுநெடுவானும்பர்
துன்றலர்பெய்தார்வேதந்துதித்தனமுனிவரார்த்தார். (௩௮)

இருக்குமற்றவரைப்போற்றித்தணந்துமேற்கொருகுரோச
முரைக்கருந்தவத்தர்சந்தக்குறடுமொள்ளிணருடைக்காடும்
வரைக்கதிர்மணியுமுந்திவருபுனற்பொருநைவாசத்
திரைக்கரநீட்டுந்தீரத்திருப்புடைமருதூர்சேர்ந்தார். (௩௯)

ஆனதொல்பதியிலாருமருச்சுனநீழன்மேவி
மோனமாமுனிவரோதுமுதுமறைச்சுரும்பர்மூச
ஞானவானந்தத்தேன்றுக்கமழ்நாறும்பூவே
மீனவல்வினைகடீர்க்குமிறைவனேயெனவிளித்தார். (௪௰)

வேறு.

படியின்மாதவத்தோர்சித்தனார்விளிப்பப்பார்விசும்போடிய ங்காணு, நெடியமாலயனுமதிசயித்திரங்கநிருமலனொருமதியிலை ச்சுஞ், சடிலநீண்மௌலிசாய்த்துநின்றோலவோலவென்றனரு ளஞ்சாயா, வடியவர்பரிவுமாண்டவரருளுமவர்களேயன்றியார றிவார். (௪௧)

புனிற்றிளங்கன்றுவிளிப்புழித்தரியாதிரங்கிமுன்பொழிந் றுந்தீம்பாற், றனிப்பெருஞ்சுரபியளிக்குவானனுருந்தன்மை போற்றவளவாண்முறுவற், கனித்துவரிதழிபங்கனார்காட்சியுத வலுங்கண்கணீரருவி,பனித்துளம்புளகித்துடல்விதிர்விதிர்த்து ப்பரவசச்சலதியுட்படிந்தார். (௪௨)

ஆடினார்கரங்கள்கொட்டினாரழுதாரகங்குழைந்தார்புலப்ப
கையைச், சாடினார்தளர்ந்தார்தழுதழுதழுத்துச்சாற்றினார்போ
ற்றினார்தமைத்தாந், தேடினார்திகைத்தார்தியங்கினார்சிரித்தார்
தெரிசித்தார்திகழ்திருவிசைப்பாப், பாடினார்பேரானந்தவா
முதம்பருகினாருருகினார்பணிந்தார். (சங)

வே று.

உமிழ்சுடர்மணியேபோற்றியுணர்வரும்பொருளேபோற்றி
திமிரமோகாஞ்சிதைத்ததினகரபோற்றிதெள்ளா
ரமுதமேபோற்றியாண்டவமலனேபோற்றிவெய்ய
தமியனேற்கிரங்கிமேனிசாய்ந்தநாயகனேபோற்றி. (சச)

நாயினேன்பாசநூறுநாதனேபோற்றிநெஞ்சங் [னு
கோயில்கொண்டிருந்தாய் போற்றிகுணங்கலந் தென்னையென்
ளாயுமாறுனைப்போற்றியத்தனுமாகியீன்ற
தாயுமாயளித்தாய்போற்றிசாய்ந்தநாயகனேபோற்றி. (சரு)

எங்கணுற்றுயென்றுள்ளமிருக்குநிற்பெறுதவென்னை
யங்கையாமலகம்போல்வந்தாண்டவங்கணனேபோற்றி
பொங்கழலுருவபோற்றிபுடைமருதூரபோற்றி
சங்கவெண்குழையாய்போற்றிசாய்ந்தநாயகனேபோற்றி. ()

கடவுளேபோற்றியென்றுட்கனிந்துநெக்குருகுங்காலை
யடல்விடைக்காட்சிநல்கியடியிணைமுடிமேற்சேர்த்தி
யிடவியகருவூர்தன்னில்வருதியென்றிசைத்துமேலோன்
மடமயிலனமென்சாய லுமையொடுமறைந்தான்வானில். (சஎ)

குறைமதிமிலைந்தவேணிக்குமிமுத்தலைவேற்செங்கை
யிறையவர்மறையுங்காறுமறையவரிறைஞ்சியப்பாற்
கறையடிப்புழைக்கைநால்வாய்க்கலுழ்மதக்களிநல்யானை
முறையெனவிடங்கர்க்காய்ந்தமுராரிதனிருக்கைசார்ந்தார். ()

ஆண்டெழுந்தருளிவைகுமமலர்மூன்றீசர்ப்போற்றி
நீண்டவனேடற்கொண்ணுநிமலனேயெனவிளிப்ப
மாண்டருமணத்தோய்வந்தாம்வழங்குதுமென்னைவேண்டிற்
றீண்டறைகெனத்திந்தேறலிதுபொழுதருளுகென்றார். (சகூ)

புறநகர்க்காவலாற்றும்பொங்கழற்சூலிதன்னை
யறநிலைபிறழாயோகிக்காய்பிழியளித்தியென்னப்
பிறைநுதற்கன்னிநல்கிப்பெயர்ந்தனளவள்கோட்டத்தி
னுறைசிலகருமயோகருற்றனர்சித்தர்தம்பால். (ருo)

மற்றவரிறைஞ்சிநிற்பவம்மின்கணீவிர்செஞ்சே
லுற்றமந்திரத்துக்கேற்பக்கொணர்மினென்றுரைப்பமாடே
சுற்றினர்நேடிக்காணார்சூட்சியென்றுணர்ந்தியாரு
மிற்றைநாளிதுபோழ்தையகிடைத்திலதிசைத்ததென்றார். ()

என்றவர்கவலித்துட்கவேய்ந்துசிற்றிலைகடெற்று
நின்றதோர்வன்னிதன்னைநீதருகென்றபோழ்தின்
மின்றருவானம்பூத்தமீனிலனிழிதலேய்ப்ப
வன்றளித்ததியார்மேலோர்கருத்தினையளவுகாண்பார். (ருஉ)

நேடினேனென்றாரஞ்சியெஞ்சிநெஞ்சயர்ந்துமேனி
வாடிநீடுயிர்ப்பநோக்கிவாமிகாளிதனையாற்ற
நாடினீர்முயலவிரங்கனன்னெறிற்றிகழ்ந்துபொய்ம்மை
மூடினீர்முடனீக்கிமுத்திசாதிப்பீரென்றார். (ருங)

எச்சமயத்திலுற்றுமெத்தவமிழைப்பினுந்தா
னச்சமயங்களின்பதுன்பினையருத்துவிக்கும்
பொய்ச்சமயங்கணீத்துப்போதகர்க்காளாய்ச்சைவ
மெய்ச்சமயத்தினிற்றல்வீட்டின்பமிசைதறிண்ணம். (ருச)

பின்னலங்கனிந்தென்கானிற்பிறங்கலிற்றிரிந்தென்றேய
முன்னலம்வந்தெனீரின்மூழ்கியென்முளரிமேனின்
றென்னலங்கிளருந்தொன்மையிருக்குடனிருக்கும்வேதச்
சொன்னலங்கிடைத்துஞானச்சுகோதயந்திளைத்திடாரே. ()

மாதர்பூண்முலைமுயங்கிவாழிலென்வாய்மைகுன்றி
யேதமூர்புழிகளாற்றிலென்கலைவழுவிலென்
சீதரன்முதலினோர்தாந்தேருதற்கரியதேவன்
பாதமாருயிருட்பார்க்கும்பான்மைகூர்மென்மையோரே. ()

மன்றிவைசிவயோகீசரிசைத்தலுங்கருமயோகர்
சென்றடிதாழ்ந்தியாங்களிழைத்ததீத்திறனியாவும்
பொன்றநீயளித்தியென்னப்போகின்றும்பொதியவெற்பின்
மன்றநீர்வருதியென்றுவழங்கியோர்மருங்கிற்சார்ந்தார். (ருஎ)

ஆங்கறிதுயில்கூர்மாலைவிளிப்பவந்திலன்மாலன்பர்
வெங்களியுளத்தரானாரென்றுளம்வெகுண்டியோகர்
செங்கணன்பூசைதீர்கவிளைபுலன்சிதைகவாண்டு
தங்கினர்மெலிகவென்னச்சபித்தொருபுலத்தைச்சார்ந்தார். ( )

அற்றைநாடொடங்கியவ்வூர்வளர்ந்தொலைந்தந்தணாளர்
சுற்றமும்பொன்றிமாயன்பூசையுந்துறந்ததென்றாற்
கற்றைவார்சடையெம்மண்ணல்கனைகழற்கமலபாதம்
பற்றினோர்பெருமையெம்மாற்பகர்ந்திடும்படிமைத்தாமோ. ( )

மதிபலபரவிவானோர்பணிதிரிகூடவெற்பிற்
கதிதிகழ்குற்றாலத்தெங்கண்ணுதல்கமலத்தாளிற்
றுதிதருதிருவிசைப்பாச்சொற்றனரருவிதூங்கு
நதிவருபொதியமீதுநணுகினார்நுணுகுநூலார். (சுo)

குடங்கையினடக்கிநீரைக்குடித்துமிழ்கடத்திலோங்கு
மடங்கலைவணங்கிவேங்கைமதகரிதிரிதண்சார
லிடங்களினுறைவர்தம்மாட்டிருந்தடைந்தோரைவாழ்வித்
தடங்கியங்கமர்ந்தாரிப்பாலடுத்தவாறெடுத்துரைப்பாம். (சுக)

வேறு.

தேவர்பிரான்புனைகங்கைசிவணியதீம்புனனாட்டின்
மேவருதொல்சீர்வாவிவிளங்குதஞ்சைமூதூரிற்
பூவலயம்பொறுத்தபுயப்புலிக்கொடிமேருவிற்பொறித்த
காவலனோர்குறிநிறுவக்கருதியுளந்தனைவலித்தான். (சுஉ)

நேமிநெடுவரைநிவந்தநிறைமணிமாமதிள்கோலிப்
பூமியினெண்டிசைநிலைத்தபொருப்பெனக்கோபுரநிறுத்திக்
கோமிளிர்பொற்கிரியெனப்பொற்கோயில்வகுத்தேமகிரி
யாமிதெனவோர்குவிர்தாங்கமைத்தொருமாமணிச்சிகரம். (சுங)

ஆயசதுமாமறைதொல்லாகமநூலருளியவா
றேயவொளிர்சிவலிங்கமிழைத்துமற்றுவுடையாண்
மேயவிருநான்காகவிளம்புமருந்தவையொருங்கத்
தோயமதித்தாதிசைவர்க்கொடுதொகுமாறியற்றுவித்தான். ()

பாகுவரவிளைத்தமருந்திளகியதுபற்றுமை
யேகுழிநேரியர்க்கிறைவன்யாதுகுறையெனக்கவலித்
தாகுதியாரழல்வேள்வியாற்றுவித்துமந்தணர்க்கும்
யோகுறுமாமுனிவருக்குமூட்டியரும்பொருளளித்தும். (௬௫)

பந்தியாதிளகமனம்பருவரலுற்றுழையரைக்கூஇ
யுந்துமாரணியமுங்கண்முழையுமுறுவோர்க்குறுகி
முந்தியாமழைத்துமெனமொழிந்தவர்க்கொண்டணையுமெனச்
சந்தியாவருந்தவரைக்கொணர்ந்தார்கடணந்தோரே. (௬௬)

பொருந்தியசித்தரைநுணியபோதகரைமாதவரைப்
பருந்திலைவேற்குரிசிலெதிர்பணிந்துகுறைதீருமென்றான்
மருந்துமணிமந்திரங்கொண்டமைத்தனர்கைவாராமை
யருந்தவருஞ்சலித்திருந்தாரரசனுமஞ்சலித்துநின்றான். (௬௭)

வேறு.

யாவருந்துணிவுற்றெவன்கொலியற்றுமாறெனுமெல்லையிற்
றேவரும்புகழ்மாதவன்கருவூர்வருஞ்சிவயோகிவந்
தோவறப்பரிவோடுஞற்றினலாதுறுதெனுமோசையான்
மேவருந்திருவாக்கெழுந்துவிசும்பின்மீளமறைந்ததே. (௬௮)

மாகநாதமெழுந்தபோதனரஞ்சினர்வளவன்சிவ
யோகநாதனிருக்கையாண்டுளதோதுமாதவிரென்றலும்
போகநாதனுருக்கரந்தொருபுடையடும்படைகொண்டுநின்
றேகநாதனியம்புமன்பனையிக்கணத்திவணுய்க்குதும். (௬௯)

எனநகைத்திடுமுனைவருந்திறலிறைவனுங்கவலுறமனங்
கனைகுரற்கருமேனிவீறியகாரியின்சிறுகாலிடைத்
துனைவினீர்வருகென்றொரோலைதுவக்கியேகவிடுப்பவே
யனையதச்சிறுவரைதனிற்பொதியாசலத்தையணைந்தரோ. ()

முன்னரிற்படர்காரிகாலின்முடங்கலைக்கையடங்கவே
ன்னரிற்றெழுதார்பிணிப்பைநெகிழ்த்துநன்கொடிநாடினர்
ன்னெறித்தமியேனையோர்பொருளாய்நினைந்தனரோவெனாத்
தன்னிகர்த்தவரொல்லையக்கணம்வந்துசார்ந்தனர்தஞ்சையே. ()

புத்துருக்கொடணைந்ததுந்தனிப்போகநாதசுவாமிதன்
சித்துருக்கொடெழுந்ததுங்கருவூரர்வந்துசெறிந்தது
மத்திறத்தினிகழ்ந்ததுஞ்சிலராலறிந்தடலரசனும்
பத்திகூரவெதிர்ந்துவந்தனையாற்றினன்பகர்கின்றனன். (௭௨)

அணுவுமேருவெனச்சிலம்புமொரணுவெனப்பரகாயமு
நணுகுநாயகநீயெனைப்பொருளாய்நடித்தனையென்னெனாத்
தணிவிலாவருளுடையையாலிதுதானியற்றினமென்றுநற்
பணியசித்தரிணிலைபெறுஞ்சிவபோகநாதனுரைத்தனன். (௭௩)

அனையகாலையிலபயன்மீள்வுமடியில்வீழ்வுறுமளவிலன்
னினைவறிந்திருள்கருமமாயையுநீத்தவன்றனைநோர்ந்துநந்
தனையனுயினுமெமர்களிற்றலையாயவன்சிவயோகிநீ
யுனைவிளித்ததுமிதினிமித்தமுளுற்றுவாய்குறியொண்மையின்.

அந்தவாய்மைமனக்கொளாவபயன்குயிற்றுபொனலயஞ்
சிந்தையாதரமுற்றணைந்தனர்சென்றபோதவணின்றுளார்
முந்தையோர்தவசித்தர்மொய்த்துமுடிக்கொளுதகைமுற்றுவா
ரிந்தவேதியராமிதற்புதமறிதுமென்றுடனெய்தினர். (௭௫)

மாமலைத்தலையதகமுலிமணிக்குழாமல்செய்க்குடந்
தாமகாறியகுண்டமங்கிசுருக்கினேடுசெரூபமுந்
தாமமுஞ்சிதருப்பைகுண்டிகைதண்மெண்டலவேதிகை
யோமமார்திரவியமுமாயிடையுளதெரிந்திளநகைசெய்தே. ()

பெருமைகூர்கருவூரராவுடையாள்பிறங்குமிலிங்கமென்
றிருமைகூரிடனெய்தியேயிவைவிந்துநாதமெனத்தெளிந்
தொருமைகூர்தருபாவகத்தினுறைத்துவாயுமிழ்தம்பலை
யருமைகூர்விடருமெய்தனரதிசயித்தனருலகெலாம். (௭௭)

உம்பருந்துணர்மாரிபெய்தனரோடைவைத்தழலூடெழுஞ்
செம்பொனுயிரமாற்றெனப்புரை சென்றுபற்றியதமிழுவாய்த்
தம்பலின்னணமேயெனிற்றனிமாமுதற்பொருளாய்விளங்
கெம்பிரானருளன்பர்தஞ்செயல்யாவரேயறிவார்களே. (எஅ)

வேறு.

மாசறுமுனிவர்வணங்கினர்மாதவரிதனைவியந்தன
ராசறுமறுதொழிலந்தணராரணமறைகளறைந்தனர்
தேசவிர்திசைதிசைவந்தவர்தேர்மணிமறுகுநிகழ்ந்தனர்
காசணிபணிகனகந்துகில்காவலன்முன்றயில்வழங்கினன். (எக)

மங்கலமுழுதுமுழங்கினமங்கையர்நடனமுயன்றனர்
சங்கரனடியர்குவிந்தனர்தண்டமிழ்க்கவிஞர்திரண்டன
ரிங்கிதுபுதுமைபுரிந்தவரெங்குளரெனவெதிர்கொண்டன
ரங்கவரடியிலிறைஞ்சினரன்புடையுவகைமலிந்தனர். (அ0)

நிருமலவசலவகண்டிதநிகழ்குணநிலைவிளிருந்தவர்
கருவருமசரசரந்தருகரபுரமுறைமறையந்தண
ரிருபதமெளலிபுனைந்தொளிரிரவிதொல்குலபதியன்புட
னருள்பெறுமொழிகள்புகன்றனரயலுளபதியிலகன்றனர். ()

யானைவணங்கியகாவையுமேனையவண்பதியாவையு
மானநறுந்துணரானுளமாரவிறைஞ்சினர்காவிரி
வாறெலிகொண்டிருபாலுறமாயவர்கண்படைகூர்திரு
ஞானவரங்கமெனுன்மறைநாடுதலந்தனைமேவினர். (அஉ)

அங்கவர்சென்றணைபோதுபொன்னம்புயமென்கொடிபோ
மங்கையெதிர்ந்திருபார்வைவழங்கிமயங்கினள்வேறிய [லொரு
ரிங்கிவரைங்கணைமாரனுமின்புறுநன்கெழுமேனியர்
நங்கடவந்தெரியாதினிநண்புபுரிந்திடுவோமெண. (அங)

வேறு.

அந்தணிரெவ்வூரிர்நுமரார்தொடர்பிங்கெழுந்தருளி
வந்ததெவனரங்கர்தமைவணங்குதுமென்றணைந்தீரோ
சிந்தைவிழைந்தனதமியேன்றெரியுமாற்றுண்மினெனப்
பைந்தொடிகையான்மலர்க்கைபற்றினளிற்கொடுபுக்காள். ()

புக்கபுனைபிழைவழியிலொழுகுவார்போலொழுகி
நக்கமனத்தினராகிநறியமலரமளியின்மேற்
றொக்கனர்பூண்முலைப்போகந்துய்த்தனர்சட்குணந்திளைக்கத்
தக்கவொருசுகானுபவந்தணப்பில்லாத்தவமிக்கார். (அரு)

தெரிவையொடுமிரண்டுகோட்செறியுமலரமளியின்கண்
மருவியிருந்தவர்மறைந்தார்வனிதைதனிகனிபெருகி
வெருவினளாயிடைநேடிமெலிந்தனள்விம்மினளில்ல
மொருவிமணிமறுகுதொறுமுழிதரலுற்றுறையுள்வைகி. (அசு)

பூங்கணைவில்வளையாழிபொருவிலறுமுகமுடற்கண்
டாங்கரந்தவேளோதாமோதரனேதனிவேற்கைக்
காங்கெயனேவமரர்பதிகாவலனேவேதியன்போ
லீங்கணுகியெனதுயிர்கொண்டிடையிருளிலகன்றனே. ()

மாயமோகனவோதொல்வல்வினையின்மதிமயக்கோ
நேயமோடணைந்ததும்பின்னீத்ததுவும்பொய்யேயோ
காயமோதரிக்ககிலேன்காண்பதுமற்றுளதோவென்
றயமோகானலின்வெப்பாலயர்ந்தாளதுபோழ்தின். (அஅ)

கரந்தரவெண்டிரைகொழிக்குங்காவிரியாற்றிடைத்துயிலும்
பரந்தாமன்றிருமுன்றிற்படர்ந்தரங்கவெனவிளிப்பச்
சுரந்தான்கேட்புழித்தோன்றித்தொழுகுலத்தோயிதுபோழ்தி
னிரந்தாரவேண்டியதென்னிகழ்த்துதியென்றனடியோன்.

சீதரநின்றிருமார்பத்திகழுமணிப்பூணார
நீதரல்செய்குதியென்றனிகழ்த்துதரையஞ்செவிப்புகுமுன்
னுதரமுட்கொடுகொடுப்பவாங்கியலர்சுணங்கலர்பொற்
பூதரமாநகில்சுமந்தபொலன்கொடிமாளிகைபுக்கார். (கூ0)

கண்டனளெங்குற்றீரிக்கணையிருளினிடையெனவுட்
கொண்டவுவகையளானுள்கூப்பியகோகனகமலர்
விண்டலரமிளிர்மணிப்பூண்விண்மணிவீசினரேந்தித்
தண்டாளநகிலவரைதமிலுதிப்பித்தாடயங்க. (கூக)

பஞ்சாயநூபுரத்தாட்பணியாயகிதம்பமதிப்
பிஞ்சாயநுதற்கூந்தற்பிடியாயநடைமஞ்ஞை
யஞ்சாயலணங்கேயித்தினம்போல்வந்தடுத்தெமைநீ
னெஞ்சாயவருதுமெனநிகழ்த்தியெழுந்தருளினார். (கூ௨)

தென்பராய்த்துறைபடிந்துதிருவீங்கோய்மலைபோற்றி
யன்பராய்மாணிக்கவசலத்தையஞ்சலித்து
முன்பராய்த்திருக்கடம்பந்துறைமூழ்கிமுயன்றேத்திப்
பொன்பராய்த்தொழுந்திருமுக்கூடலையுந்தொழுதிறைஞ்சி. ()

ஆதிபுரந்தனிற்போகியலங்காரவதிவனிதை
பாதிபுரந்தருளவருள்பசுபதிநாதன்பசும்பொற்
சோதிபுரந்தெறுமுறுவற்சுகோதயன்மாதவன்சுருதி
யாதிபுரந்தரன்போற்றுமொருவனிருதாள்வணங்கி. (கூச)

ஏந்தமிழின்றிருவிசைப்பாத்திருவுள்ளமதுநூங்க
வாய்ந்தமிர்தமெனச்செவிகட்கருத்தியிருந்தனரிப்பால்
வாய்ந்தமுதாசனர்போற்றுமணிவண்ணன்றுயிலரங்க
மேய்ந்தமிர்தமொழியிடையூறிரித்தவாறியம்புவாம். (கூரு)

போர்புரிவேளிற்கலவிபுரிந்துபரிந்தருள்சுரந்து
பேர்குவர்வீழ்குவர்மம்மர்பெருக்குவார்பெயர்ப்பரா
லோர்கிசியிற்புதுமையொன்றேவொருகோடிவிதம்பயில்வார்
யார்கொலெனத்தேர்ந்தணங்குமிருந்தனள்வைகறைகாறும். ()

காய்புலத்தார்சிவபோகங்கவர்ந்தகருவூர்த்தேவர்
தேய்சிறுவெண்பிறைக்கோட்டுச்சிலைமல்வாணுதற்களித்த
வாய்பசும்பொனணிஞெப்பணைமைத்தசெழுஞ்சுடர்மணிபோற்
பாய்புரவிக்கொடிநெடுந்தேர்ப்பருதியுங்கீழ்பாலெழுந்தான். ()

புலரியெனப்பாகவதர்பொன்னிநதித்துறைபடிந்து
குலவுசினகரம்போகிக்குயிற்றுமணிக்கடைநீக்கிச்
சலசமலர்த்திருமுயங்குந்தடமார்பிற்கிடந்தபெருங்
கலனவையிற்பேராரங்காணுமேகவலுற்றார். (கூஅ)

குருமணிவான்குடும்நெடுங்கோபுரவாயிலிற்குழுமிச்
செருமிநெருனலிற்கதவந்திளைத்தமணிக்காப்பிருப்பப
பொருவருமுட்காவல்புறக்காவல்புரிவோர்போர்ப்ப
வொருவனணியிழைபோயதெவன்கொலெனவோருங்கால். ()

சித்தருதவியமணிப்பூண்டிகழுதயகிரியுதித்த
மொய்த்தகதிரவன்பொருவமுலைமுகட்டிற்கிடந்திமைப்பத்
தொத்தலர்மென்குழற்றெரிவைசுதைமாடத்திருந்தமுத்தக்
கொத்துநிரைமறுகணைந்தாள்கோகனகத்திருமகள்போல். ()

அணைந்தவணங்கின்னகலத்தவிர்மணிப்பூணணிகாணு
நிணங்கொள்வடிவேற்கண்ணாய்நினக்கிதியார்கொடுத்தனரென்
றுணங்கவளைத்துறுதண்டமுஞற்றுவார்சிலர்கொடுபோய்ப்
பணங்கொளணையான்கோயிற்பாகவதர்பாலுய்த்தார். (கoக)

உய்த்தலுமத்தலையுற்றோரொளிவளைநல்லாயுனது
கைத்தலத்திலிதுவருமாகழறுகெனநெருநலிற்றோர்
மெய்த்தவவேதியன்றமியேற்குதவிவியன்முலைப்போகந்
துய்த்தனனல்லிருளிலின்னுமணையுமெனச்சொற்றனளால். (

சொற்றலுமிச்சுடர்த்தொடிபொற்சுதைமாடப்புறக்காவ
லுற்றுறைமினரையாமத்தொருசோரனவணெய்தும்
பற்றியவனுய்க்குதிரென்றலும்பதிகாவலர்போகி
மற்றையவட்பொதிந்துவைகுமாளிகைச்சூழலிற்பெயர்ந்தார்.

மங்கையுழியருந்தவத்தோர்வழங்குமணியிழைவனப்பை
யங்கெழுந்துபார்த்துப்பார்த்தகல்விசும்புமுகட்டிடைநின
றிங்குவமைக்காற்றாயிரிதல்போற்குடதிசையிற் [தான்.
செங்கதிரைச்சுருக்கிவெய்யோன்றிரைக்கடலிற்சென்றொளித்

சிவசித்தர்திருவிசைப்பாச்சிவணவெழுந்ததுசெக்க
ரவரைவிழிக்கணம்படைத்தன்றகல்விசும்புநோக்குதல்போற்
றவழ்தாராகணங்களெழுந்தனபோயச்சையத்திற்
றுவளுமஞருறமுளத்திற்றுறுமியதுகருங்கங்குல். (கoரு)

வந்ததுபேரிருளின்னும்வந்திலர்வேதியர்வந்தான்
முந்துறுதண்டம்புரிந்துமுருக்குவரேமுருக்காமே
யந்தமின்மாநிதிகொடுத்துமளிக்குதுமென்றலர்முலையாள்
சிந்தைகவலுறக்கருவூர்த்தேவர்திருவுளத்துணர்ந்தார். (௧0௬)

செறிந்தமழவிடைப்பாகர்திருவத்தயாமத்தி
லறிந்தனராங்கிலிபிறழாதணியரங்கடணைந்துகடை
யெறிந்துகுழைமுகந்தடவியிகலியரிபரந்துகுமிழ்
மறிந்துமதர்மதத்தபிணைமறிநோக்கிமனைபுக்கார். (௧0௭)

புகுந்ததுகாணுவரிவைபோற்றியமளியிற்சேர்த்தி
மிகுந்தவவேதியர்நீவிரளித்தமணிமிளிரார [யுக்
முகுந்தனணியிழைகொணர்ந்தோர்த்தருதியென முனிந்தெனை
தொகுந்தறுகணாளர்குழீஇத்தொக்கனரிற்செறிதென்றாள். ()

என்றவுரைகேளாவந்தெழின்மாடம்புகுந்துபுலன்
வெனறவரைத்தண்டத்தார்வளைந்தனர்வீங்கிருளிரிந்தாற்
சென்றணைதுஞ்சினகரமெனறிருந்தனர்செங்கதிரப்புத்தே
ளன்றைவிநோதம்புவியிலறிவிப்பான்போலெழுந்தான் (௧0௯)

அக்காலைத்தண்டத்தாருமுனிவற்கொடுமேறுகிற்
புக்காரவகனையுமயற்போயினளப்புரியுறைவோர்
மைக்கார்மேனியன்கலனைவவ்வினோற்காண்டுமெனத்
தொக்கார்தத்தமகசேற்றவாபுகலததுணிநதாரால். (௧௧0)

வேறு.

இவனோவரங்கர்திருமணிமார்பிருந்தவணியிழைசோர்வு கொண்டகரவோ, னிவனோநெடுங்கணிளமுலையாரணங்கனைய விவளோடிணங்குபடிறோ, னிவனோவனங்கனெழில்கவர்காளை மங்கையரிலெவர்காதல்கொண்டுதொடரா, ரிவனோதெளிந்தகர வடனாகுமென்பர்சிலரிவன்யோகியென்பர்சிலரே. (௧௧௧)

வேதியர்குலக்குரிசிலோவலதுசேணில்வருவீணைவிஞ்சைக் கிழவனோ, மாதிரக்கிழவர்தமிலொருவனோவரியமுனிவரிலுரிய விரதியேயோ, வாதியரியுருவங்கரந்துவிளையாடலோவலதுசி த்தேசனிவனோ, வேதிலனொருத்தனுருவம்பலவெடுத்துநடைவி லவனென்றிடுவர்சிலரே. (௧௧௨)

காலங்கண்மூன்றும்வென்றவனென்பர்சிலரொளிற்கரவு
கொண்டிரவிலினிய, பாலின்சொலார்காமநுகர்வனேவென்பர்
சிலர்பற்றுமற்றற்றபடிவன், சீலன்தனைப்படியிலெப்படிதெரித்
திடுதல்செப்பவரிதென்பர்சிலபே, ரேலரிற்காணடொறுமிழும்
பூதிழைக்குமனம்யாரைநீயென்பர்சிலரே. (ககங)

அந்தோவிவன்புவியளந்தோனிவர்ந்தமணியாரங்கவர்ந்திவ்
வூரிற், பைந்தோகைதன்பால்வழங்கிப்புணர்ந்துமறுகாளுமிப்பா
வைமனையில், வந்தோனெனிற்கரவுகொண்டோனலன்சதும
றைக்குலமுதித்தவனலோன், மூந்நூழுடுங்களிறுரித்தவர்க்கடிய
னினிமுடியுமவனென்பர்சிலரே. (ககச)

இன்னணம்பலருமெதிரெதிர்புகுந்திருபுடையுமேற்றவு
ரைசாற்றியருகே, துன்னிநிரைநிரைதொகத்தணடத்தர்நான்ம
றைத்தூயவாதமைப்பொதிந்தே, தென்னரங்கேசதிருவாயிலி
ற்பாகவதாசெறியுமுன்றிலினுய்க்கவே, வந்நிலையிலிவரோமதா
ணிவவ்வினவரெனவாமெனக்காவலர்சொனூர். (ககரு)

வேறு.

சொன்னவாசகங்கேளாத்தொகுமவையுள்ளார்துளங்கி
யென்னைநீரிசைத்ததுமற்றிதுபுரிந்தோரிவரல்லர்
பன்னகாபரணனடியவர்பனவர்தமின்மிக்கா
ரன்னமேகரவாமேவிகழ்ந்தவாறறைதியென்றூர். (ககசு)

மறுவிலிவர்க்குளமயங்கிவலிதின்மனைகொண்டணைந்தே
னுறுமிரவிற்பிரிந்தணிதர்துடனகன்றூரிதுநிற்க
நறுமணிப்பொற்றுவைகளுளநல்குவனன்னகருடையீ
ரறுதொழிலந்தணரையென்பாலளிக்குதிரென்றனளரிவை. ()

மற்றவள்சொற்றலும்பாகவதர்புழுங்கிமனங்கொதியா
விற்றைவரையிழையாததிவனிழைத்தானெனநெருங்கிப்
பற்றுதிர்பற்றுதிரென்றேபதைப்பவர்தமைவேதங்
கற்றதொழுகுலத்தொருவன்கரனமைத்துக்கழறுவான். (ககஅ)

அந்தணரிப்பொலன்றிருவுக்களித்தமணிக்கேயூரந்
தந்தனர்யார்நுமக்கிதயங்கரவாதுசாற்றுமெனச்
சிந்தைதெளிதருகருவூர்த்தேவரிளநகையரும்பப்
புந்தியிலீர்இதிரிவலன்பொறுத்தவனல்லனென்றூர். (ககக)

எள்ளிமதியிலிர்திருமாலெமக்கணிநல்கினனெனலுந்
துள்ளியெழுந்தனரிதயந்துடித்தனர்நிந்தனையறையுங்
கள்ளியநெஞ்சினனுலகுக்கேலாமைசழறுகின்றா
னள்ளிருளிலேதியற்றானலிதுமெனநணுகலுமே. (கஉ0)

மீட்டுமறைக்கிழவனவர்தமைவிலக்கிமெய்த்தவத்தீர்
தோட்டுளபத்திருமாயன்சுடரிழைநல்கினனென்றீர்
கேட்டிடுமாறீண்டவையிற்கேசவனின்றுரைத்திடுமேல்
மீட்டுமருமுனிவரர்நீர்யாங்களுநிற்பணிதுமென்றான். (கஉக)

மட்டலம்புனைதுளபமணமுயிர்க்குந்திருவரங்கப்
பெட்டகமுள்ளுறைவேதப்பெருப்பொருளேயிருங்கலநீ
யுட்டகவுபெறவளித்ததுலகறியுமாறுவணப்
புடடகவீண்டிருவிசுமபிற்போந்துபுகலுதியென்றார். (கஉஉ)

கோமளித்தோதியவேதங்குலவுகருவூர்த்தேவர்
தாமளித்தோமறநோற்றதவத்திலுய்யாதவர்தம்பாற்
றேமளிததோடவிழ்துளபச்சிகழிகையோடணியாரம்
யாமளித்தோமெனவரங்கரிசைத்தனாவிணையிடைநிலைத்தே. ()

கொத்தேறுமலரயனுங்கோமகனுந்தாணிறைஞ்ச
நத்தேறுகரத்தரங்கர்நவிற்றிவிசும்பிடைநின்றார்
சித்தேசர்புகழ்கருவூர்த்தேவர்சகமேற்சுவாக்கப்
புத்தேளிர்கற்பகப்பைம்பூமாரிபொழியநின்றார். (கஉச)

விண்ணமரும்பசுந்துளபமிலைந்தமாதவர்தமையுந்
தண்ணமர்பாருலகில்வினோதம்பயின்மாதவர்தமையும்
பண்ணமர்தொன்மறைபாடும்பாகவதர்முதலாயோர்
மண்ணமரவீழ்ந்துமனம்வெரூஉக்கொண்டுவணங்கினார். (கஉரு)

விட்பாகசாதனனும்வேதவிரிஞ்சனும்போற்றும்
புட்பாகனணிகாட்சிபுரிந்துமறைந்துழிநெஞ்சிற்
பெட்பாகமம்பயிலும்பெருமானன்பினர்ப்பரவி
[illegible]பாகவதர்நவிற்றிமுகரயக்கிளவி, (கஉ[illegible])

குவித்தகரத்தினராயாங்குயிற்றுபெரும்பிழைபொறுத்தி
ரவித்தபுலத்தினிரென்றூர்க்காயிடையன்பளிததிசைதேர்
கவித்தலைவரவனொருவிக்கடலுலகமுதலியவுற்
பவித்தகர்ப்பபுரியிறைவற்பரவியிருந்தனர்சின்னாள். (௧௨௭)

செல்காலத்தெதிர்காலத்திறனுணர்ந்துசிவயோகம்
பல்காலமிழைத்துயிருட்பரஞ்சுடரைப்பார்த்திருப்ப
வெல்காலநெறிபிறழ்ந்தவேதியர்குழீஇயிரவி
யில்காலமிவர்வைகுமில்லுழைவந்திறுத்தனரால். (௧௨௮)

வந்தவுயர்குலத்தினரைமாணுக்கரெதிராவணங்கி
யந்தணீர்சமாதியினையடைந்துகருவூர்த்தேவர்
சிந்தையொருங்குறவெழுதுதீபமொததாரெனவயிரத்துத்
தந்தமினிந்தவையறைந்துசார்ந்தனர்வேந்துறைகோயில். (௧௨௯)

சயதரசெம்பியர்கோவேதயங்குகருவூர்த்தேவ
னுயர்குலத்திலுதித்துமிழிபுறுவாமமியற்றுகின்று
னியமமிதுபுரிகுகரை நீப்பதியல்பென்றாக்கு
மயர்வறநோற்றவர்த்தடுத்தல்வறிதென்றன்வயவேந்தன். ( )

வேதியரித்திறனிழைப்பவேதமியற்றியதுண்டே
னீதிதிறம்பினர்த்தடியுதிருபனேநிருபனென்ப
சோதியிதுசோதித்தபின்னுமனுச்சொற்றமையாற்
சாதியினுக்கேற்றபெருந்தண்டமிழைக்குதியென்றார். (௧௩௧)

தூபதரைச்சோதிப்பிற்றவவலியிற்கண்சிவந்து
சோபமிகுஞ்சாபமிடிற்றொலைக்குநர்யார்சொன்மினெனும்
பூபதியைப்பார்த்திடம்பம்போர்த்தபுறத்தொழுக்கினன்வெங்
கோபவுரையாமதுமேற்கோடுமெனக்கூறினர். (௧௩௨)

செல்வர்கருவூர்த்தேவர்சித்தாருந்தவத்தரென்னும்
பல்வினோதம்புரியும்பான்மையர்மேன்மையுரையன்மால்
வில்வவேணியர்கூடவினையாமெம்வித்தகர்சீர்
சொல்வதெதுகளவாக்குந்துகளுறன்டேயெனச்சொல்லி. (௧௩௩)

ஸ்ரீவிர்சவிற்றியுதறிதுமெனகிருபனீங்கியவை
மேவியருமறையரொடுமெய்த்தவர்வைகிடனுய்த்தே
யோவியமொத்துறங்கிவிழித்துலகவியல்புறப்பூசை
காவிமிடற்றோர்புரியுங்காலையிற்காவலனடைந்தான். (கசுச)

அடைந்தவரையனையவனையமரரையெண்ணுதருளிற்
றடைந்தமனத்தினராய்வந்தனையாற்றிமுறறியபின
மிடைந்தவர்ப்பார்த்திதுபோதினமேவியதென்னெனவிதய
முடைந்துபணிப்புறவேந்தனொடுங்கியிறைஞ்சினனுரைத்தான்.

வேறு.

மாதவமுனித்தலைவநிற்பணியவந்தனன் மறைத்தலைவர்தம்
மொடெனலுஞ், சோதனைநிமித்தமிஃதெனறுள நகைத்தருகு
தொண்டுபுரிமாணவாதமை, மேதகவிளித்தரியமாமுனிவர்தாமு
யலுமெயத்தவவொடுக்கமுநனி, யேதகமிடததுளசிறப்புமிவை
காட்டுமெனவெய்தியறிவிப்பவிறையும. (கசுசு)

ஆண்டணுகிவேண்டியவருந்தவமிருந்தவரகங்குழையவா
ற்றுகிறனுவ, காண்டகிறைகுணடிகைகரகமெழுமுதண்டுவரா
டைகலையாதனமிகப், பூணடிலகுகணடிமணிபூதிசிவபூசைபுரி
புண்ணியருநண்ணுமிடனு, மாணடகுசிவாகமபுராணமன்வகற்
றிதயம்வைப்பவரிருககைபலவும. (கசுஎ)

அங்கிவளர்குண்டமணிமண்டலமருக்கியமொடாச்சியநிறை
த்தகுடநீர், தங்குகலசங்குலவுதருதுபொதிகும்பநவதானியநறுந
றியவீத், துங்கமுறுமாபயமுதற்குசைசமித்தரிசிதூர்வையசருக்
கொடுவிரும், பைங்கனிபழக்குலைவகளாறுசுவையுண்டிமுதலாய
வைபரித்தவிடனும். (கசுஅ)

ஐங்தெனவிதித்தசிவதீக்கையுபதேசதசகாரியமையந்திரி
பறச், சிக்தைதெளிவக்திடவிஞுவிடைகொடுத்தொருவருக்கொ
ருவர்தேர்க்துபகரும், பர்தமறுமுத்தர்முதலாயவரிருக்கைகளும்
பார்த்திசைவித்துவளவ, னெக்தைதயியேன்குறைபொறுத்தரு
[illegible]தவர்சொல்வார். (கசுகூ)

வல்லியபூயர்த்தகொடிமன்னவமறைக்குலவர்வாழ்மனைக
டோறுமருவி, யொல்லைவருமென்றவரையுட்கொடுறைதானமது
ஆறுதசைதூறுபுலவும், புல்லியபுலைக்குடிலெனத்திகழ்வகண்டி
றைபொறுதவிழிசிறியிதுபோ, தெல்லிருமயற்புலனிலேகுதிரி
ருங்கிலுறுதண்டமுமினிப்பெறுவிரால். (கசo)

ஈனர்புரியித்தொழிலியற்றினரிருந்தவரையேசுமொழி
பேசிவறிதே, தானெமையவர்க்கொடுசபித்திடமனக்கவடுதங்கு
தறுகட்கொடுமையே, யானதுகிளத்தினிமறைக்குலம்விடுத்த
னிரகற்றினிரொழுக்கின்வழியே, கானிடையயிற்றினைவளிர்க்கு
திர்நுமக்குறவுகானவரெனக்கழறியே. (கசக)

நீத்தவரைநீத்தவரைநேர்ந்திருபதந்தொழுதுநீசருறைவா
சலெனவே, பூத்தைவெறிதுற்றமதுவார்த்ததடமுங்கடமுமூணு
ணவுமாயுறுதலாற், றீத்தெறுவனத்துறைகிராதரொடுசோமி
னெனவோதியவராயமொருவி, மாத்தவமடைந்தனன்மறைக்
குலமடாதினியவர்க்கெனவகுத்துரைசெய்தான். (கசஉ)

வேறு.

உரைசெய்தநிருபனைப்பார்த்தோரைந்தும்வென்றுயர்ந்தார்
கரைசெய்துமணிகொழிக்குங்காவிரிநாட்டுறைவேந்தே
திரைசெய்தகடலுலகிற்செயற்கரியதீயவினைப்
புரைசெய்தாலும்பொறையிற்பரித்தளிப்பதேபுகழாம். (கசங)

காவலன்காவாதொழியிற்காரொடுபைங்கூழறக்கும்
பூவருவேதியரோதிபொன்றுமாபயங்குன்றுந்
தேவர்சிறப்பொடுபூசைசிதையுமென்முற்சிதையாமே
யாவரையும்யாவையையுமின்றளிப்பதேயறனும். (கசச)

ஒத்தினையோதியுமறையோராயிருந்துமுபநிடதம்
பாத்துணராப்பொதுவுணர்வுபற்றுவார்பற்றவரை
நீத்திகழ்வரவர்கடிருவுளநிகழ்வையாராயார்
காத்திருப்பிகலிற்றறிஞர்கருவதற்காளாயினர். (கசரு)

யாதுபுரியினும்பொறுப்பதிசையரசர்க்கெனவிறைஞ்ச
பாதுபுரிகுதலெனவேந்தகன்றனுணவிருள்போ
யோதும்மருந்தவருழிஞர்னேதயமுற்றுமிருண்மைப்
போதுசிதைந்தணுபார்பொருந்தினள்செல்கிலயுதேவ.

கறைகெழுமாமணிமிடற்றார்கழல்சேவடிமலரின்
மறையவரின்றடைகின்றாரெனப்பனமங்கலவார்த்தை
யறையுவரிநீருலகிலறிவிப்பனபோலெழுந்து
முறைமுறைமுன்றலைகறையின்மறைமுகந்தமுழங்கியசங்கம். (௧௪௭

ஆதித்தனெழுமமையத்தந்தணர்தந்தமிற்குழுமிச்
சாதித்தனமையைநீங்கிச்சாதித்தனமையணுகிப்
போதித்தாரணிதிணிதோட்புரவலற்குமரையெல்லாம்
பேதித்தாரணியமுறைப்புரிவித்தான்பெரிதுமென்றே. (௧௪௮)

ஏற்றவனையுறுந்தண்டமிழைத்திதுபோழ்தெல்லோரும்
வேற்றொருவன்புலத்தடைதலவியபெனவான்பொருனைதி
யா,பரொருதீரத்தடைந்தாரருந்தவரன்றடைகின்ற
பேறறினையோரந்திலர்வேதமபிதற்றியபிராந்தரெலாம். (௧௪௯).

முற்றுமருந்தவத்தினருமுறிதிரையாம்பிரவதியி
னுற்றனரவ்வுழியடர்ந்துநெருங்கமறையோரையுளந்
துற்றபுலப்பகையெனக்கண்டகன்றுசுடர்க்கோயில்புக்கார்
மற்றவர்கண்மருண்டுதிசைமயங்கிமறுகிடைநின்றார். (௧௫௦)

கங்கைபுனைவார்கோயிற்கலந்தகருவூர்த்தேவர்
பொங்கருள்கூர்சிவயோகம்புரிந்ததுமுறறியதேயோ
வங்கவரன்போதவமோவாதரமோயாதுகொல்லோ
தங்கைகொடுதிருவுருவைத்தழுவினாசரணடைந்தார். (௧௫௧)

படர்ந்தெழுதுந்துமியார்த்தபனிமலர்சிந்தினவானந்
திடந்தகடற்புவிகுழுமிக்கெழுமியதிசயம்விளைத்த
தொடர்ந்தமறையவர்துளங்கித்துகடீர்ந்தனாயவரை
யடர்ந்தனமென்றழுதுவிழியருவிசொரிதரநின்றார். (௧௫௨)

எங்குற்றீர்துகடீர்ந்தீரிதுதெரியாதிடரிழைத்தே
மங்குற்றோராகிலென்றேவருந்துமறையவர்தேறத்
தங்குற்றீர்கருவூரார்தமதுகுலமாதவினு
[illegible]குற்றுயிர்த்தெனநுவன்றவிசும்பிடைவாணி. (௧௫௩)

மறையுயிர்த்தாரழல்வேள்விவளர்ப்பவரும்மகிழ்தூங்கிக்
கறையணக்கர்கோதாருங்கணத்தர்மணிகுயிற்றுமறை
யறைகழற்றூண்மலரிலருச்சனையாற்றியாதிசைவத்
துறைகெழுமாகமச்சலதிதுளேர்துசுகோதயராஞர். (கருச)

வேறு.

அந்தணர்தொகுதிவாழ்கவானினந்தழைகமாரி
சந்ததம்பொழிகசைவந்தலையெடுத்திடுகவேந்த
ரிந்திரதருவினேங்கவெம்பிரானன்பர்சூழ்க
சிந்துவெண்டிரைநீர்ஞாலந்திருமகள்வளர்கமன்னே. (கருரு)

வெண்டிருநீறுபாரில்விளங்குகமிளிர்செவ்வேணி
யண்டர்சாயஞர்நாமவைந்தெழுத்தருளினேங்கப்
பண்டைநான்மறையுமாகமங்களும்படர்கவெங்குந்
தொண்டருந்தொண்டர்சாற்றப்புராணமுஞ்சூழ்ந்திலங்க. ()

ஞானதேசிகர்சீர்மல்கநாற்பெருங்கவிதைசூழ்க
தேனலர்ப்பொழில்சூழ்வஞ்சித்திருநகர்வளஞ்சிறக்க
வானவர்காதன்பூசைவளப்பெருந்திருவிளேங்க
தானமுஞ்சமயமாறுந்தலத்துளோர்யாரும்வாழ்க. (கருஎ)

கருவூர்த்தேவர்கதிபெறுசருக்கம்முற்றுப்பெற்றது.

ஆகசருக்கம் உக-க்கு திருவிருத்தம்-கக உக.

---

## கருவூர்ப்புராணம் முற்றிற்று.

மெய்கண்டதேவர்

மெல்லடிவாழ்க.

சிவஞானயோகிகள்திருவடிவாழ்க.

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

—o—

# கருவூர்ப்புராண வசனம்.

---

## காப்பு.

வஞ்சிவனத்தின்வளங் கூறுவாமதில்வாழ்
குஞ்சரத்தின்பாத முளங்கொண்டு.

---

## புராணவரலாறு.

கலைமாமதிசூடியகடவுள் கடல்சூழுலகத்திடையமருந்
தலமான்மியத்தையருணந்தி தம்பாலுணர்ந்தசனற்குமரன்
சொலவாங்கதுதேர்வியாசமுனி சூதர்க்குரைப்பவவர்வழிச்சேர்
பலமாமுனிவர்தொழுங்கருவூர்ப் பசுபதீசப்பெருமானே.

கருவூர்த்தலமான்மியமானது கிருபாசமுத்திரமாகிய திருநந்திதேவர் சனற்குமாரமகாரிஷிக்கும், அவர்வேதவியாசமுனிவருக்கும், அவர் சூதபுராணிகருக்குக் திருவாய்மலர்ந்தருளிய பதினெண்புராணங்களுள பிரமகைவருத்தமென்னு மகாபுராணத்திலே சிவக்ஷேத்திரகாண்டத்திலே நூற்றொன்பதாம் அத்தியாயத்திலே கூறப்பட்டுள்ளது.

---

இரண்டாவது,

## வராககிரிச்சருக்கம்.

மகவாயுயர்காசிபமுனிதன் மரபிலுதித்தவராகமுனி
மிகவேயோகசித்தியினை விரும்பிச்சிவபூசனையாற்றி
யிகலொன்றின்றிமுத்தியினை யெய்தும்வராககிரிச்சாரற்
பகலோனுநுழையாப்பொழிற் கருவூர்ப்பசுபதீசப்பெருமானே.

முனிபுங்கவராகிய சூதபுராணிகர் ஒருநாள்நைமிசாரணிய த்தை யடைந்தபொழுது சவுனகாதிமகாரிஷிகள் வந்தனவழி பாடுசெய்து வஞ்சுளாரணியமாகிய கருவூர்மான்மியத்தைமுன் னொருகாற்கேட்டு மமைவுபெற்றிலோம் மீட்டுந்திருவாய்மலர்ந் தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சூதபுராணிகர் சொல்வராயினர், வெண்கொற்றக்குடையினையுடைய சேரரா ஜனால் அரசுபுரியப்பட்டகொங்குநாட்டிலே கருவூர்,பேரூர்,அவி நாசி, பவானிகூடல், திருச்செங்கோடு, திருப்பாண்டிக் கொடு முடி,திருமுருகன்பூண்டி,வெஞ்சமாக்கூடல்,முதலியபலதலங் களும் தென்புறத்திலே வராககிரியென்னும் மலையுமிருக்கின் றன. அவற்றின்வளமைசொல்லுதற்கரியன. அம்மலையிடத்துப் பற்பலசித்தர்களும் முனிவர்களும் வசித்தலினாலும் சிவபெரு மான் திருக்கோவில்கொண்டெழுந்தருளி யிருத்தலினாலும் சி ரேட்டமுடைமைபெற்றது. அதன்வரலாறு சொல்லுதுங் கேட் பீர்களாக. காசிபகோத்திரத்திலே துறவறத்திற்சிறந்தவராகிய வராகமுனிவரென்பவர் ஒருவரிருந்தார். அவாசரியாபாதம் கிரி யாபாதங்களில் வல்லவராகிச் சிவயோகம்செய்தற்கு நல்லதல ம்நாடி இந்தக்கிரியைஅடுத்து வன்னிமரத்தருகில் சிவலிங்கமொ ன்றுதாபித்து பூசித்துவந்தார். சிவபெருமான் பிரசன்னராய் யாதுவேண்டுவதெனவினவ, பெருங்கருணைத்தடங்கடலே? உம துதிருவருளால் சரியைகிரியையென்னும் இரண்டுபாதங்களு முணர்ந்தேன். சிவயோகத்தைஅடியேனுக்கு அனுக்கிரகஞ்செய் தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச்சிவபெருமான் தி ருவுளங்கூர்ந்து வராகமுனிவனே? யோகமானது இயமம், நியம ம், ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியா னம், சமாதியென எட்டங்கங்களையுடையது. என்று அதன்விரி வையும் திருவாய்மலர்ந்தருளி இம்மலையானது யோககிரியாக ஆதியிலேயே படைக்கப்பட்டதாதலின் இதனிடத்து நீயோக சித்திபெற்றுமுத்தியடையக்கடவை.உனக்குயோகீசனென்னும் பெயரும்இம்மலைக்கு நீபூசித்தகாரணத்தால்வராககிரியென்னும் பெயரும் உண்டாவதாகவென்று அனுக்கிரகம்செய்து மறைந்

தருளினார். அவ்வாறே வராகமுனிவர் யோகேசராய் முத்தி பெற்றார். இம்மலையும் வராகமலையென்று வழங்கப்பட்டு வருகிறது.

---

## மூன்றாவது,
## ஆம்பிராவதிநதிச்சருக்கம்.

வேதம்பரசுங்கிரியிடத்துவிமலையருளேயுருவாகிச்
சூதநதியாம்பிரநதியென்றுயர்பேர்சூடித்தோய்ந்தவர்தம்
மேதமகற்றிமருங்கிருபாலெண்ணில்சிவத்தானம்மருவிப்
பாதம்பணியக்கிருபைசெயும்பசுபதிசப்பெருமானே.

ஓர்காலத்திலே மழைபெய்யாதுமன்னுயிர்கள் வருந்தும் பொழுது சிவபெருமான் உமாதேவியைநோக்கி நீவராககிரியைச்சூழ்ந்த நாடனைத்து முய்யும்பொருட்டு அக்கிரியினின்றும் உனதுகலையை நதியுருவமாகவரும்படிசெய்யக் கடவாயென்று ஞ்ஞாபிக்க, அவ்வண்ணமே உலகமாதாவாகிய உமாதேவியானவர் வராககிரியினின்றும தமது அருளையே நதியுருவாக ஒழுகச் செய்தனர். அந்நதியினிருமருங்கிலும் பல்லாயிரம் முனிவர்கள் மாவிருக்கமாகவிருந்து தவஞ்செய்தார்கள். அந்நதி அமமையின்திருவருளேயுருவாய்வருதலின் அம்பாநதியென்றும், ஆம்பிரமென்கிற பெயரையுடைய மாமரங்களினது நிழலில்வருதலின் ஆம்பிரமாநதியென்றும்பெயர்பெறும். காமதேனுவானது கருவூரையடைந்து பூசிப்பதற்குமுன்னர் இந்நதியையடைந்து இருமருங்கிலுமுள்ள பலசிவத்தானங்களைப்பூசித்தபடியால் இந்நதிக்குப் பொருனையென்னும் பெயரும்உளது. அந்நதிவராககிரியினின்று மிழிந்து இருகரையிலுமுள்ள பலசிவஸ்தலங்களையும் வணங்கிக் காவேரிநதியுடனே திருமுக்கூடல்என்னு மிடத்திற்கலத்தலைச்செய்யும். அக்கதிக்கரையில் வராகமுனிவராற்பூசிக்கப்பட்ட யோகலிங்கமென்னுந் தலமுதலாக திருமுக்கூடல்வீறுகத்,தேவர்கள்,இருடிகள், சித்தர்கள், வாலகில்லியரென்னும் இயக்கர்கள்; விநாயகசுப்பிரமண்யாகள்; பிரமவிட்டுணுக்கள்

முதலாயினோர்பூசித்த சிவசிறந்ததலங்களுள்ளன. அவற்றுள் சந்திரன் குருபத்தினிசாபந்தொலையப்பூசித்த சோமேசலிங்கமும், அநந்தகணேசனென்னும் ஒருஇலிங்கமும், வெண்மணலைக்குவித்து அகத்தியர்பூசித்த அகத்தியலிங்கமும், காஞ்சேசன் என்னும் இலிங்கமும, அடுத்தபிரம்புவனத்திலே தெய்வீகஆரிஷலிங்கங்களும், கொங்கணேசமென்னுந்தலத்தில் கொங்கணேச்சுரனென்னும் இலிங்கமும், காளீசனென்னுமிலிங்கமும், தாரகாகணங்களாற்பூசிக்கப்பட்ட தாரகேச்சுரனென்னுமிலிங்கமும், வீரபத்திரர்பூசித்த வீரேசனென்னும் இலிங்கமும், விசாலலிங்கம், காட்சிலிங்கம், திலகுலேச்சுரலிங்கம் முதலியவிலிங்கங்களுஞ்சிறந்தன. அவற்றுள்ளும் ஆதிமாபுரமாகிய கருவூரிலே பஞ்சலிலிங்கங்களென்னும் ஐந்துஇலிங்கங்கள் மிகச்சிறந்தன.

அவைவருமாறு:—

க. புற்றிடங்கொண்டெழுந்தருளிய ஆதிநாயகரென்னும் பசுபதிலிங்கம்.

உ. அதன்கீழ்பால் கோடீச்சுரலிங்கம்.

ங. அதன்கீழ்பால் கயிலாயநாதலிங்கம்.

ச. அதன்தெற்கே கரியமாலீசனென்னுமிலிங்கம்.

ரு. அதற்கு அக்கினிதிக்கில் ஆம்பிராநதிக்கரையில் வஞ்சுளேச்சுரலிங்கம், என்பனவைகளே.

அன்றியும் வஞ்சுளேச்சுரத்துக்குக்கிழக்கே அரசவனத்திலே திருமால்பள்ளிகொண்டருளியதலமும் ஒன்றுளது. அந்நதி காவேரிநதியுடன்கலக்குமிடத்திலே மணியீசனென்னும் சிறந்த லிங்கமொன்றிருக்கின்றது. இவ்வாம்பிரமாநதியொன்று, மணிமுத்தாநதியொன்று, காவேரிநதியொன்று, ஆகமூன்றுநதிகளும் ஒருங்குகூடுதலாலவ்விடத்திற்குத் திருமுக்கூடலென்று பெயர். இத்தன்மையாகிய ஆம்பிராநதியின் வளங்களையும் அதிலாடினோர்பெறும்பேற்றையும் இனைத்தெனக்கூறுதலரிது.

## நான்காகாவது,

## சராசரச்சருக்கம்.

மேலாம்பிரமன்றுயில்கூரவிளிந்தசரத்தோடசரமெலாம்
மாலாய்ப்படைக்கக்கருதிவெண்ணெய்வரையின்பாங்கர்ச்சுரபி
தவம், கோலாநின்றுசராசரத்தின்சுவடுநோக்கிச்சிருட்டிசெய்
து, பாலாற்பூசைபுரிந்தேத்தும்பசுபதீசப்பெருமானே.

உலகத்தின்கண்ணுள்ள நால்வகையோனி யெழுவகைத் தோற்றமாகிய சராசரங்களனைத்தும் பிரமதேவரானவர் துயில் கூரும்இரவில் அந்தரப்பிரளயத்தினு லழிவுபெற்றன. பிரம தேவர் துயிலொழிந்து சராசரங்களின் விளிவைநோக்கிப் பெரி தும்வருந்தி முன்போலமறுபடியும்படைக்கத்தொடங்கினுர். அத் தொழில்கைகூடாது இடர்ப்பட்டு அதனைவிடுத்துக் கைலையங் கிரியிலே சிவபிரானைநோக்கித்தவஞ்செய்தனர். அதன்முன்ன ரே சிவபெருமான்சிருட்டியை நினைந்தபொழுது காமதேனுவந் துவணங்கியது. அதனைநோக்கி நீபூமியின்கண்சென்றுபிரமதே வனைப்போல் சிருட்டித்தொழில்செய்யக்கடவாயென்று ஆஞ் ஞாபித்தவிடைகொடுத்தனுப்பினுர். பின்னர்ப்பிரமதேவருக்குப் பிரசன்னராகப்பிரமதேவரானவர் அடியேன்துயின்றமையால் சராசரங்கள்அழிந்துபோயின. அதனுற்பாவமுமறதியும் சம்ப வித்தன. அப்பாவம் நீரும்பொருட்டுஞ் சிருட்டித்தொழில்கை வரும்பொருட்டுந் தேவரீரைஅருச்சிக்க விரும்புகிறேனென்று விண்ணப்பஞ்செய்ய, எம்பெருமான் அங்ஙனமே நீ ஆம்பிரா நதிக்குவடகரையிலுள்ள கருவூரையடைந்து அங்குநம்மைபூசிப் பாயாகவென்று அருளிச்செய்தார். அவர்பூசித்தவாறும சிருட்டி பெற்றவாறும் பின்னர்க்கூறப்படும் அதுநிற்க. முன்விடைபெ ற்றகாமதேனுவானது பூலோகத்திலே தென்றிசையையடைந்து தவஞ்செய்யநல்லதலம்யாதென்று நாடுங்காலையில் நாரதமா முனிவரானவர் அதனையெதிர்ந்து, தேனுவே? ஆம்பிராநதிக்கரை யில் வஞ்சுளாரணியமொன்றுள்ளது. அங்குச்சென்றுதவம்புரி

வையாயின் இஷ்டசித்தியெளிதிற்பெறுவாயெனக் காமதேனு வராககிரியையடுத்து அங்கிருந்தும்ஆம்பிராநதிக்கரையிலுள்ள பலதலங்களையும்வணங்கி வஞ்சிவனத்தைக்கண்ணுற்று நாரதர் மொழிப்படி தவஞ்செய்துகொண்டிருந்தது. ஓர் நாள், காமதேனுவே! இந்தவஞ்சிவனத்திலே ஒருபுற்றினிடத்திலே பாதலத்தினின்றுந்தோன்றிய ஆதிலிங்கமென்னும் ஒருமகாலிங்கம் இருக்கின்றது. அதனைப்பூசிப்பாயாகவென்று ஆகாயத்தினின்றும் ஒருவாக்குளெழுந்தது. அவ்வாக்கின்படியேசென்று புற்றினிடத்தெழுந் தருளியிருக்கும் சிவலிங்கப் பெருமானைக்கண்டு அத்தியந்தபரவசமடைந்து அந்தமகாலிங்கத்துக்கு பால்முதலியஉபகரணங்களால் அபிடேகநைவேத்தியமுதலியனசெய்து வசித்துக்கொண்டிருந்தது. பின்னர் ஓர்நாள் சிவலிங்கப்பெருமானது திருமுடியின்வாமபாகததிலே காமதேனுவினது காற்குளம்புபட்டு உதிரஞ்சொரிந்தது. அதனைநோக்கி, ஆ, கெட்டேன் இதற்கென்செய்வேனென வருந்தாநிற்புழி, சிவபெருமான் பசுவே! உன்மீதுபிழையிலது அதுநமது திருவிளையாட்டானிகழ்ந்ததாதலின் அதற்காகநீவருந்தற்க. இன்றுமுதல்நீபூசித்தகாரணத்தால எம்மைப்பசுபதிநாயகனென்று முப்புவனங்களும் போற்றக்கடவன. நாம்இருக்குமிவ்விடத்திற்குத் தென்கீழ்த்திசையிலே சராசரங்களின் அடிச்சுவடுகள் அடையாளங்களாகவைக்கப்பட்டிருக்கின்றன. பிரளயங்கள்தோறும் பிரமதேவன்முதலாயினோர் படைத்தற்றொழிலை நமதனுக்கிரகத்தினால் அவ்வடயாளங்களைநோக்கியே செய்யாநிற்பர். நீயுமங்குச்சென்று நம்மைச்சிந்தித்தால் படைக்குமாற்றல் பெறுவாய் என்று அருளிச்செய்து மறைந்தனர். காமதேனு அவ்வாறே தென்கீழ்த்திசையையடைந்து சராசரங்களின் அடிச்சுவடுகளிருத்தலைநோக்கிச் சிவத்தியானஞ்செய்து படைக்கத் தொடங்கிற்று. சராசரங்களனைத்தும் பழமைபோலவே படைக்கப்பட்டன. அவைகளின்புசிப்புநிமித்தம்வடதிசையிலேவெண்ணெய்யென்று ஒருமலையையுருக்குத்து அதன்கீழ்த்திசையிலே தேனு

தீர்த்தமென்று ஒருதீர்த்தமகழ்ந்து சிலகாலம்சிவார்ச்சனை செய்துகொண்டிருந்து பின்னர் சுவர்க்கலோகஞ்சென்றது. வெண்ணெய்மலையானது தரிசிப்போர்க்கு இட்டசித்திகளைவேண்டுவோர் வேண்டியவண்ணங் கொடுப்பதுமன்றி உட்டினகாலத்தும்தன்னைனென்றிருத்தலால் அதன்பெயரை விளக்கும்.

---

ஐந்தாவது,

## அலங்காரவதிச்சருக்கம்.

மண்ணின்மீதுசிவதலத்துள்வஞ்சிவனமேசிறந்ததென
வண்ணலருளவலங்காரவதிகேட்டிந்தத்தலனடைந்து
பெண்ணினல்லார்தம்மோடும்பிரசமலர்தூய்ச்சிவபூசை
பண்ணவவட்குப்பாகமருள்பசுபதீசப்பெருமானே.

கைலையங்கிரியிலே எழுந்தருளியிருந்த எம்பெருமானைஎம்பிராட்டியெழுந்துவணங்கிச் சர்வலோகைகநாயகரே பலவிதமாகிய தவங்களினும் உயர்ந்ததாய் செய்தற்கெளியதாயரியபலனைத்தரத்தக்கதவம்யாது, அதனைத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சிவபெருமான் எல்லாத்தவங்களினுஞ்சிறந்தது சிவார்ச்சனைசெய்தலொன்றேயாமென்றருளிச்செய்தனர். மகாதேவியார் மீட்டும்வணங்கி அடியாள் சிவபூசைசெய்தல்வேண்டும். எந்தவிடத்திற்செய்வது விசேடமாகுமென்பதனையும், அருளிச்செய்யவேண்டுமென்றிரப்பமகாதேவரானவர் வஞ்சுளாரணியஞ்சூழ்ந்தகருவூரே அதற்குத்தக்கதலமென்று அனுக்கிரகஞ்செய்தருளினர். உமாதேவியார் வணங்கிவிடைபெற்று இலக்குமி சரஸ்வதிமுதலிய சேடியர்கள்சூழ அலங்காரவதியென்னும் பெயரோடு பூலோகத்தை யடைந்து வஞ்சுளாரணியத்திலேசென்று ஆம்பிராவதிநதியிலேவிதிப்படிஸ்நானஞ்செய்து திருநீறுஅக்கமணிமுதலிய சிவசின்னந்தரித்து ஆகமவிதிவழாமற்பசுபதிநாயகரைப்பூசித்தார். இலக்குமிசரஸ்வதிமுதலிய தேவமாதர்களும் பூசித்தார்கள். சிவபெருமான்

அலங்காரவதியார்பூசையையுவந்து அவருக்குப்பிரியாவரந் தந்தருளி யுடனிருத்தினர். மற்றதேவமாதர்களுக்கும் அவரவர் விரும்பியவரங்களைக் கொடுத்தருளினர்.

---

## ஆறுவது,

## பிரமச்சருக்கம்.

*வையம்படைக்குமாற்றலினை மறந்துமலர்மெல்லணைக்கிழவன் துய்யவரமபெறவொருகேள்விதொடங்கிச்சொல்லின் கிழத்திமணஞ், செய்யச்சிருட்டிதந்தவனசெய்தீர்த்தமுவந்துபடியுனர்க்குப், பையப்பழுக்குமருட்கனியேபசுபதீசபெருமானே.*

முன்னாககூறியபடி பிரமதேவரானவர் ஸ்ரீகயிலாயத்திலே சிவபெருமானிடத்திலே உத்தரவுபெற்றபின்னர்க்கருவூரையடைந்தார. பாவங்களுககுப் பகையாகவொழுகும் ஆமபிராநதியிலேமூழ்கி விபூதியுருத்திராக்கமுதலிய சின்னங்கள்தாங்கி ஆதிலிங்கப்பெருமானைமெய்யன்போடுவிதிப்படி பூசித்துக்கண்களானந்தவருவிசொரிய மெய்யுரோமாஞசிதங்கொள்ளநாத்தழுதழுப்பநின்று பலவாறுபுகழ்ந்து தோத்திரித்தனர். சிவபெருமானெதிரோதோனறி வேணடியவரங் கேட்பாயாகவென்று திருவுளம்பற்றப்பிரமதேவரானவர் ஆண்டவனே? யான்றுயின்றகாலையில் சராசரங்கள் அழிந்தமையானேர்ந்தபாவமும்,யானேமுதல்வனென்றுஎன்னுள்ளத்தேயெழும்புமகாதையும், படைத்தற்றொழிலை ஒவ்வோர்காலததில்மறக்கும்பொச்சாப்பும், நீக்கியருளவேண்டுமென்று பிரார்த்திக்கச்சிவபெருமான் அங்ஙனமேவரந்தநதருளி மற்றும்பிரமதேவரை நோக்கி இவ்விடத்து நீயொரு வேள்விபுரிந்து கலைமாதைமணந்து படைத்தற்றொழிலைச்செய்திருந்து பின்னாளின்னுலக மடைவாயாகவென்று பணித்துமறைந்தருளினர். பிரமதேவர் அப்பணிதலைமேற் கொண்டு ஆம்பிராநதிக்குவடக்கே வஞ்சுளேச்சுரத்துக்குக் கிழக்கே பசுபதீச்சுரத்துக்குத்தெற்கே பிரமதீர்த்தமென்று தம்பெயரா

